# இனவரைவியல் நோக்கில்
# சங்க அகத்திணைப் பாடல்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**அ.ஆனந்தி**
பதிவு எண் : 0557

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா


**திசம்பர் - 2019**

**முனைவர் சு.இராசாராம்**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள் :

## நெறியாளர் சான்றிதழ்

**"இனவரைவியல் நோக்கில் சங்க அகத்திணைப் பாடல்கள்"** என்னும் தலைப்பில் அ.ஆனந்தி அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்த பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(முனைவர் சு.இராசாராம்)

நெறியாளர்

**அ.ஆனந்தி** (பதிவு எண்.0557)
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**“““இனவரைவியல் நோக்கில் சங்க அகத்திணைப் பாடல்கள்”** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

(அ.ஆனந்தி)
ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம்

**முனைவர் சு.இராசாராம்**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

## நன்றியுரை

**“இனவரைவியல் நோக்கில் சங்க அகத்திணைப் பாடல்கள்”** என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், அதன் நிறுவுநர் அழகப்பருக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **பேரா. முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்விற்கு வழிகாட்டியாக இருந்து இவ்வாய்வேடு சிறப்பாக அமையத் துணைபுரிந்த எனது நெறியாளர் **முனைவர் சு.இராசாராம்** அவர்களுக்கும் ஆய்வுத் தொடர்பாக எனக்குப் பல நூல்களையும் தந்து சிறப்பான வழிமுறைகளைக் காட்டிய முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சங்க இலக்கியத்தில ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்ற ஆர்வம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்த முனைவர் இரா.இலட்சாராமன் ஐயா அவர்களுக்கும் புலவர் இராம.வேதய்யா பிள்ளை அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

நான் நன்னிலை பெற்று உயரவும், ஆய்வினைச் செம்மையாக முடிப்பதற்கும் உதவிய என் பெற்றோர் க.அய்யப்பன், அ.சரோஜா என் சகோதரிகள் அ.விஜயலெட்சுமி, அ.இராஜேஸ்வரி, சகோதரர்கள் அ.வேல்முருகன், நா.முத்து அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினைச் செவ்வனே அச்சாக்கம் செய்து தந்த தோழா பிரிண்டர்ஸ் நிறுவனத்தார்க்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 1-5 |
| ஒன்று | இனவரைவியல் வரையறையும் திணைசார் மக்களினமும் | 6-91 |
| இரண்டு | சங்க அகத்திணைப்பாடல்களில் தொழில்சார் மக்களினம் | 92-154 |
| மூன்று | சங்க அகத்திணைப்பாடல்களில் பண்பாடுசார் மக்களினம் | 155-213 |
| நான்கு | இனக்குழு ஒப்பாய்வியல் நோக்கில் சங்க அகத்திணைப்பாடல்கள் | 214-254 |
| | முடிவுரை | 260 |
| | துணைநூற்பட்டியல் | 261-266 |

## முன்னுரை

தமிழ் இலக்கியங்கள் தமிழர் வாழ்வியலைக் கால ஓட்டத்தின் பின்னணியோடு பிரதிபலிப்பவையாக விளங்குகின்றன. இத்தமிழிலக்கியங்களுள் மிகப்பழமை வாய்ந்ததாகக் கருதப்படும் சங்க இலக்கியங்கள் சங்கத்தமிழரின் வாழ்வியல் பண்பாட்டுக் கூறுகளை எடுத்துரைப்பதில் சிறப்பான பங்கு வகிக்கின்றன. இவ்விலக்கியப் பனுவல்களை ஆய்வு செய்வதன் மூலம் அக்கால மக்களின் நிலப்பின்புலம், தொழில்கள், வாழ்க்கை முறைகள், நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், பண்பாடு, அரசியல், பொருளாதாரம் ஆகியவற்றை அறிந்துகொள்ள முடிகிறது. அவ்வகையில் இனவரைவியல் நோக்கில் சங்க இலக்கியப் பனுவல்களின்வழிச் சங்க கால மக்களின் வாழ்க்கை முறையையும் தமிழர் தம் பண்பாட்டின் பரிணாம வளர்ச்சியையும் ஆய்ந்து வெளிப்படுத்துவது இன்றியமையாததாகும்.

### ஆய்வுத் தலைப்பு

**"இனவரைவியல் நோக்கில் சங்க அகத்திணைப் பாடல்கள்"** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

### ஆய்வுக் கருதுகோள்

உலக உயிரினங்கள் அனைத்தின் தேவையும் அடிப்படையில் ஒன்று. ஆனால் அத்தேவைகளை நிறைவு செய்து கொள்வதில் உயிரினங்களுக்குள் வேறுபாடுகள் உண்டு. அவ்வாறே மனிதன் இயற்கையுடன் கொள்ளும் நெருக்கத்தினால் விளையும் ஒன்று பண்பாடாகும். இப்பண்பாடு மனிதனுக்கு மனிதன் சமூகத்திற்குச் சமூகம் குழுவுக்குக் குழு வேறுபடும். சங்க அகப்பாடல்கள் வெவ்வேறு சூழல்கள் குறித்து வெவ்வேறு காலக்கட்டங்களில் வெவ்வேறு புலவர்களால் பாடப்பட்டிருப்பினும் அவற்றை ஒட்டுமொத்தமாக இனவரைவியல் கொள்கைசார் பார்வையோடு நோக்கும்போது ஒரு முழுமையான தமிழின மக்களின் இனக்குழு வாழ்வியலை அறிய முடியும். இம்மக்களின் பண்பாட்டைச் சங்க இலக்கியத்தின் அகத்திணைப்பாடல்கள்வழி இனவரைவியல் நோக்கில் ஆராய்ந்து, இனக்குழு ஒப்பாய்வியல் செய்து, தனித்தன்மை வாய்ந்த

சிறப்பு மிக்க பண்பாட்டின் வேறுபாட்டிற்கு அவர்கள் வாழ்ந்த நிலவமைப்பே இன்றியமையாத காரணமாகும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### ஆய்வு நோக்கம்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைக்குரிய மக்கள் வாழ்ந்த புவிச்சூழல், ஆரம்ப காலத் தொழில்கள், தொழில் சார்ந்த வாழ்க்கை முறைகள், பொருளாதார நிலை, ஐந்திணைக்குரிய இனக்குழுவினரிடையே வேறுபடும் சிறப்புப் பண்பாட்டுக் கூறுகள், அப்பண்பாட்டின் வேறுபாட்டிற்கான காரணங்கள் ஆகியவற்றை ஒப்பாய்வியல் முறையில் ஆராய்ந்து விளக்க முற்படுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

### ஆய்வு முன்னோடிகள்

சீ.பக்தவத்சலபாரதியின் 'பண்பாட்டு மானிடவியல்' (1990). 'தமிழர் மானிடவியல் (2002), 'மானிடவியல் கோட்பாடுகள் (2011) ஆகிய நூல்களும், ஞா.ஸ்டீபனின் தொல்காப்பியமும் இனவரைவியல் கவிதையியலும் (2010) என்ற நூலும் ஆ.சிவசுப்பிரமணியனின் 'இனவரைவியலும் தமிழ் நாவலும்' (2009) என்ற நூலும், ஆ.தனஞ்செயனின் 'சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும்' (2010) என்ற நூலும், பெ.மாதையனின் 'சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்' (2006) என்ற நூலும் இனவரைவியல் குறித்த ஆய்வுக்கு முன்னோடிகளாக விளங்குகின்றன.

### ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை நூல்களில் அகநூல்களாக விளங்குகின்ற நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை ஆகிய நூல்களிலுள்ள ஐந்திணைக்குரிய அகத்திணைப் பாடல்கள் மற்றும் அகமும் புறமும் கலந்த நூலாகிய பரிபாடலில் வையை பாடல்கள் ஆகியன ஆய்வின் எல்லையாக அமைகின்றன.

### ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கியமான எட்டுத்தொகையில் அகத்திணையைப் பாடும்நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை மற்றும்

வையை பாடல்கள்ஆகியன ஆய்வு மூலங்களாகக் கொள்ளப்பெறுகின்றன. இவை அனைத்தும் முதன்மைச் சான்றுகளாக விளங்குகின்றன. தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்களும், சங்க இலக்கியங்கள் தொடர்பாக வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், கலைக் களஞ்சியம், வாழ்வியல் களஞ்சியம், நிகண்டுகள் முதலானவையும்,இனவரைவியல் கோட்பாடுகளை எடுத்துரைத்து வெளிவந்த நூல்களும்,துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

**ஆய்வுச் சிக்கல்**

சங்க இலக்கியப் புலவர்கள் தாம் கண்ட முறையில் செய்திகளை மிகைப்படுத்தியோ, குறைப்படுத்தியோ தாம் காண விழைந்த வகையில் சித்திரித்திருக்கிறார்கள். அவ்வகையில் சங்ககால மக்களைப் பற்றிய செய்திகள் சார்பு நிலைத் தரவுகளாக உள்ளன. எனவே சமூகப் பொருளாதார அரசியல் பண்பாட்டுப் பின்னணியை அறிதலில் சிக்கல்கள் உள்ளன. இவர்களைப் பற்றிய நேரடியான கல்வெட்டுகளோ, வரலாற்றுச் சான்றுகளோ இல்லை. சங்க இலக்கியச் சான்றுகள் மட்டுமே முதன்மை ஆதாரமாக உள்ளன. அவ்வகையில் உண்மை நிலையை உய்த்து உணர்தல் என்பது சிக்கலானதாகும்.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க கால மக்களின் வாழ்க்கை நிலைத் தரவுகளைப் பெற சமூகவியல் (Sociology), மானிடவியல் (Anthropology), இனவரைவியல் (Ethnography), இனக்குழு ஒப்பாய்வியல் (Ethnology) ஆகியவற்றின் கொள்கைசார் அணுகுமுறைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆய்வுச் சிக்கல்களையும் முடிவுகளையும் தனித்தனியே விளக்குவதற்குப் பகுப்பு முறை மற்றும் விளக்க முறைத் திறனாய்வும் (Analytical and descriptive method) பயன்படுத்தப்பட்டுள்ளன. ஐந்திணைக்குரிய பண்பாட்டை வேறுபடுத்தியும் ஒற்றுமைப்படுத்தியும் காட்டும் இடத்தில் ஒப்பியல் ஆய்வு முறையும் (Comparative method) பயன்படுத்தப்பட்டுள்ளது.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டு அமைந்துள்ளது. அவையான,

1) இனவரைவியல் வரையறையும் திணைசார் மக்களினமும்
2) சங்க அகத்திணைப்பாடல்களில் தொழில்சார் மக்களினம்
3) சங்க அகத்திணைப்பாடல்களில் பண்பாடுசார் மக்களினம்
4) இனக்குழு ஒப்பாய்வியல் நோக்கில் சங்க அகத்திணைப்பாடல்கள்

என்பனவாகும்.

**இயல்விளக்கங்கள்**

முன்னுரையில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வுக் கருதுகோள், ஆய்வு நோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வுச் சிக்கல், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுப் பகுப்பு, இயல் விளக்கங்கள் ஆகியன இடம் பெற்றுள்ளன.

**இனவரைவியல் - வரையறையும் திணைசார் மக்களினமும்** என்பது முதல் இயலாகும். இதில் சமூகம் பற்றிய விளக்கம், மானிடவியல் வரையறை, இதன் வகைகள், இனவரைவியல் விளக்கம், அடிப்படை நெறி, தொல்காப்பியம் காட்டும் ஐந்திணைக் கோட்பாடு, இனவரைவியல் கோட்பாடு இவற்றுக்குள் உள்ள தொடர்பு ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் அகத்திணையியலில் இடம் பெறும் சில நூற்பாக்கள் இனவரைவியல் செய்திகளுக்கும் இலக்கியத்திற்கும் உள்ள உறவை மிகத் தெளிவாகச் சுட்டுகின்றன. முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று அகப்பொருளைத் தொல்காப்பியர் முத்திறப்படுத்துகிறார். அவற்றுள் தொல்காப்பியர் குறிப்பிடும் முதற்பொருள் பற்றிய நூற்பாவில் இனவரைவியல் கூறுகளான புவிச்சூழல், சுற்றுச்சூழல், காலநிலை என்பன அடங்கியுள்ளன. ஐந்திணையின் சூழ்நிலை அமைப்பு அத்திணையில் வாழ்ந்த இனக்குழுச் சமுதாய மக்கள், அவர்களுக்கு வழங்கிய பெயர்கள், அவர்களின் திணைச்சார்ந்த விளையாட்டுகள், ஒப்பனை முறை, வாழ்வின் இயல்புகள் ஆகியவை சங்க இலக்கியத்தின் அகத்திணைப் பாடல்கள் வழி விளக்கப்பெற்றுள்ளன.

**சங்க அகத்திணைப்பாடல்களில் தொழில்சார் மக்களினம்** என்பது இரண்டாவது இயலாகும். இவ்வியலில் ஐந்திணையைச் சார்ந்த இனக்குழு மக்களின் தொழில்களும் அத்தொழிலை மேற்கொள்ள வேண்டிய அடிப்படைக் காரண,காரியங்களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. நிலம் சார்ந்த தொழில்களான வேட்டையாடுதல், மீன்பிடித்தல், உப்புவிளைவித்தல், ஆநிரை மேய்த்தல், புன்செய் வேளாண்மை, நன்செய் வேளாண்மை, ஆறலைத்தல் ஆகியனவும் நிலம் சாரா பிறதொழில்களான மட்பாண்டத்தொழில், சலவைத்தொழில் போன்றவையும்விளக்கப்பெற்றுள்ளன.

**சங்க அகத்திணைப்பாடல்களில் பண்பாடுசார் மக்களினம்** என்பது மூன்றாவது இயலாகும். இவ்வியலில் ஒவ்வொரு திணைக்குமுரிய சிறப்புமிக்க தனித்தன்மை வாய்ந்த பண்பாடுகள் இனங்காணப்பட்டுள்ளன. அதாவது, ஒவ்வொரு திணை மக்களுக்குமுரிய திருமணமுறை, வாழ்வியற் சடங்குகள், பண்பாட்டு வயமாக்க முறை (Enculturnation), மரபுசார் சடங்குகள், சமய நம்பிக்கைகள், மந்திரம், வழக்காறுகள், விழாக்கள், இசை ஆகியவை மானிடவியலாளர்கள் கொள்கையின் அடிப்படையில் ஆராயப்பெற்றுள்ளன.

**இனக்குழு ஒப்பாய்வியல் நோக்கில் சங்க அகத்திணைப்பாடல்கள்** என்பது நான்காவது இயலாகும். இவ்வியலில் ஐந்திணைக்கும் உரிய ஒற்றுமை வேற்றுமைகள் ஆராயப்பட்டுள்ளன. ஒரு இனக்குழுவைப் பற்றி முழுமையாகத் தொகுக்கும் ‘இனக்குழுவியல்’ செய்திகள் அக்குழுவைப் பற்றி அறிய மட்டுமே உதவுகிறது. அவ்வாறு தனித்தனி இனக்குழுவைப் பற்றிய இனக்குழுவியல் ஆய்வுகள் ஏராளமாகச் செய்த பின்பு ஒவ்வொரு இனக்குழுவும் மற்றவையோடு ஒன்றுபட்டோ வேறுபட்டோ நிற்கும் நிலையினைக் காண முடியும்.அவ்வகையில் பண்பாட்டுப் பரவல் (Cultural Diffusion), பண்பாட்டுப்பேறு (Acculturation), ஓரினமாதல் (Assimilation) ஆகியவை ஆராய்ந்து எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் அந்தந்த இயலில் கண்டறிந்தவை தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. ஆய்வில் கண்ட முடிவுகள் தொகுக்கப்பெற்று அவை முடிவுரையாக இடம் பெற்றுள்ளன. இறுதியாக ஆய்விற்குத் துணைநின்ற நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன. பின்னிணைப்பில் ஆய்வுக்குறித்த அட்டவணைகள் இடம்பெற்றுள்ளன.

## இயல் ஒன்று

## இனவரைவியல் வரையறையும் திணைசார் மக்களினமும்

சங்க இலக்கியங்கள் அவற்றின் இலக்கிய நோக்கிற்கேற்ப, பண்டைக்கால மக்களின் வாழ்வியல் கூறுகளை ஆங்காங்கே எடுத்தியம்புகின்றன. ஆனால் இக்கூறுகள் அவற்றின் இயல்பில் முழுமையானவை அல்ல; பிசிறுகளாகவே தோன்றுகின்றன. இந்தப் பிசிறுகளைக் கொண்டு மக்கள் வாழ்க்கையின் எந்தவொரு கட்டத்தினுடைய முழுப்பரிமாணத்தையும் சரியான அர்த்தத்தில் இனம் காண முடியாது. மானிடவியலா் குறிப்பிடும் இனவரைவியல் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு தமிழ் இலக்கியங்களை நோக்கினால் அவற்றுள் சங்க இலக்கியங்கள் வரலாற்று இனவரைவியல்கள் என்னும் வகைமையில் அடங்கும். எனவே, சங்கஇலக்கியங்களை மானிடவியல் போன்ற சமூக அறிவியல் துறைகளின் உதவியோடு ஆய்வு செய்வதன் மூலம் சங்ககால மக்களின் வாழ்வியல் கூறுகளை மீட்டுருவாக்கம் செய்ய முடியும். அவ்வகையில் மானிடவியல் வரையறை, வளர்ச்சி, வகை, சமூகப் பண்பாட்டு மானிடவியல் விளக்கம், துணைத்துறைகள், இனவரைவியல் வரையறை, இனவரைவியலுக்கும் சங்க இலக்கியத்துக்கும் உள்ள தொடர்பு ஆகியவற்றை ஆராய்ந்து விளக்குவதாக இவ்வியல் அமைகிறது. சங்க காலத் தமிழரின் வாழ்வியல் கூறுகளைப் பற்றி அறிய வேண்டுமெனில் அவர்கள் வாழ்ந்த நிலத்தின் புவிச்சூழல் பற்றி அறிவது அவசியமாகும். சங்க கால மக்களின் புவிச்சூழலை அறிந்து கொள்வதற்குத் திணைக்கோட்பாடு பின்புலமாக உள்ளது. திணைக் கோட்பாட்டில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் அடிப்படையாகும். இவற்றுள் நிலமும் பொழுதும் முதற்பொருள் எனப்படும். இம்முதற்பொருட் புனைவு சங்க அகப்பாடல்களில் பெரிதும் காணப்படுகிறது. அவ்வகையில் ஒவ்வொரு திணைக்குரிய நிலத்தைச் சார்ந்த மக்களினத்தை இனவரைவியல் நோக்கில் ஆராய இயலும். அவ்வகையில் சங்ககாலத் தமிழக நில அமைப்பு, பருவநிலை, நிலபகுப்பும் மக்களினமும், அவர்களின் உறைவிடம், உணவுமுறை, புழுங்குபொருட்கள், அழகியற் சிந்தனை, பொழுதுபோக்குகள் ஆகியவற்றை விளக்குவதும் இவ்வியலின் நோக்கமாகும்.

**மானிடவியல் விளக்கம்**

மானிடவியல் மனித இனம் பற்றிய கல்வித்துறையாக விளங்குகிறது. மனித இனம் பற்றியும் மனித இனத்தின் முழுமையான செயல்பாடுகள் பற்றியும் ஆய்ந்து பார்க்கும் அறிவுத் தேடலின் வெளிப்பாடே மானிடவியல். இத்துறை மனித இனங்களுக்குள் நிலவும் வேறுபாடுகளின் அடிப்படைகளை உயிரியல் நிலையிலும் விவரிக்கிறது.

“மானிடவியல் என்ற சொல்லாக்கம் ஆங்கிலத்தில் வழங்கப்பெறும் ‘Anthropolgy’ என்னும் சொல்லுக்கு நேரானது. இச்சொல் ‘Anthropos’, ‘logos’ ஆகிய கிரேக்கச் சொற்களின் மூலங்களைப் பெற்றது. கிரேக்கத்தில் இச்சொற்கள் முறையே மனிதன் அறிவியல் என்னும் பொருளைச் சுட்டுகின்றன.”[1]

மனித இனங்கள் பற்றிய ஆய்வு மானிடவியலின் முக்கிய நோக்கமாகும். மானிடவியல் என்பது வயது, பால், காலம், புவியியல், சூழ்நிலை, பழக்கவழக்கம் ஆகிய வகைகளிலும் பிற வகைகளிலும் மனித இயல்பின் வரலாற்றை ஆராயும் விஞ்ஞானமாகும். தற்கால மக்கள், இனங்கள் அனைத்தினுடையதும் நெடுந்தொன்மைக் கால மூதாதையரான ஆதி மனிதர்களின் இயற்கைச் சூழ்நிலை வாழ்க்கை நிலைமைகளுக்கும் இனங்களின் தோற்றத்திற்குமிடையே உள்ள தொடர்பு மானிடவியலாகும். மனிதனைப் பற்றிய அறிவியல் சார்ந்த கருத்துக்கள், செயல்பாடு சார்ந்த நடத்தை முதலானவை மானிடவியலில் அடங்கும்.

**மானிடவியல் வரையறை**

- ❖ மனிதனின் வாழ்க்கையில் உள்ளம் சார்ந்த மற்றும் உயிரியல் சார்ந்த கருத்துக்களின் தோற்றம் பற்றி அறிவியல் முறையில் ஆய்வதே மானிடவியல் (The science of anthropology deals with the biological and mental manifestations of human life).[2]
- ❖ மனிதகுழுக்களின் நடத்தையையும் தரவுகளையும் மானிடவியல் என்பர் குரேயர்.[3]
- ❖ தனிப்பட்ட உடலமைப்பும் உளப்பாங்கினையும் கொண்ட ஒவ்வோர் இனத்தவரின் பண்பாட்டை அறியும் அறிவியல் மானிடவியல்.[4]
- ❖ மனிதனின் வாழ்வியல் கூறுகளைப் பற்றி நிகழ்கால, கடந்த காலத்தின் உயிரியல், பண்பாடு சார்ந்த வளர்ச்சியின் படிகளை அனைத்து

நிலைகளிலும் கவனம் செலுத்தி ஆராயும் துறை மானிடவியல் (Anthropology in centering its attention on man, takes into account all phases of man’s existence, biological and cultural past and present - Herskovits ).[5]

**மானிடவியலின் தோற்றமும் வளர்ச்சியும்**

மானிடவியல் சார்ந்த கருத்துக்களை முதன்முதலில் சிந்தித்தவர் செனோபேன்ஸ் (கி.மு.570-475). இவர் கிரேக்கநாட்டைச் சேர்ந்தவர். “செனோபேன்ஸ் (கி.மு.570–475), ஹேரோடாட்டஸ் (கி.மு.484–425), டெமோகிரிட்டஸ் (கி.மு.460– 370), புரொட்டோகோரஸ் (கி.மு.480–410), சாக்ரட்டீஸ் (கி.மு.470–399), பிளேட்டோ (கி.மு.427–347), அரிஸ்டாட்டில் (கி.மு.384-322), எப்பிக்கூரஸ் (கி.மு.341–270) ஆகியோர் அனைவரும் இன்றைய மானிடவியலோடு தொடர்புடைய பல கருத்துக்களை வெவ்வேறு நிலைகளில் சிந்தித்தவர்கள்”.[6]

மானிடவியல் தோன்றிய காலத்தை நான்காக வகைப்படுத்தியுள்ளார் பென்னிமேன். அவை,1.கருவுற்றகாலம் (Formulatory period– கி.பி.1835 க்கு முன்னர்), 2.ஒரு முகப்படுத்தப்பட்ட காலம் (Convergent period _ கி.பி.1835 முதல் - 1859 வரை), 3.ஆக்க நிலைக் காலம் (constructive period _ கி.பி.1859 முதல் – 1900 வரை), 4.வளர்ச்சியுற்ற காலம் (critical period _ கி.பி.1900 முதல் – 1935 வரை)என அறிய முடிகிறது. [7]

**மானிடவியலின் பிரிவுகள்**

மனிதனின் தோற்றம், தன்மை அவர்களுக்குள் உள்ள வேறுபாடுகள் முதலானவை குறித்துப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் எழுப்பப்பட்ட வினாக்களே இன்றைய மானிடவியலின் வளர்ச்சிக்குக் காரணமாய் அமைந்தன. மானிடவியலின் எல்லை பரந்துபட்டது. “சிலர் மனிதனின் உயிரியலை அறிவதில் ஈடுபடுகின்றனர். சிலர் மனிதனின் பண்பாட்டை அறிவதில் ஈடுபடுகின்றனர். வேறு சிலர் மனிதனின் முன்வரலாற்றுக் காலத்தை அறிவதில் ஈடுபடுகின்றனர். இதனடிப்படையில் மானிடவியலானது பின்வரும் நான்கு முதன்மையான பிரிவுகளாகப் பாகுபடுத்தப்படுகிறது.

1) உடல்சார் மானிடவியல் (physical anthropology)
2) தொல்லியல் (Archaeology)

3) மொழியியல் (Linguistics)

4) பண்பாட்டு மானிடவியல் (Cultural anthropology)"[8]என்பனவாகும்.

**உடல்சார் மானிடவியல்**

இது "உயர்பாலூட்டி நடத்தைகள் மனித படிமலர்ச்சியியல் (Evolution), குடித்தொகை மரபியல் என்பவை பற்றி ஆராய்கின்றது. இத்துறை சில சமயங்களில் உயிரியல் சார் மானிடவியல் எனவும் வழங்கப்படுகின்றது."[(9)]

**தொல்லியல்**

முன்வரலாற்றுக் காலத்தில் (Pre-historic Period) வாழ்ந்த மக்களின் வரலாற்றையும் வாழ்க்கை முறைகளையும் அவர்களின் பண்பாட்டில் ஏற்பட்ட மாற்றங்களையும் வளர்ச்சியையும் விளக்கும் அறிவியல் தொல்லியல் எனப்படும்."[(10)] இது மனித சமூகங்களின் பொருள்சார் எச்சங்களை ஆராய்கிறது.

**மொழிசார் மானிடவியல்**

மொழி பற்றி ஆராயும் அறிவியல் மொழியியல் எனப்படும். இது காலம், இடம் சார்ந்த நிலையில் மொழிகளின் வேறுபாடுகள், மொழியின் சமூகப் பயன்பாடு, மொழிப்பண்பாடு என்பவற்றுக்கிடையிலான தொடர்பு என்பவை பற்றி ஆய்வு செய்கின்றது.

**பண்பாட்டு மானிடவியல்**

இப்புவிப்பரப்பில் வாழும் மக்களினங்களின் விழுமியம் நிறைந்த பழக்க வழக்கங்களாகிய பண்பாடு தொடர்பாக ஆராயும் மானிடவியல் பண்பாட்டு மானிடவியல் எனப்படும். "சமூக மானிடவியல் அல்லது சமூகப் பண்பாட்டு மானிடவியல் எனவும் அழைக்கப்படும். பண்பாட்டு மானிடவியலாளரின் ஆய்வுக்களம், சமூக வலையமைப்பு, சமூக நடத்தைகள், உறவுமுறை வடிவங்கள், அரசியல் நம்பிக்கைகள், உற்பத்தி வடிவங்கள், பரிமாற்றம், நுகர்வு, ஏனைய பண்பாட்டு வெளிப்பாடுகள் என்பவற்றை உள்ளடக்கும்."[(11)]

**சமூகப் பண்பாட்டு மானிடவியல்**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் காலனிய அரசியல் தேவைகளுக்கேற்ப மானிடவியலின் வளர்ச்சி ஐரோப்பாவில் ஒரு வகையாகவும், புதிய உலகப் பகுதியாக உருவான அமெரிக்காவில் இதன் நிலை வேறு வகையாகவும் அமைந்தது. "இங்கிலாந்தில் காலனிய அரசுக்கு உதவும் வகையில் குடியேற்ற நாடுகளில் வாழ்ந்த திணைக்குடிகளின் 'சமுதாய அமைப்பை'(Social structure)

மட்டும் ஆராயும் சிறப்புக் கவனத்துடன் இத்துறை வளர்ச்சி பெற்றதால் இங்கிலாந்து மானிடவியலானது ‘சமூக மானிடவியல்’(Social Anthropology) எனப்பட்டது.”(12) சமுதாய மானிடவியலார் ஆங்கிலேய மானிடவியல் மரபைச் சேர்ந்தவர்கள் என்பதால் இவர்களின் துறை ஆங்கிலேய மானிடவியல் என்றும் வழங்கப்பெறும்.

“கொலம்பசால் கண்டுபிடிக்கப்பட்ட புதிய உலகப் பகுதியான அமெரிக்காவில் மானிடவியலின் வளர்ச்சியானது பண்பாடு என்பதை முழுமையாக எடுத்துக் கொண்டு ஆராயும் போக்கை ஏற்றுக் கொண்டதால் அமெரிக்க மானிடவியல் ‘பண்பாட்டு மானிடவியல்’ (Cultural Anthropology) என்று அடையாளம் பெற்றது.”(13)

**மானிடவியல் துறையின் துணைத்துறைகள்**

மானிடவியலின் முதன்மைத் துறைகள் உடல்சார் மானிடவியல், தொல்பொருளியல், மொழிசார் மானிடவியல், பண்பாட்டு மானிடவியல் என வகுக்கப்பட்டுள்ளது.

**உடல்சார் மானிடவியலின் துணைத்தறைகள்**

உடல்சார் மானிடவியலின் முதன்மையான உட்பிரிவுகளை “சீ.பக்தவத்சல பாரதி அவர்கள் பின்வருமாறு வரிசைப்படுத்துகிறார்.

1) படிமலர்ச்சியியல் (study of evolution)
2) உயர்பாலூட்டியியல் (Primatology)
3) தொல்லுயிரியல் (Palaeontology)
4) ஒப்பியல் உடற்கூற்றியல் (Comparative Anatomy)
5) எலும்பியலும் பல்லியலும் (Osteology and Odontology)
6) விலங்கின நடத்தையியல் (Ethnology)
7) இனவியல் (Raciology)
8) மானிட உடலளவையியல் (Anthropometry)
9) தோற்கூற்றியல் (Dermatoglyphics)
10) மனிதச் சூழலியல் (Human ecology)
11) குடித்தொகை மரபியல் (Population genetics)
12) குடித்தொகையியல் (Demography)

13) கருவியலும் உடலியங்கியலும் (Embryology and physiology)

14) உணவியல்சார் மானிடவியல் (Nutritional Anthropology)

15) மூலக்கூற்று உயிரியல் (Molecular biology)

16) இனமேம்பாட்டியல் (Eugenices)

17) மருத்துவ மானிடவியல் (Medical Anthropology)

18) பயன்முறை உடல்சார் மானிடவியல் (Applied physical Anthropology)”(14)

இவ்வாறு உடல்சார் மானிடவியல் படிமலர்ச்சி அடைந்து பலத்துறைகளில் மிளிர்கின்றது.

**தொல்பொருளியலின் துணைத்துறைகள்**

பல மில்லியன் ஆண்டுகளாக மனிதப் பண்பாடு தோன்றி வளர்ந்துள்ளது. எழுத்து வடிவத்தில் எழுதப்படாத இக்காலகட்டத்தின் வரலாற்றினை விளக்குவதில் தொல்லியலார் ஈடுபட்டுள்ளனர். மக்கள் விட்டுச் சென்ற பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டு அக்கால மக்களின் பண்பாட்டையும் வாழ்வியலையும் மீட்டுருவாக்கம் செய்கின்றனர். மண்ணுக்கடியில் பெரும்பாலும் மக்கள் பயன்படுத்திய தொழிற்கருவிகளும் இறந்த மக்களுக்குச் செய்யப்பட்ட ஈமச்சடங்குப் பொருள்களும், புதைபடிவங்களும் மட்பாண்டங்கள் அணிகலன்கள் போன்ற சில பொருள்களும் மட்டுமே கிடைக்கின்றன. அவைகளைக் கொண்டு அம்மக்கள் வாழ்ந்த காலம், சூழ்நிலை, தொழில், சமுதாய வாழ்க்கை, சமய நம்பிக்கைகள், கலை போன்ற பல்வேறு பண்பாட்டுக் கூறுகளை ஆராய்கின்றனர். இதனடிப்படையில் பின்வரும் துறைகள் தோன்றி வளர்ந்துள்ளன. அவையாவன,

1) கற்காலத் தொல்லியல் (Palaeolithic Archaeology)
2) கற்காலத்திற்கு மிக முந்திய காலத்தைச் சார்ந்த தொல்லியல் (Protohistoric Archaeology)
3) அறிவியல் சார்ந்த தொல்லியல் ( Scientific Archaeology)
4) கி.பி.1100 முதல் கி.பி.1500 வரையிலான வரலாற்றின் இடைக்காலத்திய தொல்லியல் (Medieval Archaeology)
5) பூகோள தொல்லியல் (Geoarchaeology)
6) ஆர்க்கீயா தாவரவியல்(Archaeobotany)
7) ஆர்க்கீயா விலங்கியல் (Archaeozoology)

8) தொல்பொருள் வேதியியல் மற்றும் கணினி அறிவியல் (Archaeological chemistry and computer Science)
9) மனிதத் தொல்லுயிரியல் (Palaeo Anthropology)
10) பாலியோன்டாலஜி (Palaeontology)
11) பாலியோபாலினாலஜி (Palaeopalynology)
12) கல்வெட்டியல்
13) நாணயவியல்
14) நடுகல்லியல்
15) சுவடியியல்"[15]

**மொழிசார் மானிடவியலின் துணைத்துறைகள்**

மானிடவியலாளர்கள் களப்பணியில் ஈடுபடும் பொழுது அம்மக்களிடம் உரையாடல் நிகழ்த்த மொழி இன்றியமையாத கருவியாகச் செயல்படுகிறது. அதுமட்டுமின்றி வழக்கொழிந்த மொழிசார் இனங்களையும், வரலாற்றினைப் பதிவு செய்யாமல் தம் இலக்கியங்களை மட்டும் விட்டுச் சென்ற இனங்களையும் அறிய வேண்டுமெனில் மொழி மிக இன்றியமையாத ஓர் ஆயுதமாக உருவெடுக்கிறது. ஆகையால் மானிடவியலாளர்கள் மொழிதொடர்பாக ஆய்வினை மேற்கொள்கின்றனர். அவ்வகையில்,

1) விளக்க முறை மொழியியல் (Synchronic Linguistics)
2) விளக்க மொழியியல் (Descriptive Linguistics)
3) வரலாற்று மொழியியல் (Historical Linguistics)
4) இனக்குழு மொழியியல் (Ethno Linguistics)
5) சமூக மொழியியல் (Socio Linguistics)"[16]

என மொழிசார் மானிடவியலின் உட்பிரிவுகள் அமைகின்றன.

**பண்பாட்டு மானிடவியலின் துணைத்துறைகள்**

மக்களின் பண்பாடு பற்றி ஆராய முற்பட்ட மானிடவியலாளர்கள் மனித இனத்தின் பண்பாட்டைப் பல கூறுகளாகப் பகுத்தனர். அதன் அடிப்படையில்,

1) பயன்பாட்டு மானிடவியல்
2) பண்பாட்டிடை ஆய்வு
3) இணையவெளி மானிடவியல்
4) அபிவிருத்தி மானிடவியல்

5) சூழல் மானிடவியல்

6) பொருளாதார மானிடவியல்

7) பழங்கால இசையியல்

8) மருத்துவ மானிடவியல்

9) உளவியல் மானிடவியல்

10) அரசியல் மானிடவியல்

11) சமய மானிடவியல் (Anthropology of religion)

12) புறப்பொருள் மானிடவியல் (Public Anthropology)

13) காட்சி மானிடவியல்

14) இனவரைவியல்

15) இனஒப்பாய்வியல்''[17]

எனப் பகுத்தனர்.அவ்வகையில் பண்பாட்டு மானிடவியலின் துணைத்துறைகளுள் ஒன்றாக இனவரைவியல் அமைகிறது. ''பண்பாட்டு மானிடவியலின் உட்பிரிவுகளில் தொல்லியல், மொழியியல் ஆகிய பிரிவுகள் சேர்க்கப்பட்டாலும் இதன் தலையாய பிரிவுகள் இனக்குழுவியல் (Ethnography), இனக்குழு ஒப்பாய்வியல் (Ethnology) ஆகிய இரண்டுமாகும்''[18] என்னும் கருத்து குறிப்பிடத்தக்கதாகும்.

**இனவரைவியல்**

சமுதாயப் பண்பாட்டு மானிடவியலுக்கு (Socaio Cultural Anthropology) அடித்தளமாகத் திகழ்வது இனவரைவியல் ஆகும். இனவரைவியல் என்னும் பொருளுடைய 'Ethnography' என்னும் ஆங்கிலச் சொல் 'Ethnos' 'Graphein' என்ற கிரேக்கச் சொல்லில் இருந்து பிறந்ததாகும்.

'Ethnos' என்பதற்கு இனம் (Race), மக்கள் (People), இனக்குழு (Ethnic group) என்னும் பொருள்கள் உள்ளன.'Graphein'என்பதற்கு எழுதுவது அல்லது வரைதல் (to write) என்னும் பொருள்கள் உள்ளன.[19] அவ்வகையில் இனவரைவியல் என்பது ஒரு தனிப்பட்ட இனக்குழு அல்லது மக்களைப் பற்றி எழுதுதல் என்னும் பொருளை உணர்த்துகிறது.

**இனம் வரையறை**

''வம்சம்(Descent), இரத்த உறவு, பரம்பரை (Hereditary) என்ற மூன்று அடிப்படையில் இணைந்திருக்கும் மக்கள் கூட்டத்தை இனம் என்று

குறிப்பிடலாம். இனத்தை வரையறை செய்வது உயிரியல் அடிப்படையான உடலியல் கூறுகளே. உடலியல் கூறுகள் உடல் தோற்றத்தாலும் ஓடும் குருதியாலும், பராம்பரியப் பழக்கவழக்கங்களாலும் முடிவு செய்யப்படுகின்றன. ஆக, சிக்கலான நீண்டகால பரிணாமப் போக்கில் மனிதகுலத்தில் உண்டான உயிரியல் பாகுபாடே இனம் என்பதாகும்.'' (20)

**இனவரைவியல் வரையறை**

இனவரைவியல் என்பது ஒரு தனிப்பட்ட அல்லது குறிப்பிட்ட இனக்குழு மக்களைப் பற்றி எழுதும் முழுமையான கண்ணோட்ட ஆய்வாகும். பண்பாட்டு ஆய்வுகளுக்கு இனவரைவியல் அடிப்படையாகும்.

**இனவரைவியல் நோக்கம்**

ஒரு குறிப்பிட்ட இனக்குழுவின் பண்பாட்டை விளக்கும் அறிவியல் சார்ந்த கலை இனவரைவியல் என்று அழைக்கப்படும். ''ஒரு குறிப்பிட்ட இனக்குழுவின் பண்பாட்டை ஆய்வுக்குட்படுத்தும் முறையியல் இனவரைவியல் ஆகும். பண்பாட்டை எழுத்து வடிவில் தொகுத்து அளிப்பதே இனவரைவியலின் நோக்கமாகும்'' (21)

இதனால் ஏதேனும் ஒரு பண்பாட்டைப் பற்றி எழுதப் பெற்ற வரைவு அல்லது வருணனை இனவரைவியல் என்று அழைப்படுவது தெளிவாகும்.

**இனவரைவியல் பரிமாணங்கள்**

இனவரைவியல் இரண்டு வகையான பரிமாணங்களைக் கொண்டது. ஒரு பக்கத்தில் அது ஒரு முறையியலாகவும் மறுபக்கத்தில் வரிவடிவமாக்கப் பெற்ற பண்பாடாகவும் அமைகின்றது. ''யாரைப் பற்றி எழுதுகிறோமோ அந்த மக்களின் வாழ்க்கைத் துறையைப் பற்றி விளக்கவுரைகளையும் வரைவு அறிக்கைகளையும் உருவாக்கக் கூடிய அலசல் முறையும் அதன் வெளிப்பாடாகிய எழுத்து வடிவமுமே இனவரைவியல் என அதன் பரிமாணங்கள் விளக்கப்படுகின்றன.''(22)இதற்குக் கற்பனையற்ற, தற்சார்பற்ற வருணனையும் காட்சிப்படுத்துதலும் அடிப்படையானவையாகும். பண்பாட்டை அதன் முழுப் பரிமாணத்தில் புரிந்து கொள்ளும் வகையில் விளக்குவது எளிதானதன்று. எனவே இனவரைவியலாளர்கள் ஆய்விற்கு முதன்மை இடம் தருவர். பண்பாட்டை நேரில் கண்டு உணர்ந்து அவ்வாறே வெளிப்படுத்த வேண்டும். இது காட்சிப்படுத்தும் வருணனை மூலமே சாத்தியமாகும். இது வருணனை

எதார்த்தத்தைக் கண்முன் பிரதிபலித்துக் காட்டுவதாக இருக்க வேண்டும். சங்ககாலப் புலவர்கள் இவ்வகையில் நோக்கும் போது இனவரைவியலாளர்களாகச் செயல்பட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

“சமூக மானிடவியல், பண்பாட்டு மானிடவியல் மற்றும் நாட்டார் வழக்காற்றியல் ஆய்வில் இனவரைவியல் முக்கியப் பங்கு வகிக்கிறது. ஏனெனில் இம்மூன்று அறிவுத் துறைகளுக்கும் தேவையான முக்கியத் தரவுகளை இனவரைவியல் வழங்குகிறது.”(23)ஆகவே சங்ககாலப் பண்பாடு பற்றி அறிந்து கொள்வதற்கு, அதற்குரிய தரவுகளைச் சங்க இலக்கியப் பனுவல்கள் வழங்குகின்றன.

**இனவரைவியலின் தலையாய நெறி**

பண்பாட்டுக் கூறுகளின் உறவுகளைச் சரியாகப் புரிந்து கொள்வதும் அவற்றை நடுநிலைநோக்கில் விளக்குவதும் இனவரைவியலின் தலையாய நெறியாகும். ஆகவே, சமுதாயப் பண்பாட்டுக் கூறுகளின் உறவை ஆழ்ந்து நோக்கும் இனவரைவியலார் பொதுவாகச் செயற்பாட்டியல் பின்னணியில் அக்கூறுகளை உற்றுநோக்குவர். அச்செயல்பாட்டு பின்னணியாவன,

1) புவிச்சூழலியல் (Topography)
2) சுற்றுச்சூழல் (Environment)
3) காலநிலை (Climate)
4) குடியிருப்பு முறை (Settle ment)
5) பொருள்சார் பண்பாடு (Material Culture)
6) குடும்ப அமைப்பு
7) உறைவிட முறை (Residence pattern)
8) திருமண முறை (Marriage pattern)
9) வாழ்வியற் சடங்குகள்
10) குழந்தை வளர்ப்பு முறை
11) பண்பாட்டுவயமாக்க முறை (Enculturnation)
12) மக்களின் உளவியல் பாங்குகள்
13) மணக்கொடை
14) மணவிலக்கு முறை
15) வாழ்க்கைப் பொருளாதாரம் (Subsistence Economy)

16) தொழிற் பகுப்பு (Division of labour)

17) உற்பத்தி முறை

18) நுகர்வு முறை

19) பரிமாற்ற முறை

20) பங்கீட்டு முறை

21) கைவினைத் தொழில்கள்

22) அரசியல் முறை

23) அதிகார உறவுகள்

24) சமூகக்கட்டுப்பாடு (Customary laws)

25) மரபுசார் சட்டங்கள்

26) சமய நம்பிக்கைகள்

27) மந்திரம்

28) சூனியம்

29) வழக்காறுகள் (Folklore)

30) விழாக்கள்

31) இசை

32) விளையாட்டுகள்

33) அழகியற் சிந்தனைகள்

34) சடங்குகள்

35) வழிபாட்டு முறைகள்

36) ஈமச்சடங்குகள்

முதலியவை ஒரு தனிப்பட்ட சமூகத்தைப் பற்றியதாக இருப்பதால் இனவரைவியல் நூல்கள் தனிவரைவு நூல்கள் என்றும் அழைக்கப்படும்”[24] என்கிறார் பக்தவத்சல பாரதி.

ஒரு சமூகத்தைப் பற்றி முழுமையாகத் தொகுக்கும் ‘இனவரைவியல்’ தரவுகள் அச்சமூகத்தைப் பற்றி முழுமையாக அறிய உதவுகிறது. சங்ககாலச் சமூகம் பற்றி அறிந்துகொள்வதற்குச் சங்க இலக்கியங்களே தரவுகளாக அமைகின்றன. இத்தரவுகளைக் கொண்டு சங்ககாலத் தமிழ் மக்களின் சமூகத்தை மீட்டுருவாக்கம் செய்ய இயலும்.

**இன ஒப்பாய்வியல்**

பல்வேறு இனமக்களின் பண்பாடு, வரலாறு பற்றிப் பண்பாட்டின் அடிப்படையில் அறியும் அறிவியலே இன ஒப்பாய்வியல் ஆகும்.”[25] என்பர் குரோபர்.இத்துறை, பண்பாடுகளை வரலாற்று நோக்கில் ஆராய முற்படுவதால் ‘பண்பாட்டு வரலாற்றியல்’ (Cultural history) என்று கூறும் வழக்கமுண்டு. “பண்பாடுகளைப் பற்றிய முறைப்படியான அறிவியலே இனஒப்பாய்வியல் என்னும் வரையறை இன்று அனைவராலும் பயன்படுத்தப்படுகிறது.”[26]இன ஒப்பாய்வியலார் சமுதாயப் பண்பாட்டு அமைப்புகளைக் கொள்கையாக்கம் செய்யமுற்படும்போது பண்பாடுகளை ஒப்பிட்டு ஆராய்வர். களப்பணி செய்து தரவுகள் பெற இயலாது என்பதால் ஆய்வாளர்கள் தம் சொந்த இனவரைவியல் தரவுகளோடு பிற இனக்குழுக்களைப் பற்றிய தனிவரைவு நூல்களையும் (Monography) அறிக்கைகளையும் (Reports) ஆய்வுக்குப் பயன்படுத்துவர். அவ்வகையில் தமிழர் தம் சமுதாயப் பண்பாட்டை அறிய சங்க இலக்கியத் தரவுகள் பயன்படுகின்றன.

**மானிடவியலும் சங்க இலக்கியமும்**

தொடக்ககாலத் தத்துவவாதிகள் மனிதர்களையும் அவர்களின் சமூகங்களையும் அறிய முற்பட்டதிலிருந்து மனித இனம், சமூகம், பண்பாடு பற்றிய தேடலும் புரிதலும் தொடங்கிவிட்டன. இத்தேடலைத் தொடங்கி வைத்தவர் கி.மு. 624-547 காலக்கட்டத்தில் வாழ்ந்த தாலஸ் ஆவார். இவரை அடுத்து செனோபேன்ஸ், சாக்கரட்டீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில், எப்பிகூரஸ் என வளர்ந்து கி.மு.150 வரை இச்சிந்தனையாளர்களின் வரிசை நீண்டு வந்துள்ளது. இதற்கிணையான ஒரு தனித்த சிந்தனை மரபைத் தமிழர்களும் உருவாக்கியுள்ளனர் என்பதை இங்கு எண்ணிப் பார்க்க வேண்டும்.

இரண்டாயிரம் ஆண்டு காலத்திற்கு முற்பட்ட இலக்கண நூலான தொல்காப்பியம், சங்க இலக்கியங்களை முதன்மையான ஆதாரங்களாக எடுத்துக் கொண்டு அவற்றிலிருந்து தமிழ்ப் பண்பாடு ஏறக்குறைய மீட்டுருவாக்கம் செய்யப்பட்டது. இப்பணியில் பல்வேறு தமிழறிஞர்கள் ஈடுபட்டனர்.“தமிழ் இலக்கியங்களின் ஊடாகத் தமிழர் சமூகத்தையும் பண்பாட்டினையும் சமூகவியல், மானிடவியல் போன்ற சமூக அறிவியல்களின் நெறிமுறைப் பின்னணியோடு தொடங்கப்பட்டு அது வேரூன்றி இருக்கும் நிலையையும் காண்கிறோம். அறுபதுகளில் தோன்றிய இப்போக்கிற்குத் தளம் போட்டுக்

கொடுத்தவர்களுள் எஸ்.வையாபுரிப்பிள்ளை குறிப்பிடத்தக்கவர். அவருடைய எழுத்துக்களில் மானிடவியலைக் கொண்டு தமிழ் இலக்கியத்தை ஆராயும் தொடக்கநிலை அணுகுமுறை வெளிப்பட்டது.''(27)

கி.மு.1000 முதல் கி.பி.250 வரையிலான காலத்தை சங்ககாலம் என அறிஞர்கள் கூறுவர். ஏறத்தாழ 1250 ஆண்டுகள் தோன்றிய இலக்கியங்களின் தொகுப்பே சங்க இலக்கியம். இவை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என வழங்கப்பெறும். இவ்வாறு பல நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியங்களை மானிடவியல் நோக்கில் ஆராய்வது பல உண்மைகளை அறிய உதவும். கடந்த கால மனிதனைப் பற்றியும் சமூகம் பற்றியும் அறிந்து கொள்வதற்குச் சங்க இலக்கியங்களை மானிடவியல் நோக்கில் ஆராய்தல் இன்றியமையாததாகிறது.

**சங்க இலக்கியத்தில் இனவரைவியல்**

இனவரைவியிலானது அறிவியல் பூர்வமானது. காய்தல் உவத்தலின்றிக் நடுவுநிலையுடன் சேகரிக்கப்பட்ட தரவுகளின் தொகுப்பாக இனவரைவியல் அமையும். இலக்கியமானது வெறும் செய்திகளின் தொகுப்பாக அன்றி அழகியல் பூர்வமாக அமைவது; படைப்பாளியின் உலகக் கண்ணோட்டத்திற்கேற்ப உருவாக்கப்படுவது.''இனவரைவியல் பனுவல் என்பது சமகாலக் களப்பணி சார்ந்து எழுதப்பட்டதாக இருக்க வேண்டும் என்பது ஒரு பொதுப் புரிதலாகும். இராமாயணம், மகாபாரதம், சிலப்பதிகாரம் உள்ளிட்ட காப்பியங்கள் போன்ற இலக்கியங்கள் பிரதிகள் யாவும் அவை எழுதப்பட்ட காலத்தில் 'சமகாலத்தியப் பனுவல்களாகவே' அமைந்தன. அவற்றை இன்றைய சூழலில் எடுத்துக்கொள்ளும்போது அவை வரலாற்று இனவரைவியலாக அமைகின்றன.''(28) இத்தகைய அணுகுமுறையில் நோக்கும் போது சங்க இலக்கியங்கள் இனவரைவியல் தகுதி பெறுகின்றன.

இனவரைவியல் என்னும் துறையானது மக்களினத்தின் வாழ்வியலின் நடைமுறை நிகழ்வுகளையும், உண்மைச் செய்திகளையும் நடுவுநிலையோடு பதிவு செய்யக்கூடியது. ஆனால் இலக்கியம் என்பது இதற்கு நேர் எதிரானது; 90 சதவீதம் புனைவுகளையும் 10 சதவீதம் உண்மை நிகழ்வுகளையும் கொண்டு புனையப்படுவது. இந்நிலையில் இனவரைவியலின் கொள்கைகளை இலக்கியத்திற்குப் பொருத்திப் பார்ப்பதற்கான வழிவகைகளை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தொல்காப்பியர் வழங்கியுள்ளார்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் அகத்திணையியலில் இடம் பெறும் சில நூற்பாக்கள் இனவரைவியல் தரவுகளில் இன்றியமையாத இடம் பெற்றுள்ளன. தொல்காப்பியவழித் தோன்றிய சங்க இலக்கியங்களின் பாக்களில் இனவரைவியல் தரவுகள் பதிவாகியுள்ளன. பெரும்பாலும் தொல்காப்பிய நெறியை ஒட்டி அமைந்துள்ள சங்கப் பாடல்களில் காணப்படும் புலவர்களின் தற்சார்பற்ற நிலை இனவரைவியலாளருக்கு உரிய இன்றியமையாத பண்புகளுள் ஒன்றாகும். எனவே சங்கப் புலவர்கள் இனவரைவியலாளர்களாகத் திரட்டிய தரவுகளைச் சங்கப்பாக்கள் கொண்டுள்ளன.

*''முதல் எனப்படுவது நிலம் பொழுதிரண்டின்*
*இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே''*
*(தொல்.பொருள்.950)*

என்ற நூற்பாவழித் தொல்காப்பியர் குறிப்பிடும் நிலம் பொழுது முறையே புவிச்சூழல், கால நிலையைக் குறிப்பதாகும். இனவரைவியலாளர்கள் உற்றுநோக்கும் செயற்பாட்டியல் பின்னணியில் இவை முதலிடம் பெறுகின்றன. ஐவகை நிலமும் ஆறு வகைப்பொழுதும் இனவரைவியலில் புவிச்சூழலியல், சுற்றுச்சூழல், காலநிலை என வகைப்படுத்தப்படும்.இந்நிலங்களில் உயர்திணை, அஃறிணைப் பொருட்களுள் சிறப்புக்குரியவற்றை முன்னிலைப்படுத்துகிறார் தொல்காப்பியர்.

*''தெய்வம் உணாவே மாமரம் புட்பறை*
*செய்தி யாழின் பகுதியோடு தொகைஇ*
*அவ்வகை பிறவும் கருவென மொழிப''*
*(தொல்.பொருள்.964)*

என்னும் நூற்பா அடிப்படையில் அமைந்த சங்க இலக்கியப் பாக்களில் பதிவாகியுள்ள உயர்திணை, அஃறிணைப் பொருட்களைத் தரவுகளின் கூறுகளாகக் கொண்டு புவிச்சூழல், காலநிலையில் பொருத்தி வளரும் தாவரங்களின் செயல்களையும் சிறப்புகளையும் இனவரைவியல் நோக்கில் ஆராயவியலும்; அவ்வியற்கையைச் சார்ந்து வாழும் மக்களின் இயல்புகளையும் இனவரைவியல் நோக்கோடு சுட்டிக் காட்ட இயலும்.

தொல்காப்பியர் வகைப்படுத்தும் தெய்வம், உணவு வகை, விலங்குவகை, மரம், செடி, கொடி வகை, பறவை வகை, ஐவகை நிலத்திற்குரிய பறை (தப்பட்டை) வகை, தொழில் வகை, யாழ் வகை என வரும் கருப்பொருள்கள் அனைத்தும் இனவரைவியல் தரவுகளில் இன்றியமையாத இடத்தைப்

பெற்றுள்ளன. சங்க இலக்கியப் பனுவல்களில் இவைகளின் தடயங்கள் காணப்படுகின்றன.

சங்க கால மக்களின் வாழ்வியல் முறைகளையும் வரலாற்றையும் அறியச் சங்க இலக்கியங்களே முதன்மைத் தரவுகளாக விளங்குகின்றன. நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், விழுமியங்கள், வாழ்க்கை முறைகள், சடங்குகள், தொழில்கள், புழங்குபொருட்கள், மக்கள் குழுக்கள், உணவு, உடை, அணிகலன்கள், வழிபாடு, தெய்வங்கள், குழுத்தலைவர்கள், போர், விலங்குகள், பறவைகள், நீர்நிலை உயிர்கள், ஐம்பூதங்கள் போன்றவை குறித்த செய்திகளைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இவை அனைத்தும் இனவரைவியல் தரவுகள் ஆகும். இலக்கியப் பனுவல்களின் உள்ளடக்கத்தில் இச்செய்திகள் முதன்மையானதாகவோ அல்லது பாடல் பொருளின் கால இடத் தளத்தை அடையாளப்படுத்தும் துணைக் கூறுகளாகவோ அமையும். படைப்பாளி தான் சொல்ல நினைக்கும் கருத்தைப் பேச இவை தேவைப்படுகின்றன.

படைப்பாளி ஒருவன் சுயசிந்தனை என்ற எல்லைக்குள் நின்று மட்டும் ஒரு இலக்கியத்தைப் படைத்து விட முடியாது. அவனைச் சுற்றியுள்ள புற உலகின் அசையும் பொருட்கள் அசையாப் பொருட்கள் ஆகிய அனைத்தையும் உற்றுநோக்கி அவற்றின் தனிப்பட்ட இயல்புகளையும் இயக்கங்களையும் இணைத்து, இலக்கியத்தில் இடம் பெறும் மாந்தர்களையும், அம்மாந்தர்களின் பின்புலத்திலுள்ள அனைத்து இயக்கங்களையும் உரிய பொருட்களையும் மிக நுணுக்கமாகச் சித்திரிக்க வேண்டும். இதற்கு உறுதுணையாக அமைவது அவ்விலக்கியத்தைப் படைக்கும் படைப்பாளியின் இனவரைவியல் அறிவேயாகும். அவ்வகையில் இனவரைவியல் அறிவைக் கொண்டு படைக்கப் பெற்றவை சங்க இலக்கியங்கள்.

யதார்த்தத்தை அதாவது யதார்த்த உலகத்தைத் தன்னால் இயன்ற அளவில் பிரதிபலித்த இலக்கிய மரபினைச் சங்க இலக்கியங்களில் காண முடியும். தமக்கு முன்னால் விரிந்து பரந்து கிடந்த இயற்கையை, நிலத்தை, மனிதர்களை, அவர்களுடைய வாழ்க்கையைத் தாம் உற்றுநோக்கியதன் அடிப்படையில் படைப்பாளிகள் அக்காலத்திய படைப்பு நெறிக்கு இயைந்து உருவாக்கியவை தான் சங்க இலக்கியப் பனுவல்கள். ‘‘ஒரு கதை சொல்லியைப் போல், தாம் உற்று நோக்கியவற்றை விவரிக்கும் பாணியில் அமைந்த சிலவகை இலக்கியப் பனுவல்களில் மிகுதியாக மூடி மறைக்காத

ஒருவகை யதார்த்தம் செயல்படுவதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. மிகையான அணி அலங்காரங்களால் பொத்திப் போர்த்தப்படாத இந்த யதார்த்தம் தான், சங்க இலக்கியப் பனுவல்களைப் பண்டைத் தமிழ்ப் பண்பாட்டைப் புரிந்து கொள்ள உதவும் முதனிலைத் தரவுகளாக ஆக்கியிருக்கிறது.''[28] என்ற தனஞ்செயனின் கருத்து சங்க இலக்கியப் பனுவல்களை இனவரைவியல் நோக்கில் ஆராய்ந்து பண்பாட்டை அறிய இயலும் என்பதை எடுத்துரைக்கும்.

''எதார்த்தமான அல்லது புனைவுகள் கலந்த எதார்த்தமான கால இடச்சூழல் பின்புலங்களில் நடத்தை முறைகள் படைப்பாளிகளால் பதிவு செய்யப்படுகின்றன. இப்பதிவுகள் இனவரைவியலோடு நெருக்கமான உறவுடையவையாக அமைகின்றன. இத்தகைய கவிதைகளைப் பண்பாட்டுக் கவிதைகள் அல்லது இனவரைவுக் கவிதைகள் என அழைக்கலாம்.''[29] இவ்வகையில் பண்பாட்டுக் கவிதைகளாய் அமைந்தவை சங்க இலக்கியப் பனுவல்கள்.

ஒரு குறிப்பிட்ட மக்கள் சமூகத்தின் பண்பாட்டைச் சித்திரிப்பதற்கு உதவும் முதன்மையான தரவாக இலக்கியத்தை ஏற்க முடியாது என்றாலும் வேறு வகையான ஆவணங்கள் எவையும் கிடைக்கப் பெறாத ஒரு கடந்த காலத்திய சமூகத்தை, அதன் பண்பாட்டைப் புரிந்து கொள்வதற்கு, ஆராய்வதற்கு அச்சமூகம் படைத்தளித்த கலை, இலக்கிய வடிவங்களே முக்கிய ஆதாரங்களாகும்.

''கி.பி.3–ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலத்தைப் பண்டைக்காலம் என்கிறோம். இந்தக் காலத்திய நிலையை அறிய நமக்கு உதவும் இலக்கியம் தமிழ் இலக்கியத்தில் சில பகுதிகளும் பழமை எல்லை அறியப்படாத பழைய இலக்கியமாகும். தொல்காப்பியமும் சில சங்க இலக்கியப் பகுதிகளும் கடைச்சங்கத்துக்கு முற்பட்டவை அதாவது கி.மு.5–ஆம் நூற்றாண்டுக்கு முந்தியவை.''[30]இச்சங்க இலக்கியப் பனுவல்களின் துணை கொண்டு சங்ககால மக்களின் வாழ்க்கை வரலாற்றின் வழித்தடயங்களை நிச்சயமாக ஊகித்து உணர முடியும். சங்க கால மக்களின் வாழ்வியல் நுணுக்கங்களை ஆய்ந்து அறிவதன் மூலம் இருபத்தொன்றாம் நூற்றாண்டில் அழிந்து வரும் தமிழர்

பண்பாடு, தனித்துவம் மிக்க பண்பாடு தன்னிகரில்லா பண்பாடு ஆகியவற்றை அறிந்துக் கொள்ள முடியும்.

பக்தவத்சல பாரதி வரையறுக்கும் இனவரைவியல் செயற்பாட்டு பின்னணிப்பட்டியல் அடிப்படையில் திணைசார் மக்களினம், தொழில்சார் மக்களினம், பண்பாடுசார் மக்களினம் குறித்து சங்க இலக்கிய பனுவல்கள் தரும் தரவுகளைப் பகுத்து ஆராய்தல் எளிமையான இலக்கிய இனவரைவியல் முறையாகும்.

திணைசார் மக்களினம் என்பது புவிச்சூழலியல், சுற்றுச் சூழல், கால நிலை, குடியிருப்பு முறை, பொருள்சார் பண்பாடு (புழங்குபொருள்), உணவு முறை, விளையாட்டுகள் பற்றி ஆராய்வதாகும். இவற்றில் நிலத்தினை அடிப்படையாகக் கொண்டு திணைசார் மக்களினத்தின் அடிப்படை வாழ்வியற் கூறுகளைப் பொருத்திப் பார்க்க முடியும். இங்கு திணை என்பது நிலத்தினை மட்டுமே குறிக்கும்.

**தமிழக அமைவிடம்**

தமிழ் பேசும் மக்களினம் வாழ்ந்த இடம் தமிழகம். சிதைந்துபோன குமரிக்கண்டத்தின் எஞ்சிய பகுதியின் ஒரு பாகமே தமிழகமாகும். வெப்பமண்டலத்தில் நிலநடுக்கோட்டின் அருகாமையில் $8^0$.078’0’’வடக்கு அச்சுக்கோட்டுக்கும் $13^0$ 39’0’’வடக்கு அச்சுக்கோட்டுக்கும்[31] இடையில் அமைந்திருந்தது. வி.கனகசபை தமிழகத்தின் எல்லைகளாக,‘‘வடக்கே வடவேங்கடம், தெற்கே குமரி, மேற்கே அரபிக்கடல், கிழக்கே வங்காள விரிகுடா என்று வரையறுத்துள்ளார்.[32] சங்க காலத்து நூலான அகநானூறு தமிழகம் வடக்கே அயிரியாறு வரை பரவியிருந்ததை,

*‘‘அயிரியாறு இறந்தனர்ஆயினும்’’– அகநா.253:20*
*‘‘அயிரியாற்று அடைகரை வயிரின் நரலும்’’– அகநா.177:11*

என்று விளக்கும். இங்கு அயிரியாறு பற்றிய குறிப்பையும் தமிழர் வடதிசைநோக்கி வாணிபம் பொருட்டுச் சென்றதையும் பதிவு செய்துள்ளனர். தமிழகத்தின் எல்லையான வேங்கடமலை பற்றிய பதிவை,

*‘‘கல்லா இளையர் பெருமகன் புல்லி*
*வியன் தலை நல் நாட்டு வேங்கடம் கழியினும்’’– அகநா.83:10*
*‘‘வென் வேல் திரையன் வேங்கட நெடுவரை’’– அகநா.85:9*

என்னும் பாடலடிகளில் காண முடிகிறது. சங்க இலக்கியங்களுக்கு இலக்கணமாக விளங்கும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தில் பனம்பாரனார்,

*"வடவேங்கடம் தென்குமரி*
*ஆஇடைத்*
*தமிழ் கூறும் நல் உலகத்து*
*வழக்கும் செய்யுளும் ஆஇருமுதலின்*
*எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்*
*செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு"– (தொல்.பொ.1-6)*

எனத் தமிழ்ப் பேசும் மக்களினம் தோன்றிய நிலப்பகுதியை வரையறை செய்துள்ளார். இவற்றால் சங்கத் தமிழகத்தின் எல்லையை அறிய முடிகிறது.

**தமிழகத்தின் பருவகால நிலை**

தமிழகத்தின் பருவகால நிலையை வாழ்ந்து உணர்ந்த தமிழர், அதனை ஆறு பகுதிகளாகப் பிரித்து அறிந்தனர். அவையாவன கார்காலம், கூதிர்காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனில், முதுவேனில், முதலியன. பொதுவாக ஆங்கிலேயர்கள் பருவகாலத்தை வேனில் (Summer Season), மழைக்காலம் (Rainy Season), பனிக்காலம் (Winter Season), வசந்தகாலம் (Antumn Season) என்று பிரித்துள்ளனர். ஆனால் தமிழர் வேனில் காலத்தை இளவேனில், முதுவேனில் என்றும் பனிக்காலத்தை முன்பனி, பின்பனி எனவும் காலநிலையைக் கூர்ந்து கவனித்துப் பகுத்துள்ளது சிறப்பிற்குரியது. பூமி தன் நீள்வட்டப்பாதையில் சுற்றும் போதும் சூரியனுக்கு அருகில் செல்லும் போதும் அதன் கதிர்கள் நீண்ட நேரம் படும்பொழுதும் அப்பகுதி வேனில் காலத்தைச் சந்திக்கிறது. நீள்வட்ட பாதையில் பூமி சூரியனை நெருங்கும் காலம் இளவேனில் எனவும் விலகும் காலம் முதுவேனில் எனவும் வகைப்படுத்தியுள்ளனர் பண்டைத்தமிழர். பனிக் காலத்தையும் இவ்வாறே வகைப்படுத்தியுள்ளார். பனிபொழிவு என்பது தென்னிந்தியாவினைப் பொருத்தவரை மிதமான பனிமேகமூட்டப்படர்வு ஆகும். இமயமலையில் காணப்படும் உறைபனிக்கட்டிப் பொழிவு தென்னிந்தியாவில் இல்லை. உயர்ந்த சிகரங்களைக் கொண்ட மேற்குத் தொடர்ச்சி மலைகளிலும் பனிமேகப் படர்வு காற்றில் நகர்வதைக் காண முடியுமே தவிர உறைபனிக்கட்டிப் பொழிவு காணப்படுவதில்லை. இத்தகைய பனிமேக மூட்டப்பொழிவைத் தமிழர் முன்பனி, பின்பனி எனப் பிரித்தனர். பகலின் முன்பகுதியாகிய விடியற்காலையில் பனிமேகமூட்டம் காணப்பட்டால் அது முன்பனிக்காலம் எனவும் பகலின்

பின்பகுதியில் அ.ஃ.தாவது மாலைப்பொழுதில் மேகமூட்டம் காணப்பட்டால் அது பின்பனிக்காலம் எனவும் தமிழா் பிரித்தறிந்தனா். பனிப்பருவம் குறித்து,

*''தண்வரல் வாடை தூக்கும்*
*கடும்பனி அற்சிரம் நடுங்கஞர் உறவே''* - *குறுந்.76:5-6*

எனப் பாடலடி உரைக்கிறது. கருவிளை மலரும் பீர்க்கப்பூ மலரும், கொன்றை மலரும் மலருங்காலம் எனக் குறிப்புவழிப் பனிக்காலத்தைக் கணக்கிட்டுள்ளனா்.

சங்க இலக்கியத்தில் கார்காலம் குறித்துப் பரவலாகப் பதிவுகள் கிடைக்கின்றன. தமிழகம் வடகிழக்குப் பருவக்காற்றின் மூலம் பெரும்மழையைப் பெற்றதை,

*'கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்*
*திரைப்பிதிர் கடுப்ப முகடு உகந்தேறி*
*நிரைத்து நிறைகொண்ட கமஞ்சூல் மாமழை''– (நற்.89:1-3)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இங்கு கொண்டல் என்பது வடகிழக்குப் பருவக்காற்றைக் குறித்து வந்துள்ளது.

கார் காலத்தில் முல்லை அரும்பும். இவ்வாறு முல்லை அரும்புகள் அரும்புவதைக் கண்டு கார்காலத்தை அறிந்துள்ளனா். கார்காலத்திற்குப் பிறகு பூமி குளிர்ந்திருக்கும்; வாடைக்காற்று வீசும்; மழைத்துளியுடன் கூடிய ஊதைக் காற்று வீசும். இத்தகைய பருவத்தைக் கூதிர்காலம் எனப் பிரித்துள்ளனா்.

*''............................ உறை சிறந்து*
*ஊதை தூற்றும் கூதிர் யாமத்து*
*ஆனுளம்புழம்புதொறுலம்பும்''– குறுந்.86:3-5*

என்ற பாடலடிகள் கூதிர் காலம் பற்றி உரைக்கின்றன.இளவேனில் காலம் குறித்து,

*''முற்றா வேனில் முன்னி வந்தோரே''– நற்.86:9*

என்ற பாடலடி உணர்த்தும். முன்பனிக்காலம் முடிந்த பிறகு பின்பனிக்காலம் வரும். பின்பனி முடிந்தவுடன் இளவேனில் வரும் எனப் பருவகாலநிலை முறையினை,

*''அன்பினர் மன்னும் பெரியர் அதன்தலை*
*பின்பனி அமையம் வருமென முன்பனிக்*
*கொழுந்து முந்துறீஇக் குரவு அரும்பினவே*
*புணர்ந்தீர் புணர்மினோ என்ன இணர்மிசைச்*
*செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்*
*இன்ப வேனிலும் வந்தன்று நம்வயின்''– நற்.224:1-6*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இவ்வாறு தமிழகத்தில் நிலவிய பருவநிலை குறித்துச் சங்க அகத்திணைப் பாடல்கள் விளக்கமாகப் பதிவுசெய்துள்ளன.

**மண்வளம்**

தென்னிந்தியாவில் தமிழர்கள் வாழ்ந்த பகுதியில் காணப்பட்ட மண்வகைகளை சங்க அக இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. அப்பதிவுகளின்படி அம்மண் வகைகளாவன,

1) செம்மண்
2) வண்டல் மண்
3) கரிசல் மண் அல்லது கருமணல்
4) மணல்

என்பனவாகும்

**செம்மண்**

சிவப்பு நிறத்தில் காணப்படும் மண்ணே செம்மண் ஆகும். இம்மண் மழை பெய்த நீரையும்,ஈரத்தையும் விரைவில் உறிஞ்சும் தன்மையுடையது எனச் சங்க இலக்கியம் பகர்கிறது. இதனை,

*''செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாங் கலந்தனவே''– (குறுந்.40:4-5)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். செம்புலம் என்பது செம்மண் நிலம் என்பதையும் அந்நிலம் விரைவில் மழைநீரை ஈர்த்துக் கொள்ளும் என்பதையும் அவை புலப்படுத்துகின்றன.

*''செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த*
*கௌவை நாற்றின் காரிரு ளோரிலை''– (குறுந்.282:1-2)*

என்னும் பாடலடிகளில் 'செவ்வி' என்னும் சொல் செம்மண் மேட்டைக் குறிப்பிடுகின்றது.

*''செந்நில மருங்கில் பல் மலர் தாஅய்*
*புலம்பு தீர்த்து இனிய ஆயின புறவே''– (ஐங்.495:1-2)*

என்னும் பாடலடிகளில் செந்நிலம் என்பது செம்மண் நிறைந்த நிலத்தையே குறிக்கிறது.

**வண்டல் மண்**

நீரோட்டமுள்ள பகுதிகளில் படிந்து காணப்படும் மணலே வண்டல் மண் ஆகும். படிந்து காணப்படுவதால் படுகை மண் என்றும் அழைத்திடுவர்.

*"ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்*
*தொண்டி அன்ன என்நலம் தந்து"– (குறுந்.238:3-4)*

என்ற பாடலடிகள் பெண்கள் வண்டல் மண்ணைப் பயன்படுத்தி விளையாடியதை எடுத்துரைக்கும்.

*"கோதை ஆயமொடு வண்டல் தைஇ"– (அகநா.60:10)*
*"தண்புனல் வண்டல் உய்த்தென"– (ஐங்.69:3)*

என்ற பாடலடிகள் தமிழகத்தில் காணப்பட்ட வண்டல் மண் பற்றிய பதிவுகளைத் தருகின்றன.

**கரிசல் மண்**

'கரிசல் மண் கருப்பு நிறம் முதல் பழுப்புநிறம் வரை காணப்படும். இதனைக் 'கலக்கி மண்' என்றும் கூறுவர்.

*"ஆரம் நாறும் அறல்போற் கூந்தல்*
*பேரமர் மழைக்கண் கொடிச்சி"– (குறுந்.286:3-4)*

என்னும் பாடலடிகளில் அறல் என்பது கரிசல் மண்ணைக் குறிக்கும்.

*"வளங்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை*
*நுண்மணல் அறல் வார்ந் தன்ன*
*நன்னெறி யவ்வே நறுந்தண்ணியவே"– (குறுந்.116:3-4)*

என்ற பாடலடிகளில் தலைவியின் கூந்தலானது காவிரி ஆற்றின் பெருந்துறையில் நுண்ணிய கருமணல் நீண்டு படிந்தாற் போன்று காணப்படுவதாகக் குறுந்தொகை கூறுகிறது. இவ்வாறு கரிசல் மண்ணின் நிறத்தைக் கூறுவதுடன் அது கூந்தலுக்கு உவமையாகவும் கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து தமிழகத்தில் கரிசல் மண் வளம் நிறைந்துள்ளதை உணர முடியும்.

**மணல்**

நீர்வளம் குறையாமல் காணப்படும் கடல் பகுதி மணற்பாங்காகக் காணப்படும். இதனை,

*"வெண்மணற் பொதுளிய பைங்காற் குருகின்"– (குறுந்.281:1)*
*"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி"– (நற்.172:1)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும். இவற்றில் வெண்மணல் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. இதிலிருந்து கடற்கரையோரங்களில் வெண்மணல் காணப்பட்டதை அறிய இயலும்.

செம்மண், வண்டல் மண், கரிசல் மண் (அ) கருமணல், வெண்மணல் பற்றிய குறிப்புகள் சங்க அகத்திணைப் பாடல்களில் கிடைக்கும் நிலையில்

களிமண் பற்றிய நேரடியான தகவல் கிடைக்கவில்லை. புழங்குபொருட்களான தசும்பு, மண்டை, குழிசி போன்ற பொருட்கள் மண்ணால் செய்யப்பட்டவை ஆகும். இவற்றைச் செய்யப் பயன்படுத்திய மண் களிமண்ணாகும். பசுமண் பாத்திரத்தில் நீர் ஊற்றி வைத்தால் கரையும் என்ற செய்தி கிடைக்கப் பெறுகின்றது. இதிலிருந்து நீரினைத் தம்முள் நீண்டகாலம் தக்க வைத்துக் கொள்ளும் மண் களிமண் என்பதால் அதனைப் 'பசுமண்' என்று குறிப்பிட்டுள்ளனர், என்பது புலனாகும். மண்ணினைச் சுட்டு 'தசும்பு' (நற்.84:6) செய்துள்ளதை அறிவதிலிருந்து சங்ககாலத் தமிழகத்தில் களிமண்ணும் காணப்பட்டதை உணர இயலும்.

**நிலப்பகுப்பும் நீர்வளமும்**

உலகிலுள்ள நிலப்பரப்பு இயற்கை அமைப்பில் காடு, மலை, வயல், கடற்கரை, பாலைவனம் என்னும் ஐந்து வகையில் அடங்கும். உலகுக்கே உரிய இவ்வைந்து அமைப்பும் இந்தியாவுக்கும் உண்டு. கிழக்கில் வங்கக் கடலையும் தெற்கில் இந்துமாக்கடலையும் மேற்கில் அரபிக்கடலின் தென் பகுதியையும் மேற்குத் தொடர்ச்சி மலையையும் வடக்கில் கருநாடக மேட்டுநிலத்தையும் கிழக்குத் தொடர்ச்சி மலைத் தொடர்களின் இடைவிட்ட குன்றுகளையும் எல்லையாகக் கொண்டுள்ள தமிழக நிலப்பகுதியை நிலவியலார் ''பாலாறு, பொருநையாற்றுத்தொட்டி, கொங்கு நாட்டு மேட்டுநிலம், காவிரிப்படுகை, வறண்ட தென்கிழக்குச் சமவெளி, குமரிமுனைக்கு மேற்கிலுள்ள அரபிக் கடற்கரைப் பகுதி என ஐந்தாகப் பிரித்துள்ளனர். தமிழகத்தின் வடக்கில் பாலாற்றுக்கும் காவிரிக்கும் இடைப்பட்ட பகுதியின் மேற்கில் சேலம் தொப்பூர் முதலியவிடங்கள் முதல் வடகிழக்கில் செங்கற்பட்டு வரை குன்றுகளுள் மேட்டு நிலங்களும் நிரம்பியுள்ளன. கொல்லிமலை, கல்வராயன் சேர்வராயன் முதலிய குன்றுகள் இப்பகுதியில் முக்கிய மலைகளாகும். பாலக்காட்டுக் கணவாய்க்கு எதிரில் கொங்குநாட்டு மேட்டுநிலமுள்ளது. இம்மேட்டு நிலத்தின் கிழக்கில் காவிரியும் அதன் கிளையாகிய கொள்ளிடமும் பாய்கின்ற செழிப்பான பகுதி. காவிரிக்குத் தெற்கிலுள்ள புதுக்கோட்டை, மதுரை,சிவகங்கை, விருதுநகர், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களை உள்ளிட்டது வறண்ட தென்கிழக்குச் சமவெளி. இதில் ஏலமலையுடன் தொடர்புடைய வருடநாடு தொடர் முதல் வடக்காகவும் வடகிழக்காகவும் ஆண்டிப்பட்டி, சிறுமலை முதலிய குன்றுகள் மலைப்பங்கான

பகுதிகளைக் கொண்டுள்ளன. திண்டுக்கல்லிலிருந்து வடக்கில் மணப்பாறை வரையிலும் கிழக்கில் புதுக்கோட்டைப் பகுதி வரையிலும் இத்தகைய நிலஇயல் நிலவுகிறது.''[33]

தமிழகத்தில் தென்மேற்குப் பருவக்காற்றும், வடகிழக்குப் பருவக்காற்றும் வான் வளம் அளிக்கின்றன. மேற்குத் தொடர்ச்சி மலையின் கிடப்பால் தென்மேற்குப் பருவக்காற்றின் பயனைத் தமிழகம் முழுமையாகப் பெறவில்லை. வடகிழக்குப் பருவக்காற்றின் பயனைக் குறுகிய காலம் மட்டும் தமிழகம் பெறுகின்றது. இப்பருவ மழையால் தமிழகத்தின் ஆறுகளில் நீரோட்டம் செல்கிறது. ''தமிழகத்தின் வடக்கில் பாலாறு கருநாடகத்தின் நந்தி மலையில் உற்பத்தியாகிறது. செய்யாறு, தென் பெண்ணை முதலியன செங்கற்பட்டு, வடஆற்காடு முதலிய மாவட்டங்களுக்கு ஓரளவு நீர்வளம் அளிக்கின்றன. சைல மலையில் தோன்றி கருநாடக மேட்டுநிலத்தைத் தாண்டி தமிழகத்தில் புகும் காவிரி, தருமபுரி, சேலம், கோயம்புத்தூர், தஞ்சாவூர் ஆகிய மாவட்டங்களுக்கு நீர்வளம் அளிக்கின்றது. சின்னாறு, தேம்பூலாறு, பவானி, நொய்யல், திருமணி முத்தாறு, அமராவதி முதலியன காவிரியில் கலக்கும் ஆறுகளாகும். மேலணைப் பகுதியிலிருந்து கொள்ளிடம் பிரிந்து செல்லுகின்றது. கல்லணையிலிருந்து வெண்ணாறு, வெட்டாறு. குடமுருட்டியாறு, அரிசிலாறு. வீரசோழன் ஆறு பிரிந்து செல்லுகின்றன.''[34]

குன்றுப்பகுதிகளும், மேட்டு நிலங்களும், சமவெளிகளும் நிரம்பிய தமிழகத்துக்கு இயற்கைவளம் பெருக்கி மேற்குத் தொடர்ச்சி மலையில் இருந்தும் தமிழகத்துக் குன்றுகளிலிருந்தும் பல ஆறுகள் ஓடுகின்றன. இவற்றுள் பாலாறு,தென் பெண்ணை, காவிரி, வைகை, தாமிரபரணி முதலியன முக்கிய ஆறுகளாகும். இவ்வாறுகள் பற்றிய பதிவுகள் சங்க அகத்திணைப் பாடல்களில் கிடைக்கின்றன. இந்த ஆறுகள் மேற்கிலிருந்து கிழக்காகப் பாய்கின்றன. வங்கக்கடலில் கலக்கின்றன. தென்னிந்தியாவில் தக்காணப்பீடபூமியின் அமைப்பானது மேற்குப்பகுதி உயர்ந்து கிழக்குப்பகுதி சரிந்தும் காணப்படுவது ஆகும். இதற்குக் காரணம் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிச் சரிந்துள்ளதால் உற்பத்தியாகும் ஆறுகள் கிழக்கு முகமாக ஓடி வங்கக்கடலில் கலக்கின்றன. கன்னியாகுமரி, பீடபூமியிலிருந்து விலகியிருப்பதால் இப்பகுதியில் உற்பத்தியாகும்

ஆறுகள் அரபிக்கடலில் கலக்கின்றன. இதில் “குழித்துறை ஆறு என்னும் ப.்.றுளியாறு முக்கியமானதாகும்.”[35]

வான்மழையைப் பொறுத்து நீரோட்டம் உடைய ஆறுகள் மட்டுமன்றி சங்கத்தமிழர் நிலத்தடி நீரையும் பயன்படுத்திக் கொண்டனர். மலை அருவிநீர், சுனைநீர், ஆற்றுப்படுகையில் கோடையில் தோண்டிய ஊற்றுநீர் என நீரைப் பயன்படுத்தினர்.

நீர் வளத்தால் அந்நிலங்களில் வளரும் மரம், செடி, கொடி, பூண்டு முதலியவற்றின் சிறப்புகளால் தமிழக நிலப்பகுதியை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து பிரிவுகளில் வகைப்படுத்தினர். தமிழர் வேங்கடமலைக்குத் தெற்கே வாழ்ந்ததால் அவர்கள் முதுவேனிற் காலத்து வெய்யிலின் வெப்பத்தால் மரஞ்செடிகள் தீய்ந்து காய்ந்த வறண்டநிலம் சார்ந்த நில அமைப்பை பாலை நிலம் எனக் கூறினர். ஐவகை நிலங்களின் கருப்பொருள் முதலியவற்றால் அந்நிலங்களின் தன்மையும் மக்களின் வாழ்க்கை முறையும் விளங்குகின்றன. ஏறக்குறைய தமிழக நிலம் நிலநடுக்கோட்டு பகுதிக்கு அருகாமையில் இருப்பதால் வெப்பம் மிகுதியாகவுடையது. இந்நில அமைப்பாலும் அங்கு அமைந்த தட்பவெப்ப நிலையாலும் ஒவ்வொரு நிலத்திலும் வளரும் தாவரங்களும், உயிர் வாழும் விலங்கினங்களும் வேறுபடுகின்றன.

**நிலம்சார் தாவரங்கள்**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலைத் திணைக்குரிய நிலங்கள் சார்ந்து தாவர வகைகள் அமைந்துள்ளன. இவற்றைச் சங்க அகத்திணைப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. அவற்றில் மரங்கள், கொடிகள், செடிகள், புதர்கள், புல்வகைகள் குறித்த பல்வேறு செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**மரங்கள்**

அகில்,[36] அசோகுசெயலை,[37] அரைய மரம்,[38] ஆல மரம்,[39] இலவம்,[40] இருப்பை,[41] இற்றி மரம்,[42]ஈங்கை மரம்,[43] ஈச்ச மரம்/ஈந்து,[44] உகாய் மரம்,[45] ஓந்தி மரம்,[46] ஓமை,[47] கணைய மரம்,[48] கல்யாணமுருங்கை/முருக்குதழ்,[49] காஞ்சி,[50] குருந்தம்,[51] காயா,[52] குரவ மரம்,[53] கொன்றை,[54] கோங்கு மரம்,[55] சந்தன மரம்,[56] செங்கருங்காலி,[57] ஞாழல்,[58] ஞெமை மரம்,[59] தடா மரம்,[60] தில்லை மரம்,[61] தென்னை மரம்,[62] நறுமோரோடம்,[63] நாவல் மரம்,[64] நுணா

மரம்,[65] நெல்லி மரம்,[66] நொச்சி,[67] பனை மரம்,[68] பித்திகை(சிறு செண்பகம்),[69] பலா மரம்,[70] புன்னை மரம்,[71] புங்க மரம்,[72] புளிய மரம்,[73] மருத மரம்,[74] மா மரம்,[75] முருங்கை/முருக்கு,[76] மூங்கில்,[77] யா மரம்,[78] வாழை மரம்,[79] வாகை மரம்(உழிஞ்சில்),[80] வில்வம் (கூவிளம்),[81] விளா மரம்,[82] வெட்சி மரம்,[83] வெண்பாலை,[84] வெண்கடம்ப மரம்,[85] வெள்ளோத்திர மரம்[86] வெள்ளிலவ மரம்,[87] வேங்கை மரம்,[88] வேம்பு[89] முதலிய மர வகைகள் சங்க அகத்திணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

**கொடிகள்**

அடம்பங்கொடி,[90]அல்லிஆம்பல்,[91]அவரைக்கொடி,[92]இண்டங்கொடி,[93]கரந்தைக்கொடி,[94]கருவிளை, நீலப்பைம்போது காக்கணங்கொடி,[95] காந்தள்,[96] செங்கழுநீர்,[97] தமாலம்,[98] தாமரை,[99] தெறுழ்,[100] நறைக்கொடி,[101] நீலமலர்,[102] பவர்,[103] பாகற்கொடி,[104] பிரப்பங்கொடி,[105] பித்திகம்பிச்சி,[106] பீர்க்கங்கொடி,[107] மாணைக்கொடி,[108] மிளகுக்கொடி,[109] முல்லை/தளவம்/மௌவல்/செம்முல்லை,[110] அதிரற் பூ, காட்டுமல்லிகை, குளவி,[111] வயலைக்கொடி,[112] வள்ளைக்கொடி,[113] வள்ளிக்கொடி,[114] ஆகிய கொடிவகைகள் சங்க அகத்திணைப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன.

**செடிகள் புதர்கள்**

அதவம்,[115] அலரி,[116] அரலை,[117] ஆவிரை,[118] இருப்புமுள்,[119] உழுத்தங்காய்,[120] எருக்கம்பூ,[121] எள்,[122] எறுழம்,[123] கள்ளிச்செடி,[124] களாச்செடி,[125] கவலைக்கிழங்கு,[126] கருணைக்கிழங்கு,[127] குருக்கத்தி,[128] குமிழம்,[129] குவளை,[130] குல்லை,[131] குறுக்காண்தட்டை,[132] குறிஞ்சி,[133] கொடிச்சி,[134] செருந்தி,[135] தாழை(கண்டல்),[136] தினை/ஏனல்,[137] தும்பை,[138] நறவம்,[139]நீர்முள்ளிச்செடி/முண்டகம்/கழிமுள்ளி,[140] நெருஞ்சி,[141] பருத்தி,[142] பயிற்றம்பயிறு,[143] பாதிரி,[144] பிடவம்,[145] பெரும்பயிறு,[146] மஞ்சள் கிழங்கு,[147]மரல் கற்றாழை,[148] வரகு[149] ஆகிய செடிகளும் புதர்களும் சங்க அகத்திணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

**புல் வகைகள்**

இருஞ்சாய்/தண்டான் கோரை,[150] நாணல்/வேழம்/கொறுக்கைச்சி,[151] நரந்தம்,[152] செந்நெல்,[153] கரும்பு/வேழம்,[154] பாசி,[155] கோரை,[156] ஆகிய புல் வகைகள் சங்க அகத்திணைப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

இத்தாவர வகைகள் சங்க அகப்பாடல்களில் உவமையாகவும் பாடுபொருளாகவும் அமைந்துள்ளன. இவை ஒரு குறிப்பிட்ட நிலத்திலும் ஒன்றுக்கு மேற்பட்ட நிலங்களிலும் பதிவாகியுள்ளன.

**குறிஞ்சி நிலத்தாவரங்கள்**

அகில், தடாமரம், பலாமரம், மூங்கில், குமிழம், ஓந்தி, காட்டுமல்லிகை கொடி அதிரற்பூ குளவி, கொடிச்சி, கொடிப்பூவும் கோட்டுப்பூவும், பித்திகம் பிச்சி, மாணைக்கொடி, மிளகுக்கொடி, குறுக்கான் தட்டை கொறுக்கச்சி, எருவை, தினை, ஏனல், நரந்தம், குறிஞ்சி, குல்லை, ஆவிரை, நறவம்பூ, குவளை, பாசி, எள் ஆகியவை குறிஞ்சி நிலத்தில் மட்டும் சுட்டப்பட்டுள்ளன.

**முல்லை நிலத்தாவரங்கள்**

காயாம்பூ, கொன்றை, குருந்தம், குரும்பை, தென்னங்குரும்பை, குருந்தம், முல்லை, வரகு, கருணைக்கிழங்கு ஆகியவை முல்லை நிலத்தில் மட்டும் பதிவாகியுள்ளன.

**மருத நிலத்தாவரங்கள்**

காஞ்சிமரம், தென்னைமரம், நறுமோரோடம், செங்கருங்காலி, புளியமரம், மருதமரம், வஞ்சிமரம், ஆம்பல், கரந்தைக்கொடி, பகன்றை, வள்ளைக்கொடி, பாகற்கொடி, உழுத்தங்காய், பெரும்பயிறு, இருஞ்சாய், தண்டான் கோரை ஆகியவை மருத நிலத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளன.

**நெய்தல் நிலத்தாவரங்கள்**

அரையமரம், இலவம், ஆலமரம், இற்றிமரம், கணைய மரம், கல்யாண முருங்கை குரவமரம், கோங்குமரம், நுணாமரம், நொச்சி மரம், பனை மரம், பாதிரி, யாமரம், வாகைமரம்(உழிஞ்சில்), வெட்சிமரம், வெண்கடம்ப மரம், வேலமரம், வேம்பு, வெள்ளோத்திர மரம், வெள்ளிலவ மரம், கள்ளிச்செடி, களாச்செடி, எறுழ மலர்கள், இண்டங்கொடி, அல்லி, மரல், கற்றாழை ஆகியன நெய்தல் நிலத்தில் மட்டும் சுட்டப்பட்டுள்ளன.

## ஐந்திணைத் தாவர வகைப்பாடு

| |
|---|
| **குறிஞ்சி, முல்லை** - |
| **குறிஞ்சி, முல்லை, பாலை** மாமரம், மூங்கில், பிடவம், பீர்க்கங்கொடி, புல் |
| **மருதம் நெய்தல்** நீர் முள்ளிச்செடி, முண்டகம், கழிமுள்ளி, இருப்புமுள் |
| **மருதம் நெய்தல் பாலை** செருந்தி |
| **குறிஞ்சி பாலை** : சந்தனமரம், நெல்லிமரம், கோங்குமரம், இலவம், ஓமை மரம், யாமரம், அசோகு செயலை, கூதளம், குமிழம், குல்லை |
| **முல்லை பாலை** : கொன்றை, வரகு |
| **குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல் பாலை** : நெய்தல், வெண்கடம்ப மரம், குவளை, பனைமரம், ஆம்பல், தாமரை |
| **மருதம் பாலை** : காஞ்சி மரம், பாகற்கொடி |
| **நெய்தல் பாலை** : புங்கமரம் |
| **குறிஞ்சி மருதம் பாலை** :காந்தள், கரும்பு, வேழம், நாணல், கொறுக்கைச்சி |
| **குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல்** : - |
| **குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை** : ஞாழல், நொச்சி மரம், கோரை, செந்நெல், வயலைக்கொடி, நீலமலர் |
| **குறிஞ்சி முல்லை மருதம் பாலை** : குரவமரம் |
| **குறிஞ்சி முல்லை மருதம்** : வாழை |
| **குறிஞ்சி மருதம் நெய்தல்** : - |
| **முல்லை மருதம் நெய்தல் பாலை:** - |
| **குறிஞ்சி முல்லை நெய்தல்** : - |
| **குறிஞ்சி முல்லை மருதம் பாலை** : - |
| **குறிஞ்சி நெய்தல் பாலை** : புன்னை, வள்ளிக்கொடி |
| **முல்லை நெய்தல் பாலை** :ஈங்கை மரம், பித்திகை, சிறு செண்பகம், ஞெமை மரம் |
| **முல்லை மருதம் பாலை** : பகன்றை, வேம்பு |
| **குறிஞ்சி நெய்தல்** : தாழை, எருக்கம்பூ |
| **குறிஞ்சி மருதம்** : பிரப்பங்கொடி, நெருஞ்சி |
| **முல்லை மருதம்** : காக்கணங்கொடி, கருவிளை, நீலப்பைம் போது |
| **முல்லை நெய்தல்** : - |

மேற்கண்ட வகைப்பாட்டினை உற்றுநோக்கும் போது பாலை நிலத்தில் குறிப்பிடப்பட்டுள்ள (பாலைத்திணையில் பதிவாகியுள்ள) மரங்களும் செடி கொடிகளும் பிற திணைகளில் (நிலம்) பதிவாகியுள்ளன. பாலை நிலத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மரங்களும் தாவர வகைகளும் பெரும்பான்மை இளவேனில் காலத்தில் தழைத்துக் காட்சியளிப்பவை. வேனிற் காலத்தில் வெயிலில் வாடாமல் பூத்துக்குலுங்கி இனப்பெருக்கம் செய்வன. ஒரு சில இடங்களில் வெயிலில் இலை தழைகளை உதிர்த்து, தாக்குப்பிடித்து உயிர் வாழும் தாவர வகைகள் பாலை நிலத்திற்குரியவை என்று கூறப்பட்டுள்ளன. பாலைவனப் பகுதியில் உயிர் வாழும் விலங்கான ஒட்டகம் பற்றிய குறிப்பை,

*“குறும்பொறை உணங்கும் ததர்வெள் என்பு*
*கடுங்கால் ஒட்டகத்து அல்குபசி தீர்க்கும்*
*கல்நெடுங் கவலைய கானம் நீந்தி” - அகநா.245:18 (பாலை)*

என்ற பாடலடிகள் மட்டுமே தருகின்றன. இங்கு ஒட்டகம் பாறையிலுள்ள காய்ந்த எலும்புகளைத் தின்னும் அத்தகைய கானத்தைக் கடந்து சென்றான் என்ற குறிப்பு இடம் பெற்றுள்ளது. இதிலிருந்து தலைவன் வடவேங்கடத்தையும் தாண்டி வடதிசைநோக்கி (வட இந்தியாவிற்கோ அல்லது அயல்நாட்டிற்கோ) பொருளீட்ட வாணிப நோக்கோடு அவ்வழி சென்றிருக்கின்றான். ஆனால் பாலை என்ற அமைப்பு தென்னிந்தியாவில் குறிப்பாக தமிழகத்தில் இல்லை என்பதே திண்ணம். வறட்சியில் தண்ணீர் வற்றி காணப்படும் நிலமே பாலை.

கோடை காலத்தில் குன்றுப் பகுதியில் வாழும் மக்களோ அல்லது இவர்களிடையே உள்ள சில குழுவினரோ பிழைப்பிற்காக வழிப்பறியினை நடத்தியிருப்பதும் சாத்தியம். பிரிவு என்னும் உரிப்பொருளைக் கருத்திற்கொண்டு புலவர்களின் புலமை இலக்கணம் பிறழாமல் இருக்கக் கருதி பாலை நிலம் வடிவமைக்கப்பட்டுள்ளது. கல்வி கேள்விகளில் திறமைபெற்ற புலவர்கள் பாலைநிலம் பற்றிய வறட்சிக் கொடுமையைக் கேள்விப்பட்டிருந்தனர். வாணிப நோக்கில் பிறநாட்டுடன் தொடர்புக் கொண்டபோது பாலை நிலம் பற்றி அறிந்திருந்தனர்.

**நிலம்சார் மக்களினம்**

நிலப்பகுதியினை நோக்கியும் தொழில் முறையைக் கொண்டும் தமிழ் மக்கள் பெயர் வழங்கினர். அகத்திணைப் பாடல்களில் அக்குழுவினருக்குரிய பொதுப்பெயர்ப் பதிவுகள் காணப்படுகின்றன.

குறவர்,[157] குறமகள்,[158] வெற்பன்,[159] வேட்டுவர்,[160] கொடிச்சியர்,[161] கானவன்,[162] புனவர்,[163] நாடன்,[164] மலைநாடன்,[165] பெருங்கல் நாடன்,[166] குன்றநாடன்,[167] பெருமலைநாடன்,[168] கானக நாடன்,[169] கானம் கிழவோன்,[170] மலைகிழவோன்,[171]என்று குறிஞ்சி நில மக்களின் பொதுப்பெயர்கள் குறிஞ்சித் திணைப்பாடல்களில் பதிவாகியுள்ளன.

கோவலர்,[172] இடையன்,[173] இடைமகன்,[174] நாடுகிழவோன்,[175] புறவுஅணிநாடன்,[176] புறவின் நாடுகிழவோன்,[177] புன்புலநாடன்,[178] கான்கெழுநாடன்,[179] நல்வயல் ஊரன்,[180] வரையக நாடன்,[181] கானத்தான்,[182] கானவன்,[183] நாடன்,[184] பொதுவன்,[185] ஆயமகன்,[186] ஆயர் மகன்,[187] ஆயர்,[188] ஆய்ச்சியர்,[189] குறும்பொறைநாடன்,[190] வேட்டுவன்[191] என்று முல்லை நில மக்களின் பொதுப்பெயர்கள் முல்லைத்திணைப் பாடல்களில் பதிவாகியுள்ளன.

அகன்துறை ஊரன்,[192] உழவர்,[193] தண்துறை ஊரன்,[194] ஊரன்,[195] யாணர் ஊரன்,[196] துறைகேழ் ஊரன்,[197] அணித்துறை ஊரன்,[198] மூதூர் ஊரன்,[199] கழனி ஊரன்,[200] துறை அணி ஊரன்,[201] புனல் அணி ஊரன்,[202] புனல் ஊரன்,[203] ஆம்பல் நாடு கிழவோன்,[204] ஊர் கிழவோன்,[205] கிழவோன்,[206] பழன ஊரன்,[207] கழனி உழவர்,[208] வளம் கேழ் ஊரன்,[209] பூக்கேழ் ஊரன்,[210] மாநிதிக் கிழவோன்,[211] கழனி ஊரன்,[212] தூண்டில் வேட்டுவன்,[213] நாடன்,[214] கொழுநன்,[215] ஊரவர்,[216] புனல் நல் ஊர,[217] மனையோள்,[218] ஊரன் மகன்,[219] யாணர் ஊரன் மகள்,[220] முதலாட்டி,[221] என மருதநில மக்களின் பொதுப் பெயர்கள் மருதத்திணைப் பாடல்களில் பதிவாகியுள்ளன.

துறைவன்,[222] சேர்ப்பன்,[223] பரதவர்,[224] உமணர்,[225] இனமீன் வேட்டுவர்,[226] கொண்கன்,[227] துறைவன்,[228] துறைகிழவோன்,[229] என நெய்தல் நில மக்களின் பொதுப்பெயர்கள் நெய்தல் திணைப்பாடல்களில் பதிவாகியுள்ளன.

கோவலர்,[230] கானவர்,[231] மழவர்,[232] மறவர்,[233] உழவர்,[234] பரதவர்,[235] நாடன்,[236] எயினர்,[237] இடையர்,[238] மள்ளர்,[239] உமணர்,[240] கள்வர்,[241] உயர்வரை நாடன்,[242] குன்ற நாடன்,[243] மை வரை நாட,[244] இறு வரை நாட,[245] நல் வரை நாடன்,[246] கிழவோன்,[247] மலைகிழவோன்,[248] என மக்கட்பெயர்கள் பாலைத்திணைப் பாடல்களில் பதிவாகியுள்ளன. இப்பெயர்களில் மழவர், மறவர், எயினர், கள்வர் தவிர ஏனைய பொதுப்பெயர்கள் அந்தந்தத் திணைக்குரிய பாடல்களில் மட்டும் அப்பகுதி நிலத்தில் வாழ்ந்த மக்களாகப் பதிவுகள் உள்ளன. ஆனால் பாலைத்திணைப்பாடல்களில் பிற நிலத்திற்குரிய மக்களின்

பொதுப்பெயர்களும் அவர்களின் இயல்பு வாழ்க்கையும் பதிவு செய்யப்பட்டுள்ளன. தமிழக நிலப்பகுதியில் வாழ்ந்த மக்கள் (ஆண்கள் மட்டும்) பொருளை ஈட்டல் பொருட்டுக் குடும்பத்தைப் பிரிந்து வணிகம் அல்லது வேறு தொழில் தொடர்பாகச் சென்ற பிரிவை உணர்த்தும் உணர்ச்சிகளைப் பாலைத்திணைப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. அங்கு வாழும் மக்களின் வாழ்வை வெளிப்படுத்தும் ஒரு கானல் நீர் போன்று பாலை நிலம் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. வறட்சியுற்ற காலத்தில் தொழில் எதுவும் நிகழாத பொழுது மக்கள் வாழ்வாதாரத்திற்காகத் தொழில் தேடி வேறு இடத்திற்குப் புலம்பெயர்ந்தனர்; இதனை நோக்க வறண்ட நிலப்பகுதியில் எயினர், மறவர், மழவர், கள்வர் ஆகியோர் கொள்ளைத் தொழிலில் ஈடுபட்ட ஒரு இனக்குழுவினராகப் பதிவுகள் கிடைக்கின்றன.

**சங்க கால உறைவிடம்**

பண்டைய மாந்தர்க்கு மரமே வீடாக இருந்தது. பழங்குடி மக்களின் வீடுகளை உற்று நோக்கும் பொழுது சங்க மக்களின் வீட்டின் அமைப்பு புலப்படும். பழங்குடி மக்களின் வீடுகள் எல்லாம் அடர்ந்த மரத்தின் மேற்கூரையைப் போலவே அமைந்திருக்கும். மரத்தைப் பார்த்தே வீடுகள் அனைத்தும் மரங்களாலும் ஓலைகளாலும் மரம் போன்ற கூம்பு வடிவில் கட்டப்பட்டன. இன்றும் மழை பொழியும் நேரங்களில் இக்கட்டான சூழ்நிலையில் சாலையில் சிக்கிக் கொள்ளும் மனிதர்கள் மரத்தின் அடிப்பகுதிக்குச் சென்று தம்மை மழையிலிருந்து பாதுகாத்துக் கொள்கின்றனர். இவ்வெண்ணம் அக்கால மக்களிடத்தும் இருந்தது. அதன் வெளிப்பாடே மனிதர்களின் வீடுகள். அவ்வீட்டின் கூரை மேலே பல கொடிகளும் படரவிடப்பட்டன. தென்னிந்திய மலை வாழ் மக்களின் வாழ்விடங்களில் மரமுகப்பை நினைவுப்படுத்தும் போக்கிலேயே கூரைவீடுகள் அமைந்துள்ளன. சங்க காலத்தில் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த தமிழர்கள் தம் நிலப்பரப்பில் கிடைக்கக்கூடிய பொருட்களைக் கொண்டு உறைவிடத்தினை அமைத்துக் கொண்டனர்.

மரத்தினாலும் ஓலைத்தழைகளாலும் சிறிய அளவில் அமைக்கப்பட்ட குடிலைக்‘குரம்பை’ என்று அழைத்தனர். கற்கள் கொண்டு உயரமாகக் கட்டப்பட்ட கட்டிடத்தை மாளிகை என்றனர். இவ்விரு வகை அமைப்பிலும் உறைவிடம் அமைந்திருந்ததைச் சங்கப் பனுவல் பகர்கிறது. இவ்விரு

உறைவிடங்களில் வீதிகள் அமைத்தும் ஒழுங்கு முறையில் குடியிருப்புகள் அமைத்தும் சங்ககால மக்கள் வாழ்ந்துள்ளனர்.

**குரம்பை**

மரத்தின் தழையைக் கொண்டு அமைக்கப்பட்ட சிறுகுடில் குரம்பை எனப்படும். இது ஏழை எளியவர்கள் வாழும் இல்லமாகும்.

*“படலைப் பந்தர் புல்வேய் குரம்பை*
*நல்கூர் சீறூர் எல்லித் தங்கி”* - *(அகநா.87:3-4)*

என்ற பாடலடிகள் கொடிகளால் படரவிடப்பட்ட புல்லால் வேய்ந்த மேற்கூரையை உடைய உறைவிட அமைப்பை எடுத்துரைக்கிறது. முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் கூரை வேய்ந்த வீட்டில் வாழ்ந்தனர்.

*“உளிறைக்குரீஇக் காரணற் சேவல்”– (நற்.181:1)*

என்னும் பாடலடியில் இறை என்பது கூரையைக் குறிப்பிடும். இறவாணம் வைத்துக் கட்டப்பட்ட அமைப்பை இறை என்னும் சொல் உணர்த்துகிறது. இறவாணம் என்பது கூரையை மரக்கழிகள், தழைகள் கொண்டு சாய்தள அமைப்பில் கட்டப்படுவதாகும். இச்சாய்தளம் மழை நீரை வடித்துவிடுவதற்கு ஏதுவான அமைப்பாகும். காட்டினை நிலப்பரப்பாகக் கொண்ட முல்லைநிலம் மழை மிகக் கிடைக்கக் கூடிய பகுதியாகும். அதுவுமின்றி மலை அடிவாரம் முல்லை நிலமாகும். இச்சாய்தளக் குடியிருப்பு அமைப்பு புயல், மழை, காற்றால் எளிதில் பாதிப்பிற்கு உள்ளாகாது. எவ்வகை நிலப்பரப்பாக இருந்தாலும் உறைவிடக் கட்டுமானத்தைத் தொடங்கும் முன் இயற்கையில் வளரும் மரங்களின் வளர்ச்சியை உற்று நோக்க வேண்டும். அம்மரங்கள் $30^0$ கோணத்தில் புவிப்பரப்பிற்கு மேலே வளர்ந்திருந்தால் அவ்விடம் குடியிருப்பை அமைக்க ஏதுவாக இருக்காது. அந்நிலம் எந்நேரத்திலும் மழை வெள்ளத்தால் மண் சரிவுக்குள்ளாகும். இதனை அறிந்த சங்கத் தமிழர் தம் குடியிருப்புகளை மழைநீர் வடியும் முறையில் ஏற்படுத்தியுள்ளனர்.

இக்குரம்பையைச் சுற்றி உயிர்வேலிகள் அமைக்கப்பட்டிருந்தன. அவ்வுயிர்வேலிகள் நொச்சிச் செடியைக் கொண்டு அமைத்திருந்தனர். அந்நொச்சிச் செடியின் ஊடே முல்லைக் கொடியையும் படரவிட்டிருந்தனர். இதனை,

*“மயிலடி இலைய மாக்குரல் நொச்சி*
*மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழ”– (அகநா.115:5-6)*

*"வேலி சுற்றிய வால்வீ முல்லைப்*
*பெருந்தார் கமழும் விருந்து ஒலி"– (அகநா.314:19-20)*

என்ற அடிகள் உணர்த்தும். இங்கு நொச்சி என்பது நச்சுப்பூச்சிகள் நெருங்க விடாமல் தடுக்கும் தன்மையுடையது. நொச்சியின் காற்று, சுவாசக்கோளாறுகள் வராமல் தடுக்கும். முல்லைக்கொடி நறுமணம் கமழும் இயல்புடையது.

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மக்கள் முண்டகம் என்னும் முள்ளிச்செடிகளால் வேய்ந்த குறுகிய கூரையையுடைய குரம்பையை அமைத்து வாழ்ந்தனர். கண்டல் என்னும் தாழைப் புதரால் உயிர்வேலியை அமைத்தனர். இக்குரம்பையானது நடுவில் கால் ஊன்றிக் கட்டப்பட்ட அமைப்பையுடையது. இதனை,

*"நடுகாற் குரம்பைத் தன் குடிவயிற் பெயரும்"– (நற்.285:7)*

என்று குறிப்பிடுகின்றது. குன்றத்தில் வாழும் குறவன் புல்லால் வேய்ந்த குரம்பையை அமைத்தான். குன்றத்தில் கிடைக்கும் புல்லானது பைஞ்சாய்க் கோரையும், ஊகம் புல்லும் ஆகும். இவற்றால் அமைந்த குரம்பையை,"குன்றக் குறவன் புல்வேய் குரம்பை" - (ஐங்.252:1) என்ற பாடலடிகள் புலப்படுத்தும். பாலை நிலக் குரம்பைகள் "புல்வேய் குரம்பை"– (அகநா.369:23) (குறுந்.235:5) 'தேக்கின் அகல் இலை கவித்த புதல்போல் குரம்பை' (அகநா.315:16) என்று சுட்டப்பெறுகிறது.

இவற்றால் சங்கத் தமிழர் சுற்றுப்புறச் சூழல்களில் கிடைக்கும் இயற்கையான பொருட்களைக் கொண்டு குரம்பை, குறுங்கூரையைக் கொண்ட குடில்கள் ஆகியவற்றை அமைத்து இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்துள்ளனர் என்பது தெளிவாகும்.

**மாளிகைகள்**

வசதிப்படைத்தவர்கள் கற்களால் அமைக்கப்பட்ட மாட மாளிகையில் வாழ்ந்தனர். பளிங்குக் கற்களைக் கண்டறிந்து அறுத்தெடுத்து, அவற்றைப் பயன்படுத்தி மாளிகைகள் எழுப்பப்பட்டன. (மைஇல் பளிங்கின் அன்ன – அகநா.399:14) செம்பை உருக்கி ஊற்றி கோட்டை எழுப்பும் தொழில்நுட்பம் கண்டறிந்திருந்தனர் (செம்பு உறழ் புரிசைப் பாழி நாறி – அகநா.375:13) மாளிகைக் கட்டுமானம், கருங்கற்களால் உயரமாகக் கட்டப்பட்டது. தூங்குவதற்குத் தனிஅறை என்ற அமைப்பு இருந்தது. அதனை நிவந்தபள்ளி

என்று அழைத்தனர். (அகநா.93:12-14). மாடத்தின் முற்றமானது பிறை வடிவில் சுதை மண் கொண்டு அமைக்கப்பட்டிருந்தது (சுதை மாடத்து அணி நிலா முற்றம் - கலித்.96:20). கோட்டையைச் சுற்றி விண்ணைத்தொட்டு நிற்கும் மதில் சுவரை அமைத்தனர். அம்மதில் சுவர் அரைத்த மண்ணால் ஆக்கப்பட்டது. ஆகையால் 'அரைமண் இஞ்சி' என்று கோட்டை மதில் சுவரைக் குறிப்பிட்டனர் (வான்தோய் இஞ்சி –அகநா.195:3). இவை அனைத்தும் சங்ககாலத் தமிழ் மக்களின் கட்டடம் கட்டும் தொழில்நுட்பத் திறனை வெளிக்காட்டுவதாக அமைகின்றன.

**குடியிருப்பு முறை**

நான்கு வகை நிலப்பகுதியிலும் சிறிய குடில்கள் நிறைந்த குடியிருப்புப் பகுதியை சிறுகுடி,(249) சீறூர்,(250) சேரி,(251) ஊர்(252) என்று அழைத்தனர். குடிகள் நிறைந்த ஊர் சீறூர்(253) என்றும் செறிந்த சேரிகள் நிறைந்ததும் சீறூரின் தொகுப்பும் மூதூர்(254) என்றும் வழங்கப்பட்டன. பரதவர் குடிகள் நிறைந்தது சிறுகுடிப்பாக்கம் (அகநா.70:1-2) என்று பதிவுகள் உள்ளன. மாளிகைகள் நிறைந்த ஊர் நகர்,(255) நெடுநகர்(256) என்றும் அழைக்கப்பட்டன.

குடியிருப்புப் பகுதிகள் வீதிகள் கொண்டு ஒழுங்கு முறையில் அமைக்கப்பட்டிருந்தன. வீதி குறித்து,

*"...................... மறுகில்*
*நல்லோள் கணவன் இவனெனப்*
*பல்லோர் கூறயாஅம் நாணுகஞ் சிறிதே"– (குறுந்.14:4-5)*
*"மறுகுதொறு புலாவும் சிறுகுடி அரவம்"– (நற்.114:3)*

என்ற பாடலடிகளில் எடுத்துரைக்கும். 'மறுகு' என்னும் சொல் வீதியைக் குறிக்கும்.

தம் நிலம் சார்ந்த சுற்றுச்சூழலில் கிடைக்கக்கூடிய இயற்கைப் பொருட்களைக் கொண்டு சங்க மக்கள் ஏற்படுத்திக் கொண்ட உறைவிடம் குறித்துச் சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. அவர்கள் இயற்கையில் கிடைக்கும் மண், கல், நார், மரம், செடி, கொடிகளை வைத்துத் தம் இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். இயற்கைப் பொருட்களைக் கொண்டு சிறிய அளவில் இருப்பிடத்தை அமைத்துக் கொண்டு வாழும் பகுதியைச் சிறுகுடி என்றும் பெரிய அளவில் மிக உயர்ந்த கட்டட அமைப்புகளைக் கொண்டு வாழும் இடங்களை நெடுநகர் என்றும் அழைத்தனர்.

**சங்க மக்களின் உணவுமுறை**

சங்க மக்கள் தத்தம் நிலத்தில் விளைந்த தானியங்களையும் அருகிலுள்ள பிற நிலத்திலிருந்து கிடைக்கப்பெற்ற தானியங்களையும் உயிரினங்களையும் சுட்டும் அவித்தும் பக்குவப்படுத்திச் சமைத்தும் உண்டனர். அவ்வகையில் பால் கலந்த உணவு, ஊன் உணவு, கள்ளுணவு என்பன முதன்மை பெறுகின்றன.

**பால் கலந்த உணவு**

சங்க கால மக்கள் பாலை நன்கு காய்ச்சிப் பயன்படுத்தினர். அது ‘அடுபால்’[(257)] எனப்பட்டது. பாலின் இனிமைச் சுவைகருதி அதனைப் பயன்படுத்தினர். அச்சுவை தேமாம்பழத்தை ஒத்திருக்கும் எனக் குறுந்தொகை.(201:1-4) குறிப்பிட்டுள்ளது. பாலைநிலத்தில் திருமணம் முடிந்து புதுமனை புகுந்த மணமகள், பாலை உலை நீராக வார்த்து உணவு சமைத்தனள்.[(258)] நீர் இல்லாத வறண்ட பாலை நிலத்தில் பால் உலை நீராகப் பயன்படுத்தப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. பால் கலந்த உணவை ‘பாலுடை அடிசில்’[(259)] என்றனர். ஆடு மேய்ப்பவர்கள் இரவில் மேய்ச்சல் நிலத்தில் தங்குவது இயல்பு. அந்நாளில் இடையர் மாலையில் கறந்த பாலைத் தன் வீட்டில் கொண்டு வந்து கொடுத்து இரவு உணவுக்குப் பாற்சோற்றை எடுத்து சென்றுள்ளனர்.[(260)] புல்லி என்பானது நாட்டில் இடையர் சமைத்த அவிழ்சோற்றை நல்ல பசுவின் பாலுடன் கலந்து கூட்டி அளித்துள்ளனர்.[(261)] பண்டைத்தமிழர் பாற்சோற்றைத் தாம் உண்டதோடு மட்டுமின்றி வழிச்செல்வோருக்கும் அளிக்கும் விருந்தோம்பல் பண்பு குறிப்பிடத்தக்கது. தாய் தன் குழந்தைக்குப் பால் உணவு அளிக்கும் பொழுது அதனை மறுத்த சிறுமியிடம் தாய் தனக்காக ஒரு வாயும் தந்தைக்காக ஒரு வாயும் வாங்கிக் கொள் என்றுரைத்து ஊட்டியது (அகநா.219:5-7) குறிப்பிடத்தக்கதாகும். பாலுணவை வெறுத்த பாலைநிலத் தலைவியை அவளது கூந்தலைக் கோதி, நயமொழிகளைக் கூறித் தாய் ஊட்டியுள்ளாள்.[(262)] இவற்றால் சங்ககால மக்களின் உணவில் பால் பெற்றிருந்த இடத்தை அறிய இயலும். பாலைநிலத்து மக்கள் கொள்ளினையும் பயற்றினையும் பாலுடன் கலந்து சமைத்து வெள்ளிய அவில் கஞ்சியை வேண்டுமளவிற்கு உண்டுள்ளனர்.[(263)] பாலுடன் தேன் கலந்த உணவையும் உண்டுள்ளனர். தேன் கலந்த பாலை ‘பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்’

(நற்.110:1) என்று அழைத்தனர். பாலுடன் தேன் கலந்த உணவை சங்கத் தமிழர் மிகவும் விரும்பினர். [264]

சங்கத்தமிழர் பாலைக் காய்ச்சிப் பயன்படுத்தியது குறிப்பிடத்தக்கதாகும். காய்ச்சாத பால் விரைவில் கெட்டுவிடும். அதேசமயம் அப்பாலில் கிருமிகளின் தாக்கம் இருக்கும். காய்ச்சாத பால் செரிமானக் கோளாறுகளைத் தோற்றுவிக்கும். ஆகையால் அறிவியல் சார்ந்த இவ்வழக்கத்தைச் சங்கத்தமிழர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கொண்டிருப்பது அவர்தம் அறிவியல் அறிவைப் புலப்படுத்தும்.

காய்ச்சிய பாலின் அடுத்த நிலை தயிர். சங்க கால மக்கள் பாலில் உறையிட்டுத் தயிராக்கியுள்ளனர். உறையிட்டு உறைய வைத்த பால் தயிராக மாறுகின்றது. நன்கு முதிர்ந்த தயிரை முளித்தயிர் (குறுந்.167:1) என்றனர். தயிரைக் கரைத்துப் புளிக்குழம்பு செய்வது சங்ககால மகளிரின் உணவு சமைக்கும் முறைகளில் ஒன்றாகும். இதனைத் தற்காலத்தில் மோர்க்குழம்பு எனக் குறிப்பிடுகின்றனர். இறுதியில் முற்றிய தயிரை முல்லைநிலத் தலைவி புளிக்குழம்பு செய்யும் பொருட்டுத் தன் மெல்விரலால் துழாவித் தாளித்துச் செய்தாள். அதனை உண்ட தலைவன் இனிதெனக் கூறியதைக் கூடலூர்கிழார் (குறுந்.67:1-5) விளக்கியுள்ளார். தயிரும் வரகும் ஈயலும் கலந்து சமைக்கப்பட்ட சோறு ‘இன்புளி வெஞ்சோறு’ என அழைக்கப்பட்டது. பாலைநிலத்துத் தலைவி செம்மறியாட்டின் முற்றிய தயிரை உலையில் ஊற்றினாள். கொல்லையில் விளைந்த வரகினது அரிசியுடன் கார்காலத்தில் புற்றிலிருந்து வெளிப்பட்ட ஈயலைச் சேர்த்து இன்புளிவெஞ்சோறு சமைத்தனள். சூடான அச்சோற்றின் மீது பசுவின் வெண்ணெயை உருக்கி ஊற்றினாள். அதனை ஏவலருக்கு முதலில் அளித்துப் பின் அவளும் அவளது கணவனும் செம்மண்பூசிய இல்லில் உண்டதை அகநானூறு குறிப்பிடுகின்றது.[265]

முல்லைநில மக்கள் மோரை அதிகமாகப் பயன்படுத்திய குறிப்புகள் காணப்படுகின்றன.[265] இவர்கள் ஆநிரை, ஆடு, எருமை போன்றவற்றை வளர்ப்பு விலங்குகளாகக் கொண்டு மேய்த்தல் தொழில் செய்து வந்தனர். எனவே இவ்விலங்குகளின்வழிக் கிடைத்த உணவுப் பொருட்களை இவர்கள் அதிகமாக உண்டிருப்பதும் இயல்பாகும்.

வெண்ணெயை உருக்கி எடுக்கும் பொருள் நெய். இந்நெய்யைச் சங்கத்தமிழர் தம் உணவில் சேர்த்துள்ளனர். குறும்பூழ் என்னும் காடையின் இறைச்சியை நெய்யில் பொறித்து உண்டுள்ளனர்.[(266)]

**ஊன் உணவுகள்**

சங்க கால மக்களின் உணவில் ஊன் உணவு முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. ஊன் கலந்த உணவு 'ஊன் புழுக்கு' (அகநா.119:9, 172:13, 309:6, 315:17) ஊன் (ஐங்.391:3) வல்சி (ஐங்.364:1) (365:1-3) என்று அழைக்கப்பட்டன.

ஒரு நிலத்தில் உணவுக்காகப் பயன்படுத்திய விலங்கைப் பிறிதொரு நிலத்திலும் பயன்படுத்தியுள்ளனர். சங்கத்தமிழர் விலங்குகளின் ஊனை மிகவும் விரும்பி உண்டுள்ளனர். இதனைப் பல பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

**களிறின் ஊன்**

சங்க கால மக்களுக்குப் பல்வேறு வழிகளில் உதவிய யானை, அம்மக்களின் உணவாகவும் பயன்பட்டுள்ளது. மருத நிலத்தூரில் பாண்டியனின் படைகள் பயிற்சியில் ஈடுபட்டன. அதில் களிறு ஒன்று இறந்துபட்டது. இறந்த களிற்றின் ஊனைப் பாணன் உணவாகப் பெற்றுள்ளான் (அகநா.106:10-12). பாலைநிலத்தில் புலி கொன்று தின்ற பெரிய யானையின் ஊன் எஞ்சிக் கிடந்தது. அவ்வூனை உணவாகும் என்று கருதி ஆறலை கள்வர் கோலிற் கோர்த்துக் கொண்டு சென்றதையும், அவ்வழியில் உப்பு வண்டி செலுத்தி வந்த உப்பு வணிகர் மீதமுள்ள அக்களிற்றின் ஊனைச் சிறு தீயில் வதக்கி உண்டமையையும் தொண்டி ஆமூர்ச்சாத்தனார் விளக்குவர்.[(267)]

**ஆடு, வெள்ளெலி உணவு**

*"மை ஊன் தெரிந்த நெய் வெண் புழுக்கல்*
*எலி வான் சூட்டொடு மலியப் பேணுதும்"– (அகநா.83: 5-6)*

என்ற பாடலடிகளில் ஆட்டிறைச்சியுடன் நெய்கலந்தும் வெண்மையான சோற்றில் வெள்ளெலியின் சூட்டிறைச்சியைச் சேர்த்தும் விருந்தோம்பியமை இடம் பெற்றுள்ளது. இதனால் சங்க மக்கள் ஆட்டிறைச்சியையும், வெள்ளெலியின் ஊனையும் விரும்பி உண்டது புலப்படும்.

**பன்றிக் கறி உணவு**

கானவன் வேட்டைக்குச் சென்று பன்றியை வேட்டையாடினான். அதனைத் தன் மனையாளிடத்துக் கொண்டு வந்து கொடுத்தான். அவள் அப்பன்றியின்

ஊனைத் தத்தம் குடியிருப்பில் உள்ள அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குப் பகுத்துக் கொடுத்தாள் (நற்3361-5). இங்கு பன்றியின் இறைச்சி உணவுக்காகப் பகுத்துக் கொடுக்கப்பட்ட முறை புலப்படுகிறது. இனக்குழுவாக வாழ்ந்த மக்கள் தங்களுக்குக் கிடைத்த உணவுப் பொருட்களைப் பங்கிட்டுக் கொள்வர். இது சங்கத் தமிழரிடம் காணப்பட்ட உணவுப் பங்கீட்டு முறையை எடுத்தியம்புகிறது.

**முயல் ஊன்**

சங்க கால மக்கள் வேட்டையாடி உணவில் பயன்படுத்திய விலங்கு முயல் ஆகும். இம்முயலை வேட்டுவர் நாய் கொண்டு வேட்டையாடினர். வேட்டுவன் உணவுக்காக முயலுடன் பல விலங்குகளையும் வேட்டையாடி அவற்றைத் தன் தோளில் சுமந்தபடி வீட்டில் கொணர்ந்து சேர்த்ததை நற்றிணை உரைக்கின்றது. (நற்.59:3-5)

**முளவுமா ஊன்**

பாலை நிலத்தில் வாழும் எயினர்கள் முள்ளம் பன்றியின் இறைச்சியை உணவாகக் கொண்டுள்ளனர். (ஐங். 364: 1)

**மானின் ஊன்**

முல்லை நிலத் தோட்டத்தில் தினைக் கள் உண்ட மறவர்கள் புல்வாய் மானை அம்பெய்து வேட்டையாடி அம்மானின் ஊனைச் சமைத்து உண்டுள்ளனர். (அகநா.284:8-11) வெப்பமுடைய செந்நாய் மரைமானைக் கொன்று தின்றது. செந்நாய் தின்றொழிந்த மிச்சில் ஊன், வேற்று நாட்டிலிருந்து பாலை நிலத்தின் வழிச் செல்லும் மாந்தர் உண்ணுவதற்குரிய உணவாக விளங்கியது (நற்.43:1-5) செந்நாய் போன்ற விலங்குகள் உண்ட மிச்சிலாகிய மானின் ஊனை வழிப்போக்கர்கள் உண்டு சென்றமை குறிப்பிடத்தக்கது. புலி மானேற்றைக் கொன்று தின்றது. எஞ்சிய இறைச்சி காய்ந்து கிடந்தது. பாலைநில வழிச் செல்லும் புதியர் காய்ந்த அத்தசையைக் கண்டு மகிழ்ந்தனர். அதனை எடுத்துச் சென்று சமைத்துண்டனர் (அகநா.107:5-10). காய்ந்த மான் தசையினையும் மக்கள் உணவில் சேர்த்து உண்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

வேட்டைக்குச் செல்வோரின் வேட்டையில் பல விலங்குகளின் இறைச்சி கிடைப்பதுண்டு. அவ்வூனை இல்லத்திற்குக் கொண்டு வந்துள்ளனர். அங்ஙனம் கொண்டு வந்த ஊனைப் பாலை நிலத்து எயிற்றியர் பறவைகள் கொத்திக் கொண்டு செல்லாமல் இருக்கக் காவல் காத்துள்ளனர். (ஐங்.365: 1-3)

**திருமணத்தில் ஊன் உணவு**

சங்கத் தமிழர் திருமணத்தில் ஊன் உணவு படைத்தனர். மருத நிலத்தூரார் புள் நிமித்தம் பார்த்துத் திருமணம் நடத்தினர். அத்திருமணத்திற்கு வந்திருந்த சுற்றத்தாருக்கு இறைச்சியுடன் கலந்த சோற்றைச் சமைத்து நெய்மிக இட்டு வழங்கியுள்ளனர் (அகநா.136: 1-2). பாலை நிலத்தில் உடன்போக்கு மேற்கொண்டோர், தேக்குமர இலையில் குவிக்கப் பெற்ற ஊனினை உண்ணும் சீறூரில் தங்கினர். அவ்வூரார் அவர்கட்கு ஊன் உணவு அளித்தனர். தலை மக்கள் அவ்வுணவை உண்டுள்ளனர் (அகநா.315: 15-18).

**கல் அடுப்பில் சமைத்தல்**

வழிப்போக்கர்கள் சுரவழியில் செல்லும்பொழுது அவ்விடத்தில் கிடைக்கும் பொருட்களை வைத்து உணவு சமைத்து உண்டு செல்வர். பாலை நில வழியில் சென்ற உப்பு வணிகர், கல் அடுப்பில் உணவு சமைத்து உண்டு சென்றனர். அவ்வழியில் வந்த வில்லையுடைய மழவர் படையும் அக்கல் அடுப்பில் மணம் உண்டாக ஊனைப் புழுக்கி உண்டுள்ளனர். (அகநா.119.:8-10)

குறிஞ்சி நிலத் தலைவன் மதுவினை உண்டு தன் சுற்றத்தினரோடு ஆரவாரம் செய்து, பின் சந்தன விறகால் சமைத்த ஊன் உணவை உண்டுள்ளனர் (அகநா.172:12-14). வேட்டைக்குச் செல்வோர் யானை வேட்டை புரிந்த பின், அதன் கோட்டை (தந்தத்தை) வீட்டின் முன் ஊன்றி தம் சுற்றத்தாருடன் சந்தன விறகால் கல் அடுப்பில் சமைத்த ஊன் சோற்றை உண்டு மகிழ்ந்தனர் (அகநா.172:11-14). சங்க காலத்தில் வழிப்போக்கிடத்திலும் இல்லத்திலும் கல் அடுப்பைப் பயன்படுத்தி ஊன் சமைத்து உண்டிருப்பது சுட்டத்தக்கது.

**மீன் உணவு**

மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் அங்குள்ள நீர் நிலைகளில் கிடைக்கும் மீன்களைத் தம் உணவில் சேர்த்துள்ளனர்.

*“வாளை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇ*
*புகை உண்டு அமர்ந்த கண்ணாள், தகை பெறப்*
*பிறை நுதல் பொறித்த சிறு நுண் பல்வியர்*
*அம் துகில் தலையில் துடையினள்”– (நற்.120:5-8)*

என்ற பாடலடிகளில் மருதநிலப் பெண் வாளை மீனைச் சமைத்ததாகச் செய்தி பெறப்படுகிறது.

உப்பு விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட மூரலாகிய வெண்சோற்றை அயிலை மீனை இட்டு ஆக்கிய சுவை மிகுந்த புளிங்கறியை அதிலே ஊற்றிக் கொழுமீன் கருவாட்டுடன் தன் தந்தைக்கு அவனுடைய மகள் உணவாகக் கொடுத்ததிலிருந்து (அகநா.60:4-6) மீன் உணவு சிறப்புப் பெற்றிருந்தமை புலனாகும்.

**நெற்சோறு**

சங்கத் தமிழரின் தானிய உணவு வகைகளில் நெற்சோறு முக்கிய இடத்தைப் பெறுகிறது. மலையில் விளைந்த நெல்லை 'ஐவனநெல்' என்று அழைத்தனர். மருதநில வயல்களில் செந்நெல் பயிரிடப்பட்டுப் பயன்படுத்தப்பட்டன.

*''மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி*
*ஐவன வெண்ணெல் குறூஉம் நாடனொடு''– (நற்.373:3-4)*

என்ற பாடலடிகளில் முகில் தவழும் மலையைப் பாடிக் கொண்டே ஐவனமாகிய வெண்ணெல்லைக் குத்தி பக்குவப்படுத்தியுள்ளனர். நெல்லைக் குத்தி எடுத்தால் அரிசி கிடைக்கும். அவ்வரிசியை உணவாகப் பயன்படுத்தியுள்ளனர். ஐவனம் என்பது மலைப் பகுதியில் விளையக்கூடிய நெல் வகையாகும். (நற்.43:1-4) மூங்கில் அரிசியை உணவிற்காகப் பயன்படுத்தியதை,

*''..............................வயகளிற்றுக்*
*கோடு உலக்கையாக நல்சேம்பின் இலைசுளகாக*
*ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து இருவாம்''*
*– (கலித்.41:1-3)*

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**பாசவல்**

இறைச்சி, பால், கரும்புப்பாகு, செந்நெல்லரிசி ஆகிவற்றுடன் கலந்து செய்த கலவை 'பாசவல்' எனப்படும். பாலைநிலத்தலைவன் பாணருக்குப் பாசவல் பகுத்துக் கொடுத்ததை (அகநா.237:9-14) தாயங்கண்ணனார் சுட்டுவர்.

**ஆலங்கட்டியைச் சேகரித்தல்**

மலைப்பாங்கான பகுதிகளில் சிறு பனிக்கட்டிகளுடன் சேர்ந்து பொழியும் மழைப்பொழிவு ஆலங்கட்டி மழை எனப்படும். இதனை,

*''நறுவடி மாஅத்து மூக்கிறுபு உதிர்ந்த*
*ஈர்ந்தண்ண பெருவடு, பாலையில் குறவர்*
*உறைவீழ் ஆலியின், தொகுக்கும் சாரல்*

*மீமிசை நல் நாட்டவர் வரின்*
*யான் உயிர் வாழ்தல் கூடும் - அன்னாய்''– (ஐங்.213:1-4)*

என்னும் பாடல் உணர்த்தும். இங்கு குறிஞ்சி நிலத்தில் கோடையின் பொழுது குறவர்கள் சேகரிக்கும் ஆலங்கட்டி மழை பற்றிய குறிப்பு காணப்படுகிறது. ஆலங்கட்டி மழை என்பது மலைப்பகுதியில் அரிதாகப் பொழியும். அப்பனிக் கட்டிகளைக் குறவர்கள் சேகரித்தனர். இப்பனிக்கட்டிகளைக் கோடைகாலத்தில் தண்ணீர் வேட்கையைப் பூர்த்திச் செய்யும் பொருட்டுச் சேகரித்தனர் எனக் கருத இடமுண்டு.

**மது (தேறல்)**

பழங்களைப் பக்குவப்படுத்தித் தயாரித்த, புளிப்புச்சுவை மிகுந்த பழச்சாறு மது எனப்படும். சங்ககால மக்கள் பலாப்பழத்தினின்று பிழிந்தெடுத்து, அச்சாற்றை மதுவாகத் தயாரித்து உண்டு களித்தனர் (அகநா.172: 11-14). இதற்கு தேறல் என்றும் பெயரிட்டு அழைத்தனர். (அகநா.182:4). மதிக்கு மயக்கத்தைத் தருவது மது. இம்மது என்னும் தேறலை ஆடவரும் பெண்டிரும் உண்டு மகிழ்ந்துள்ளனர் (அகநா.368:14-15). இத்தகைய மதுவினைத் தயாரிக்கும் முறையை அகநானூற்றின் பாடல் எடுத்துரைக்கிறது. மாமரத்தின் நல்ல முதிர்ந்த இனிய சுவையுடைய கனிகளையும் பலாப்பழத்தின் சுளைகளையும் தேனும் கலந்து கூட்டி ஆக்கிய கள்ளினை நீண்ட மூங்கிற் குழாயுள் ஊற்றி அடைத்தனர். நாட்பட்டபின் அப்பழச்சாறு மிகுந்த வீரியம் உடையதாக மாறும். மாறிய பின் அதனை எடுத்து உண்டு களித்தனர். (அகநா.348:1-10) மாமரத்தினின்று காய்களைப் பறித்துப் புதிய குடங்களில் இட்டு அவற்றோடு புளிக்கும் பதனைச் சேர்த்துள்ளனர். அது நன்கு ஊறிய பின் பனையோலைக் குடைகளில் அக்கள்ளை அருந்தியுள்ளனர். (அகநா.37: 6-10)

சங்கத் தமிழரின் உணவுமுறையினை ஆராயும் பொழுது அவர்கள் பால் உணவானாலும் ஊன் உணவானாலும் கள் உணவு ஆனாலும் பக்குவப்படுத்தி முறையாகச் சமைத்து உண்டுள்ளனர் என்பது வெளிப்படுகிறது. எந்த உணவை எவ்வகையில் எம்முறையில் பக்குவப்படுத்திச் சமைத்து உண்ண வேண்டும் என்பதனை அறிந்திருந்தனர். ஊன் உணவைப் பச்சையாக உண்ட செய்தி காணப்படவில்லை. கல் அடுப்பில் நெருப்பு மூட்டி மட்கலம் கொண்டு சமைத்து உண்டுள்ளனர். இது ஆதிகாலச் சமூக வாழ்வில் உணவு முறையில் ஏற்பட்ட பரிணாம வளர்ச்சியின் செம்மை நிலையைக் காட்டுகிறது. இவற்றால் சங்கக்

தமிழர் உணவினைச் சமைத்து உண்ணும் முறையில் சிறப்புற்று விளங்கியமை தெளிவாகும்.

**சங்க கால மக்களின் புழங்குபொருட்கள்**

மனித சமூகங்கள் எல்லாம் தாம் வாழும் சுற்றுச் சூழலுக்கும் காலத்திற்கும் ஏற்ப வாழ்ந்தாக வேண்டும். இம்முறையில் சமூகங்கள் தத்தம் சொந்தத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளும் நோக்கத்திற்கு ஏற்ப இயற்கை வளங்களைப் பயன்படுத்தி செயற்கைப் பொருட்களை வடிவமைக்கப் பல்வேறு அணுகுமுறைகளை வளர்த்தெடுத்துள்ளன. அவ்வாறு இயற்கை வளங்களைப் பண்பாட்டுப் படைப்புகளாகவும் கலைப் படைப்புகளாகவும் மாற்றிப் பயன்படுத்தப்படும் பொருட்களே புழங்கு பொருட்கள் எனப்படும். இப்புழங்கு பொருட்கள் குறித்துச் சங்க இலக்கியங்களில் புலவர்கள் பதிவு செய்துள்ளனர். அப்பதிவுகள்வழிச் சங்ககால மக்கள் பயன்படுத்திய புழங்கு பொருட்களை,

1) கற்கருவிகள்
2) மண்கருவிகள்
3) மரக்கருவிகள்
4) உலோகக்கருவிகள்
5) தோற்கருவிகள்

என ஐந்தாகப் பாகுபடுத்த இயலும்.

**கற்ருவிகள்**

கல்லாலான கருவிகள் குறித்துச் சங்க இலக்கியத்தில் அதிகம் பதிவுகளில்லை. கலித்தொகையில் பாறையால் இயன்ற உரல் பற்றிய குறிப்பு இடம் பெறுகிறது. இதனை,

*''ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து இருவாம்''*
*–(கலித்.41:3)*

*''ஐவன வெண்நெல் அறை உரலுள் பெய்து இருவாம்''*
*– (கலித்.43:4)*

என்னும் அடிகள் சுட்டும்.மூங்கில் நெல், வெண்ணெல் ஆகியவற்றைக் குற்றுவதற்குக் கல்லால் இயன்ற உரலைப் பயன்படுத்தியதைக்கலித்தொகை மட்டும் குறிப்பிடுகின்றது.

**உரைகல்**

பொற்கொல்லர்கள் பொன்னை உரைத்துப் பார்ப்பதற்கு உரைகல்லைப் பயன்படுத்துவர். இது 'கட்டளைக் கல்' என்றும் அழைக்கப் பெறும்.

*"பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வர"– (அகநா.178:11)*

என்னும் பாடலடி குறிப்பிடுவதிலிருந்து பொன்னின் தரத்தை அறிவதற்கு உரைகல் பயன்பட்டதை அறிய முடிகிறது.

**மண்ணால் ஆன கருவிகள்**

சங்கத் தமிழர் உணவுப் பொருள்களைச் சேமித்து வைக்க மண்பாண்டங்களைச் செய்து பயன்படுத்தினர். பொதுவாக மண்பாண்டங்கள் தண்ணீர், உணவுப் பொருள்கள் முதலியவற்றைச் சேமித்து வைக்கவும் உணவு சமைக்கவும் சாப்பிடவும் சங்கத் தமிழரால் பயன்படுத்தப்பட்டன.

**குழிசி**

குழிவான அமைப்புக் கொண்ட பானை என்பதால் குழிசி என்று பெயர் பெற்றுள்ளது. உணவு சமைப்பதற்கு இதனை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர். இக்குழிசி களிமண்ணால் செய்யப்பெற்றிருக்கின்றது என்பதை,

*"களிபடு குழிசி கல்அடுப்பு ஏற்றி"–(அகநா.393:15)*

என்பதால் அறிய முடிகிறது. தயிர் கடைவதற்குக் குழிசியைப் பயன்படுத்தியதை "விளம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசி" (நற்.12:1-2) என்பது சுட்டும். அதாவது பாலைக் காய்ச்சித் தயிரையிட்டுத் தோய்த்த தயிர்த்தாழி இயல்பாகவே மணங்கமழும் என்பது பற்றி விளாம்பழம் கமழும் குழிசி என்றார்.

ஊர் மக்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்க ஆவணமாக்கள் கயிற்றாலே வரிந்து கட்டப்பட்ட குடங்களில் பொறிக்கப்பட்ட இலச்சினையை அக்குடத்திலிருந்து ஒவ்வொன்றாக எடுப்பர். இதனை,

*"கயிறு பிணிக் குழிசி ஓலை கொண்மார்*
*பொறி கண்டு அழிக்கும் ஆவணமாக்களின்*
*உயிர் திறம் பெயர"– (அகநா.77:7-8)*

என்னும் அடிகள் விளக்கும். இவ்வாறு அக்காலத்தில் குடவோலை முறையில் மக்கள் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்குக் குழிசியைப் பயன்படுத்தியுள்ளனர்.

இவ்வகையில் சமையல் செய்வதற்குப் பயன்படும் புழங்குபொருளாகவும் ஊர்த் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் குடமாகவும் குழிசியைப் பயன்படுத்தியுள்ளனர்.

**சால்**

சால் என்பது பானையின் பெயர்களுள் ஒன்று. பரிசில் வேண்டி வருவோர் வல்லுநராயினும் அல்லராயினும் அவர்க்குச் சாலிலுள்ள சோற்றை உண்கலம் நிறையும்படி அளிக்கும் வண்மையாளன் என்று ஆய் அண்டிரனின் சிறப்பைக் கூறுமிடத்து,

*''வல்லினும் வல்லார் ஆயினும் சென்றோர்க்குச்*
*சால் அவிழ் நெடுங்குழி நிறைய வீசும்''– (அகநா.152:19-20)*

என்பதில் சால் என்பது மிகப்பெரிய பானை வடிவம் என்பது புலப்படும்.

**தசும்பு**

தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பதற்குச் சுட்டமண்ணால் ஆன தசும்பைப் பயன்படுத்தியதை,

*''சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற*
*பிறவா வெண்ணெல் உருப்பு இடந்தன்ன''– (நற்.84:6-7)*

என்னும் அடிகள் உணர்த்தும். இங்கு மத்து கொண்டு கலக்கும் பொழுது பானை (தசும்பு) உடையாமல் இருக்கும் பொருட்டு வலிமையுடன் செய்திருப்பதும் சங்கச் தமிழரின் தொழில் நுட்ப அறிவை நன்கு விளக்கும்.

**குடம்**

குடமானது பலாப்பழம் போன்று இருந்தது என்பதனை அகநானூற்றின் (352:1) பாடலடி எடுத்துரைக்கிறது. எனவே கீழ்ப்பாகம் பலாப்பழம் போல விரிந்தும் உள்நோக்கி வளைந்தும் அமைக்கப் பெற்ற கலம் குடம் என அறிய முடிகிறது. சமைப்பதற்கு இக்குடம் பயன்படுத்தப் பெற்றதை,

*''....................வண் தளிர் மாஅத்துக்*
*கிளிபோல் காயகிளைத் துணர் வடித்து*
*புளிப்பதன் அமைத்த புதுக்குட மலிர்நிறை''– (அகநா.37:7-9)*

என்னும் அடிகள் சுட்டும். இதனால் சமையல் கலனாகக் குடம் பயன்பட்டமை விளங்கும்.

**சாடி**

இது ஒரு வகை மண்பாண்டமாகும். வடிவம் குறித்துப் பதிவுகள் கிடைக்கப் பெறவில்லை. சங்கத் தமிழர் கள்ளை நிரப்பி வைத்துக் கொள்ளப் பயன்படும் பாண்டமாகச் சாடியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

*''நல்மரம் குழீஇய நனைமுதிர் சாடி*
*பல்நாள் அரிந்த கோஒய் உடைப்பின்''– (அகநா.166:1-2)*

என்னும் அடிகள் விளக்கும்.

**மண்டை**

மண்டை என்பதன் வடிவம் சுட்டப்பெறவில்லை. மாறாக 'பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல' (குறுந்.169:4) என்ற பாடலடியில் மண்டை என்பது பிடித்த மீனைச் சேமித்து வைத்துக் கொள்ளும் கொள்கலனாகப் பயன்பெற்றமை விளங்கும். கள்ளுண்ணும் கலனாகவும் பயன்படுத்தப் பெற்றுள்ளது. [(269)]

**வள்ளம்**

'வள்ளம்' என்பது உண்கலமாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. பால் போன்ற நீர்மப் பொருட்களை இவ்வள்ளத்தில் பெய்துண்டுள்ளனர். இது பால் உண்ணப் பயன்படுத்தப்பட்டமையை,

*''பால் பெய் வள்ளம் சால்கை பற்றி*
*என்பாடு உண்டனை.............''–(அகநா.219:5-6)*
*''சேடியல் வள்ளத்துப் பெய்தபால் சிலகாட்டி''– (கலித்.72:3)*

என்ற பாடல்களின் அடிகள் சுட்டும்.

**மரக்கருவிகள்**

மரங்களிலிருந்து பெறக்கூடிய இலை, நார் முதலியவையும் புழங்குபொருட்களாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. ஆம்பலிலை, தேக்கிலை, வாழையிலை, பனை ஓலை ஆகியவை இயற்கையினின்றும் கிட்டியவை. இவை உணவு உண்ணும் உண்கலனாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**தேக்கிலை**

இவ்விலையை உண்பதற்குரிய கலனாகப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

*''............................................... வெண்சோறு*
*புகர் அரைத் தேக்கின் அகலிலை மாந்தும்''*
*– (அகநா.107: 9-10)*

எனும் பாடலடிகள் சுட்டும்.

**பனையோலை**

சங்க காலமக்கள் திட, திரவப் பொருள்களை வைத்துண்ணப் பனையோலைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.[(270)] அதற்கு ஏற்றாற் போல் பனையோலையைப் பதப்படுத்தியுள்ளனர். இதனை,

*''செய்போழ் வெட்டிய பொய்தல் ஆயம்*
*மாலை விரி நிலவில் பெயர்பு புறங்காண்டற்கு*

*மா இருந் தாழி கவிப்ப'' - நற்.271:9-11*

என்னும் பாடலடிகள் விளக்கும். வெயிலில் பதப்படுத்தினால் பனையோலையின் பக்குவம் குறையுமென்று மாலைப் பொழுதில் நிழலிலே உலர்த்தியுள்ளனர். புளிப்புத் தன்மையுடைய தேறலை உண்பதற்கு இப்பசுங்குடையினைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,'வெயில் வெரிந் நிறுத்த பயில் இதழ்ப் பசுங்குடை' (அகநா.37:10) என்னும் அடி சுட்டும்.

பனையோலை, உண்கலனாகப் பயன்படுத்தப் பெற்றதோடு மட்டுமல்லாமல் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பொருட்களைக் கொண்டு செல்லப் பயன்படும் வட்டிலாகவும் வெயில் மழை இவற்றினின்றும் பாதுகாக்கும் குடையாகவும் பயன்பட்டுள்ளது.

**வட்டில்**

இது பனை ஓலையால் செய்யப்பட்ட பொருள்.(271) உழவர்கள் விதைவிதைக்கப் பயன்படுத்திய வட்டிலை விதைக்குறுவட்டில் என்று அழைத்துள்ளனர். இவ்வட்டிலில் விதைநெல் கொண்டு வயலில் விதைத்த பின்னர் அதில் மலர்ந்த முல்லை மலர்ளைப் பறித்து நிரப்பிக் கொண்டு வந்துள்ளனர்.இதனை,

*''முதைப் புனங்கொன்ற ஆர்கலி உழவர்*
*விதைக் குறுவட்டிபோதொடு பொதுளப்*
*பொழுதோ தான் வந்தன்றே………''– (குறுந்.155:1-2)*

என்னும் அடிகள் விளக்கும். விதை கொண்டு சென்ற கடகப்பெட்டியில் மிகப்பலவாகிய மீன்களைப் பிடித்து வந்துள்ளனர். பாணர்குடிப் பெண்கள் வட்டில் நிறைய மீனைக் கொண்டு வந்து மனையோள் இடத்துக் கொடுத்து பெரும் பயிறு,(272) வெண்ணெல்(273) ஆகியவற்றை வட்டில் நிறையப் பெற்றுப் பண்டமாற்று செய்த முறையும் விளங்கும். ஆய்ச்சியர் மோருக்குப் பதிலாக நெல்லை வட்டிலில் வாங்கிக் கொள்வர். இதனை *'வரிக் கூழ் வட்டி தழீஇ' (கலித். 109:14)* என்பர். இவ்வகையில் உழவர், பாணர், வேட்டுவர், ஆய்ச்சியர் எனப் பல்வேறு தொழில்களைச் செய்பவரும் வட்டிலைப் பயன்படுத்தியுள்ளனர்.

**பறி**

இது ஓலைப்பாய். இப்பாயை ஆயர் குலத்தவர் பெரிதும் பயன்படுத்தினர். இதனை,'பறிப் புறத்து இட்ட பால் நொடை இடையன் - (நற்.142:4),''மறித் துரூஉத் தொகுத்த பறிப் புற இடையன்''– (அகநா.94:4) என்ற பாடல்களின்

அடிகள் சுட்டும். இங்கு ஓலைப்பாயைக் குறிக்கும் சொல்லாகப் ‘பறி’ என்பது இடம் பெற்றுள்ளது. இடையர்கள் மழை வெயில் இவற்றினின்று தம்மைக் காத்துக் கொள்ளவும் படுத்துறங்கவும் பறி என்னும் பாயைப் பயன்படுத்துவது வழக்கமாக இருந்துள்ளது.

**ஓலைக்குடை**

ஓலைக்குடை என்பது பனையோலையால் செய்யப்பட்டதாகும். ‘கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்’’– (அகநா.194:7) என்ற அடியில் தலைக்குக் குடையைச் சூடிக்கொண்ட செய்தி இடம் பெற்றுள்ளது. இதிலிருந்து மழைக்குப் பிடிக்கும் குடையாக ஓலையைப் பயன்படுத்தியதோடு மட்டுமல்லாமல் தலைக்கு அணியப் பெறும் அணியாகவும் இருந்தமை தெளிவாகிறது.

**திரிமரம்**

திரிமரம் என்பது மரத்தால் செய்யப்பெற்ற மரத்திரிகையாகும். அரிசி அரைப்பதற்குத் திரிமரத்தைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

*‘‘...........................................மனையோள்*
*ஐதுஉணங்கு வல்சிபெய்து முறுக்கு உறுத்த*
*திரிமரக் குரல் இசை கடுப்ப’’– (அகநா. 224:11-13)*

*‘‘பண்ணை வெண்பழத்து அரிசி ஏய்ப்ப*
*சுழல்மரம் சொலித்த சுளகுஅலை வெண்காழ்’’*
*– (அகநா.393:9-10)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

**உரல்**

உரல் என்பது தானிய வகைகளைக் குற்றி அரிசியாக்குவதற்குப் பயன்படுத்தப்பெற்றுள்ளது. மரத்தைக் கொண்டு செய்து கொள்ளப் பெற்ற இம் மர உரலின் அமைப்பை,‘‘உரற் கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய’’– (குறுந்.232:4) என்னும் பாடலடி சுட்டும். இதனால் மரவுரல் யானையின் காலைப் போன்று பருத்த வடிவம் கொண்டது என்பது விளங்கும். இவ்வுரலானது சந்தன மரத்தால் செய்யப்பெற்றுள்ளது. தினை அரிசி ஆகியவற்றைத் தீட்டமர உரல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**உலக்கை**

தானிய வகைகளை உரலில் இட்டுக் குற்றுவதற்குப் பயன்படுத்தப் பெற்ற புழங்குபொருள் உலக்கையாகும். இது அவல் இடிப்பதற்குப்

பயன்படுத்தப்பட்டதை,“பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை”– (குறுந்.238:1) என்னும் அடி சுட்டும். சந்தன மரத்தினால் உலக்கை செய்யப் பெற்றதை “சாந்த மரத்தின் இயன்ற உலக்கை” (கலித்.43:1-3) என்ற அடி உணர்த்தும்.

**மத்து**

ஆயர் மகளிரால் தயிர் கடைவதற்குப் பயன்படுத்தப்பெற்ற புழங்குபொருள் மத்தாகும். அவர்கள் கயிற்றால் வலித்துக் கட்டிய மத்தினைக் கொண்டு உறையிட்டு இறுகிய தயிரைக் கடைவர். முல்லை நிலத்தில் வாழும் ஆய்ச்சியர் இருள் புலரும் வைகறையில் தயிர் கடைதல் நடைமுறையாகும். இதனை,

*“விளம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசிப்*
*பாசம் தின்ற தேய் கால் மத்தம்*
*நெய் தெரி இயக்கம் வெளில்முதல் முழங்கும்*
*வைகு புலர் விடியல் மெய் கரந்து”– (நற்.12:1-4)*
*“சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற*
*பிறவா வெண்ணெய் உருப்பு இடந்தன்ன”– (நற்.84:6-7)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இவற்றில் மத்தின் பயன்பாடும் ஒலியும் சுட்டப்பட்டுள்ளன.

**அம்பணம்**

அம்பணம் என்பதற்கு உரையாசிரியர்கள் ‘மரக்கால்’ என்று பொருள் கூறுகின்றனர். மரக்கால் தானியங்களை அளக்கும் கருவியின் பெயராகும். அம்பணம் ஆமையின் முதுகுப்புற வடிவத்துடன் ஒப்பிடப்பட்டுள்ளது. இதனை,

*“அம்பணத்து அன்ன யாமை ஏறி”– (ஐங்.43:1-2)*

என்ற பாடலடி உணர்த்தும்.

**குளிர்**

குளிர் என்பது கிளிகடி கருவி ஆகும். இக்கருவியின் வடிவமைப்பு பற்றிய செய்தி கிடைக்கவில்லை. ஆனால் இனிய இசையை எழுப்பும் கருவி என்பதை,

*“படுகிளி கடியுங் கொடிச்சிகைக்குளிரே*
*இசையின் இசையா இன்பாணித்தே”– (குறுந்.291:2-3)*

என்ற பாடலடிகள் விளக்கும்.

**தட்டை**

தட்டை என்பது கிளிகடி கருவிகளுள் ஒன்றாகும். இத்தட்டைப் பறையின் ஒலி சுனையின்கண் உள்ளனவாகிய பிளந்த வாயையுடைய தேரைகள் ஒலிப்பதற்கு உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. அதிலிருந்து இக்கருவியானது

இருபகுதியாகப் பிளந்த வாயையுடையது என்பது பெறப்பெறும். விட்டுவிட்டு ஒலி எழுப்பும் தவளையின் குரல் தட்டைப் பறையுடன் ஒப்பிடப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

**வில்லம்பு**

குறவர்களும், வேடர்களும் விலங்குகளை வேட்டையாட வில்லம்புகளைப் பயன்படுத்தினர்.(274) மறவர், மழவர், கள்வர் ஆகியோர் வழிச் செல்வோரைத் தாக்கிக் கொல்லவும் இதனைப் பயன்படுத்தினர் என்பதை பாலைத் திணைப் பாடல்கள் விளக்கும். இது மூங்கிலால் செய்யப்பட்டது ஆகும்.

**ஞெகிழி**

ஞெகிழி என்பது கொள்ளிக் கட்டையைக் குறிக்கும். தினைக் கதிரைக் கொய்து கொண்டு சென்ற யானையை எரிகொள்ளி கொண்டு கானவன் விரட்டியுள்ளான்.(275) தினை காக்கும் குறவனது கொள்ளிக்கட்டையால் யானை அஞ்சிச் சென்றுள்ளது (குறுந்.357:5-6, 150:1) இவற்றால் கானவர் விலங்குகளை விரட்டுவதற்கு ஞெகிழியைப் பயன்படுத்தியமை தெளிவாகும்.

**குறுந்தடி**

விளைந்த தினையின் தாள்களைக் கடித்து அழிக்கும் முயல்களை விரட்ட அதற்கென வலிய காழ்ப்பேறிய குறுந்தடியைப் பயன்படுத்தியுள்ளனர்.(ஐங்.421:1-2)

**நாஞ்சில்**

உழவுத் தொழிலில் நிலத்தை உழுவதற்கு உழவர்களால் பயன்படுத்தப்பட்டது நாஞ்சில் ஆகும். இதனை,‘*உலகுதொழில் உவந்து நாஞ்சில் துஞ்சி’– (அகநா.141:5)* என்ற அடி சுட்டும்.

**உலோகக் கருவிகள்**

சங்கத் தமிழர் பொன், வெள்ளி, இரும்பு, செம்பு ஆகிய உலோகங்களைப் பயன்படுத்தித் தங்களுக்குத் தேவையான புழங்குபொருட்களைச் செய்து கொண்டனர். இதனைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

**பொன்கலங்கள்**

பொன்னால் இயன்ற கலங்கள் ‘பொற்கலம்’ அல்லது ‘பொலங்கலம்’ என்று அழைக்கப்பெற்றுள்ளது. செல்வந்தர்கள் பொன்னாலியன்ற கலனைப் பயன்படுத்தியுள்ளனர். பாலை உண்பதற்குரிய உண்கலமாகப் பொன்கலம்

பயன்பட்டுள்ளது (நற்.110:1-3) (குறுந்.356:6-7). உடன்போக்கில் சென்ற என் மகள் மீண்டு வரக் கரைந்தால் காகமே உனக்கு ஊன் கலந்து ஆக்கிய உணவினைத் தருவேன் (ஐங்.391:3-4) என்று செவிலி கூறுகிறாள். இவற்றை நோக்கும் பொழுது அரசர், செல்வந்தர் குடிகளில் திட, திரவப் பொருட்களை உண்பதற்குரிய உண்கலங்களாகப் பொற்கலங்கள் இருந்தமையை அறிய முடிகிறது.

**மணிக்கலம்**

மணிகள் பதித்து அழகு செய்யப் பெற்ற கலங்கள் ‘மணிக்கலம்’ எனப் பெயர் பெற்றன. இது நீலமணி போன்ற நிறமுடையதாக இருந்தமையால் மணிக்கலம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இக்கலம் தேரையின் பிளந்த வாய்போன்று சிறிய வாய்ப் பகுதியையுடைய வடிவம் உடையது. இதனை,

*“மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன*
*இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை”– (குறு.193:1-2)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இது தேறலை வைப்பதற்குப் பயன்படுத்திய சாடி போன்ற அமைப்பு என்பது எண்ணத் தகும்.

**செப்புக் கருவிகள்**

செப்பு என்பது ஒரு வகை உலோகம். இவ்வுலோகத்தைக் கொண்டு புழங்குகருவிகள் செய்துள்ளனர். அவற்றுள் பானையும், நீர் சேமித்து வைக்கும் சேமச் செப்பும் பற்றிய பதிவுகள் சங்க அகத்திணைப் பாடல்களில் உள்ளன.

*“.............................................. கம்மியர்*
*செம்பு சொரி பானையின் மின்னி……”– (நற்.153:2-3)*
*“அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்*
*சேமச் செப்பிற் பெறீஇயரோ.....”– (குறுந்.277:4-5)*

என்ற அடிகள் செப்பின் பயன்பாட்டை விளக்கும். தமிழகம் நிலநடுக்கோட்டிற்கு அருகாமையில் உள்ளதாலும் பருவநிலை மாற்றத்தின் காரணமாகவும் தண்ணீரைச் செப்புக் குடத்தில் சேமித்து வைத்தனர். செப்பானது வெளியில் உள்ள காலநிலைக்கு ஏற்ப வெப்பமாற்றம் அடையக்கூடியது. இங்கு குளிர்காலத்தில் செப்புக் குடத்தில் வைத்திருக்கும் நீர் வெப்பமுடையதாக இருந்தமையைக் குறிக்கிறது. இதனால் அக்காலத் தமிழர் அறிவியல் நுட்பத்தை அறிந்தவர்களாக இருந்தமை புலனாகும்.

**இரும்பால் இயன்றவை**

உலோகங்கள் அனைத்திலும் மிக உறுதியானதும் அதிகப் பயன்பாட்டிற்குரியதுமான உலோகம் இரும்பாகும். இவ்விரும்பைக் கொண்டு

தங்களுக்குத் தேவையான வீட்டுப் பயன்பாட்டிற்குரிய பொருட்களைச் செய்து வந்துள்ளனா். சங்க இலக்கியத்தில் இரும்பு, எ∴கு குறித்த செய்திகள் பதிவாகியுள்ளன.

**மயிற்குறைக் கருவி**

கூந்தலை வெட்டிக் குறைப்பதற்குப் பயன்படுத்திய கருவியும் எ∴கு எனச் சுட்டப் பெற்றிருக்கின்றது. பாலைக்கலியில் கருமையான நீண்ட மணற்பரப்பைக் கூறும் பொழுது மயிரை வெட்டுவதற்குக் 'கத்திரிகை' நுழைந்தது போல இருக்கும் என்ற உவமை மூலம் கத்திரிகைக் கருவி பற்றி அறிய முடிகிறது.[276]

**வேல்**

பகைவா்களிடமிருந்தும் பிற உயிா்களிடமிருந்தும் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளப் பிறரையும் பிறவற்றையும் தாக்கும் பொருட்டு இக்கருவியைப் பயன்படுத்தியுள்ளனா். வளையம் இடப்பட்ட நெடுவேல் என்னும் கருத்து *'வளைஅணி நெடுவேல் ஏந்தி' (குறுந்.390:4)* என்ற பாடலடியில் பதிவாகியுள்ளது. இவ்வேல் கம்மியரால் செய்யப்பட்டுப் பயன்படுத்தப்பட்ட படைக்கலக் கருவியாகும்.

**அரம்**

அணிகலன் செய்வோா் பயன்படுத்திய கருவி அரமாகும். இதனை,

*''வேளாப் பாா்ப்பான் வாளரத் துமித்த*
*வளைகளைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன'' – (அகநா.24:1-2)*

என்பதனால் உணர முடிகிறது.

**அடாா்**

அடாா் என்பது விலங்குகளை அகப்படுத்தும் பொறி ஆகும். இவ்வடாரைக் குறவா்கள் பயன்படுத்தியுள்ளனா். தினைப்புனத்தை அழிக்க வரும் விலங்குகளை அகப்படுத்த இக்கருவி பயன்படுத்தப் பெற்றுள்ளது. (நற்.199:3)

**பாண்டில் விளக்கு**

பாண்டில் விளக்கு என்பது உலோகத்தாலானது. இன்ன உலோகம் என்ற குறிப்பு இல்லை. இவ்விளக்கில் பருத்த திரியிட்டு எரியச்செய்வர். இதனால் பருத்த சுடா் காற்றுக்கு அவியாமல் எரியும். இதன் பயன்பாட்டை,

*''ஒண்சுடா்ப் பாண்டிற் செஞ்சுடா் போல*
*மனைக்கு விளக்கு ஆயினள்'' –(ஐங். 405:1-2)*

என்பதால் அறிய முடிகிறது.

**மரமும் உலோகமும் இணைந்த கருவி – துளர்**

வயலில் வளரும் பயிர்களுக்கிடையில் இருக்கும் களைகளைக் களைவதற்குப் பயன்படுத்திய கருவி துளர் ஆகும். ஈரமின்றி காய்ந்து விட்ட நிலங்களில் உள்ள களைகளைத் துளர்ந்து எடுக்க இதனைப் பயன்படுத்தியுள்ளனர் (குறுந்.392:4-5) இக்கருவியின் பயன்பாடு இன்றும் வழக்கத்தில் உள்ளது. நவீனத் தொழில்நுட்பம் வளர்ந்த நிலையில் இக்கருவி 'களைக்கொட்டு' என்ற பெயரில் வேளாண்மையில் பயன்படுத்தப்படுகிறது.

**மரம், தோல் இணைந்த கருவி – கவண்**

கயிற்றில் கட்டப்பெற்ற பட்டையான தோலின் நடுப்பகுதியில் கல்வைத்துப் பயிர்களைக் கொத்தும் பறவைகள், விலங்குகளை விரட்டச் சுழற்றி எறியும் சிறு கருவி கவணாகும். இதனை,

> "*ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்*
> *கானயானை கைவிடு பசுங்கழை" (குறு.54:2-3)*

என்னும் அடிகள் உணர்த்தும். இக் கவண்கல்லை இன்றும் நாட்டுப்புறச் சிறுவர்கள் பயன்படுத்துவதைக் காணமுடியும். கவட்டை, வில், உண்டிவில் என்று இதனைக் குறிப்பிடுகின்றனர். இக்கருவியை இன்றைய காலத்திலும் குறி தப்பாது பறவை, விலங்குகளைத் தாக்குவதற்கும் பொழுதுபோக்குக் கருவியாகவும் பயன்படுத்துகின்றனர். நரிக்குறவர் இனத்தவர், வில்லி இனம் (வில்லர்) போன்ற மக்கள் இன்றும் இதனைப் பயன்படுத்தி வருகின்றனர்.

**தொண்டகச் சிறுபறை, தண்ணுமை, அரிப்பறை**

இவை விலங்குகளையும் பறவையினங்களையும் விரட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்ட தோற்கருவிகளாகும். இரவில் தினைக் கதிர்களை விலங்குகள் அணுகாதிருக்கும் பொருட்டுத் தொண்டகச் சிறுபறையை முழக்கினர்(குறுந்.375:3-4). தண்ணுமையை முழக்கினர். (அகநா.204:10), (நற்.350: 1-2), (குறுந்.390:5) விளைந்த நெல் வயலில் கூடுஅமைத்து வாழும் பறவைகளை விரட்ட இக்கருவியை இசைத்தனர் (ஐங்.81:1-2).

**முரசு**

செய்தியை அறிவிக்கும் தகவல் தொடர்பு சாதனமாக முரசு என்னும் தோற்கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். வேந்தன் போர்த்தொழில் கருதிப் பாசறையில் இருந்த போது காலைப் பொழுதில் முரசு இயம்பப் பெற்றதையும் அதனைத் தொடர்ந்து அரசன் தன் போர்த் தொழிலை முடக்கி விட்டதையும்

*“தழங்குகுரல் முரசம் காலை இயம்ப*

*கடுஞ் சின வேந்தன் தொழில் எதிர்ந்தனனே”– (ஐங்.448:1-2)*

என்ற அடிகள் அறிவிக்கும். பகை தணிதல் பொருட்டு முரசு முழங்கியதை *‘முரசு மாறிரட்டும் அருந்தொழில் பகை தணிந்து’– (ஐங்.450:1)* என்னும் அடி சுட்டும்.

**பிற புழங்கு பொருட்கள்**

மண்டிலம் என்பது தம் உருவைக் காண்பதற்குப் பயன்படுத்திய பொருள் ஆகும். இக்காலத்தில் இதனைக் கண்ணாடி என்று அழைத்திடுவர்.

*“எள் அற இயற்றிய நிழல் காண் மண்டிலத்து*
*உள் ஊது ஆவியின் பைப்பய நுணுகி”– (அகநா.71:13-14)*

என்ற பாடலடிகள் மண்டிலம் என்னும் கண்ணாடியின் பயன்பாட்டினை உணர்த்தும்.

மானிடவியலின் ஒரு துறையான தொல்லியல் சார்ந்து மனிதர்களைப் பற்றி ஆராயும் தொல்லியலாளர்கள் மனித இனத்தின் பொருள்சார் பண்பாட்டை ஆராயும் பொழுது பழையகற்காலம் (Paleolithic age), புதிய கற்காலம் (Neolithic age), உலோகக்காலம் (Metal age) எனப் பிரித்தறிவர். உலோகக்காலத்தை செப்புக்காலம் (Brazo age) இரும்புக்காலம் (Iron age) என்று கணக்கிட்டு ஆராய்வர்.

சங்க கால மக்களின் புழங்கு பொருளான பொருள்சார் பண்பாட்டை இலக்கியத் தரவுகளின் வழி ஆராயுங்கால் மேற்கண்ட கல், உலோகப் பொருட்களின் பயன்பாட்டைக் காண முடிகிறது. இக்கல் உலோகங்களின் பயன்பாடானது மிகவும் செம்மைப்படுத்தப்பட்டு தொழில் நுட்பத்திறனுடன் பயன்பாட்டில் இருந்தமையை அறிய முடிகிறது. சங்கத்தமிழர் வாழ்ந்த நிரப்பரப்பில் இரும்புத் தாதுக்கள், செப்புத்தாதுக்கள், பொன்தாதுக்கள் எனக் கனிம வளங்கள் கிடைக்கப் பெற்றதால் தமக்குரிய தேவைக்கான புழங்குபொருட்களை அவற்றால் செய்து பயன்படுத்தியுள்ளனர்.

**பொன்னால் இயன்றவை**

சங்க கால மக்கள் பொன், செம்பு, இரும்பு போன்ற கனிமவளத்தைப் பயன்படுத்தினர். இவைகளில் அணிகலன் செய்யப் பொன் கனிம வளத்தையே பெரும்பான்மை பயன்படுத்தியுள்ளனர். அப்பொன்னில் பல வண்ணக்கற்களையும்

முத்துக்களையும் பதித்து அணிகலன் செய்துள்ளனர். தலையணி, காதணி, கழுத்தணி, மலர்மாலை, தொடி, மோதிரம், சுரிதகம், கழல், சிலம்பு, கிண்கிணி, சதங்கை எனப் பல்வேறு அணிகலன்களைப் பொன்னால் செய்து அணிந்துள்ளனர்.

**தலையணி**

சங்க மகளிர் பொன்னாலான நெற்றியில் நெற்றிப்பட்டம்,[277] வயந்தகம் என்னும் நெற்றிச்சுட்டி,[278] பிறை,[279] சிகழிகை (தலையாட்டி)[280], தொய்யகம்[281] என்னும் தலையணி ஆகியவற்றை அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டனர். ‘உருள்’ என்னும் தலைப்பாளை அணியையும் அணிந்துள்ளனர்.[282]

**காதணி**

பெண்கள் காதில் அணியும் அணி ‘குழை’ என்று பொதுவாக அழைக்கப்பட்டது. கனங்குழை என்பது பொன்னாலான காதணியாகும். கனகம் + குழை = கனங்குழை என வழங்கப்பட்டுள்ளது. அவ்வணியின் வடிவம் நோக்கி மகரக்குழை எனவும் அழைக்கப்பட்டுள்ளது. மகரம் என்பது மீன் எனவும் மீன் வடிவம் கொண்ட குழை மகரக்குழை எனவும் வழங்கப்பட்டுள்ளது.[283].

**கழுத்தணி**

ஆண், பெண், சிறுவர், சிறுமி என அனைவரும் அணியும் அணிகலனாகக் கழுத்தணி விளங்கியுள்ளது. அது முத்து வடம்,[284] சங்குமணி[285] பொன்னாலான காசு மாலை,[286] முத்தாரம்,[287] பொன் ஆரம்,[288] முத்து மாலை,[289] பவள வடம்,[290] வல்லிகை (நீலமணி வடம்),[291] முக்காழ் வட கண்டிகை,[292] சந்தன மாலை[293] எனப் பலவாக வழங்கப்பட்டுள்ளது.

**மலர் மாலை**

பொன், முத்து, பவளம் என அணிவது மட்டுமின்றி நிலம் சார்ந்த மலர்களையும் மாலையாக அணிந்து மகளிர் தம்மை அழகுபடுத்திக் கொண்டனர். அவ்வாறாக எருக்கம் பூமாலை,[294] கஞ்சங்குல்லை (துளசி) ஆகியவற்றைத் தலைமாலையாக அணிந்து கொண்டனர்.[295] நரந்தம் பூவினைச் சூடிக் கொண்டனர்.[296] சுனையில் பூக்கும் குவளை மலரை மாலையாகத் தொடுத்து அணிந்தனர்.[297] செந்நிற வயலைக் கொடியால் மாலை தொடுத்து அணிந்தனர்.[298] கரும்பின் பூவை நீண்ட மாலையாகத் தொடுத்து அணிந்துள்ளனர்.[299] முண்டகம் என்னும் முள்ளி மலரால் மாலைதொடுத்து

அணிந்துள்ளனர்.[300] தும்பை மலரால் மாலைத் தொடுத்துள்ளனர்.[301] நெய்தலின் நறிய மலர்களையும் செருந்தி மலர்களையும் விரவி அழகுறத்தொடுத்த மாலையை ஆண்கள் அணிந்துள்ளனர்.[302] தூய வெண்ணிறமுடைய வெள்ளோத்திர மலர்களைத் தலையில் அணிந்துள்ளனர்.[303] நறாம் பூவுடன் அழகிய நீரில் அலர்ந்த கருநீலமலர் அல்லிப்பூ, அனிச்சம்பூ, முறுக்கு நெகிழ்ந்த முல்லைப்பூ முதலிய எல்லாம் சேர்த்து நெருங்கக் கட்டிய நறிய மலராற் செய்த கண்ணியை ஆண்கள் அணிந்துள்ளனர்.[304] ஆநிரைகளை உடைய பொதுவர் தம் நிலமாகிய கல்லிடத்தும் காட்டிடத்தும் மலர்ந்த மெல்லிய கொத்துக்களையுடைய கொன்றை, மெல்லிய மலர்களையுடைய காயா, புல்லிய இலைகளையுடைய வெட்சி, பிடா, முல்லை, குல்லை, குருந்து, பாங்கர் முதலிய மலர்களாலாய மணங்கமழும் கண்ணியைச் சூடியுள்ளனர்.[305] குருந்தம் பூவால் கட்டின மாலையை முல்லை நிலப் பொதுவன் அணிந்துள்ளான்.[306] முல்லை மலரால் தொடுக்கப் பெற்ற கண்ணியை ஆணும் பெண்ணும் அணிந்துள்ளனர்.[307] மருத நில மாந்தர் ஆம்பல் மலரால் தொடுக்கப்பெற்ற மாலையை அணிந்துள்ளனர்.[308] அவரவர் தத்தம் நிலப்பகுதியில் கிடைக்கும் மலர்களைப் பெரும்பான்மை அணிந்துள்ளனர்.

**தொடி**

தொடியும் வளையலும் பெண்கள் தம் முன் கையில் அணியும் அணிகலனாகும். இவை அணியும் இடம் ஒன்றாய் இருந்தாலும் நுண்ணிய வேறுபாடு உடையவை. தொடி குறித்து வரும் இடங்களில், ஒளிர்கின்ற தொடி,[309] பொன்னால் செய்த தொடி,[310] முத்தாலான தொடி[311] எனப் பதிவாகியுள்ளமையால் தொடி என்பது உலோகத்தைப் பயன்படுத்திச் செய்யும் அணிகலன் என்பது புலனாகிறது. ‘‘வளையலைப் பொன் உலோகம் கொண்டு செய்துள்ளனர். சங்கினை அறுத்தும் செய்துள்ளனா’’.[312] ஆகையால் பொன் வளையல், சங்கு வளையல் என இரு வகை வளையல் பற்றிய குறிப்பு கிடைக்கின்றது. தொடி பொன்னால் செய்யப்பட்டு அதன் மீது முத்துக்களும், பல வண்ணக்கற்களும் பதித்து மிகுந்த வேலைப்பாட்டோடு ஒளிரும் தன்மையுடன் செய்யப்பட்டுள்ளது. ‘ஒண்தொடி’ என்ற சொல்லாட்சி இதனை நன்கு உணர்த்தும்.

**மோதிரம்**

மோதிரம் என்பது விரலில் அணியும் அணியாகும். இது ‘தாழ்’ எனவும் வழங்கப்படும். இதனை *“சிறுதாழ் செறித்த மெல் விரல் சேப்ப”- (நற்.120:4)* என்ற அடி சுட்டும். “*மெல் விரல் மோசை போல”– (நற்.188:4)* என்பதில் மோசை என்ற பெயரால் குறிக்கப்பட்டுள்ளது. மோதிரம் (கலித்.84:21-24) எனவும் வழங்கப்பட்டுள்ளது. இவ்வணியை அனைத்து நில மக்களும் அணிந்துள்ளனர்.

**சுரிதகம்**

சுரிதகம் என்பது பல வண்ணக்கற்களை இட்டு இழைத்த பொன்னாலாகிய ஓர் அணி எனவும், இதன் வடிவம் கோங்க மரத்தின் அரும்புகள் போன்று உள்ளது எனவும் பதிவாகியுள்ளது (நற்.86:6).

**கழல்**

கழல் என்பது ஆண்கள் காலில் அணியும் அணிகலனாகும்.[313] இது வீரக்கழல் (ஐங்.400:4) (அகநா.1:1) எனக் குறிப்பிடப்படுவதிலிருந்து காளைப் பருவத்தினர் அணியும் ஓர் அணிகலன் என்று கருத இடமுண்டு. இவ்வீரக்கழலைப் பொன்னாலும் பிற உலோகங்களாலும் செய்து அணிந்துள்ளனர்.

**சிலம்பு**

சிலம்பு என்னும் அணிகலனைப் பெண்கள் காலில் அணிந்துள்ளனர்.[314] அச்சிலம்பு உள்ளீடு உடைய அமைப்புடையதாகும் (கலி.125:6). அந்த உள்ளீட்டில் முத்து (நற்.110:5) பருக்கைக் கல் (நற்.12:5) (கலித்.57:3) ஆகியன இடப்பட்டுள்ளன. சிலம்பு, உலோகம் கொண்டு செய்யப்பட்டுள்ளது. அம்முத்துகளும் பருக்கைக் கற்களும் சிலம்பு அசையும் பொழுது இனிய ஒலியை ஒலிக்கும். சிலம்பு பொன்னால் செய்யப் பெற்றது என்ற குறிப்பு உள்ளது.

**கிண்கிணிச் சதங்கை**

கிண்கிணி என்னும் சதங்கை குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் காலில் அணிவிக்கப் பெற்ற அணிகலனாகும்.[315] தென்னங்குரும்பையின் வடிவு கொண்டு பகுத்த வாய் வழியே உள்ளே பரல்கள் இடப்பட்டு கிண்கிண் என ஒலிக்கும் இயல்புடையதால் இப்பெயர் பெற்றுள்ளது. பொன்னை உருக்கி இரண்டு

வடங்களாக ஆக்கிப் பின்னி நெருப்பிலிட்டு அழகியதாக நிறம் உண்டாக்கப் பெற்று கிண்கிணி உருவாக்கப் பெற்றுள்ளது (கலித்.1-2).

சங்க காலத்தில் தாயா் தம் குழந்தைகட்குப் பல்வேறு வகையான அணிகளைப் பூட்டி மகிழ்ந்தனா். அவ்வகையில் கிண்கிணி, பொற்காசு, பவளக் கோவை, அவிா்தொடி, ஆனேற்று அவிா் பூண், முத்துமாலை, கண்ணிமாலை முதலிய அணிகள் குறிப்பிடத்தக்கனவாகும் (கலித்.85:1-20).

**செருப்பு அணிதல்**

கானவன் தோலினால் ஆன செருப்பை அணிந்துள்ளான். இதனை,'*தொடுதோற் கானவன் குறுகுறு வியன்புனம்'– (அகநா.368:1)* என்பது உணர்த்தும். இதனால் கானவர் காலில் செருப்பு அணியும் பழக்கம் புலனாகும்.

**கண்களில் மைதீட்டும் பழக்கம்**

சங்ககால இளம் பெண்கள் கண்களில் மைதீட்டும் பழக்கமுடையவர்களாகத் திகழ்ந்துள்ளனர். ஐந்திணைக்குரிய பாடல்களில் மையுண்டகண், உண்கண் என்று பதிவுகள் கிடைக்கின்றன.[316] குழந்தைகளுக்கும் மைதீட்டியுள்ளனர். தமிழகம் நிலநடுக்கோட்டுப் பகுதிக்கு அருகாமையில் இருப்பதால் வெப்பத்தின் தாக்கம் அதிகம். மனித உடலில் ஏற்படும் வெப்பத்தாக்கம் முதலில் கண்களில் வெளிப்படும். எனவே கண்ணுக்குக் குளிர்ச்சியூட்டும் வகையில் மைதீட்டும் பழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

*"ஆய்மலா் உண்கண்"– (ஐங்.423:4)*
*"கயல்ஏா் உண்கண்" - (நற்.316:3)*
*"மாதா் உண்கண் மகன் விளையாட"– (ஐங்.406:1)*

என்ற பாடலடிகள் சங்க மக்கள் கண்ணிற்கு மை பூசிக் கொண்டதை விளக்கும். கண்ணிற்கு இடும் மைக்கு 'அஞ்சனம்' என்றும் வழங்கினா். (ஐங்.16:2)

**தொய்யில் எழுதும் பழக்கம்**

பெண்கள் மாா்பிலும் தோளிலும் தமக்கு விருப்பமான உருவங்களைத் தொய்யில் எழுதிக் கொண்டனா்.[317] இதனை,

*"............................ கோங்கின்*
*முதிரா இளமுகை யொப்ப எதிரிய*
தொய்யில் பொறித்த வனமுலையாய்"– (கலித்.117:2-4)

என்ற பாடலடிகள் உணர்த்தும். கோங்கினது முதிராத இளமொட்டு போன்ற தொய்யில் எழுதிய மாா்பகங்கள் உடையவள் என்பதிலிருந்து பெண்கள்

தொய்யில் எழுதிக் கொள்ளும் பழக்கம் புலப்படும். ஆண்கள் தொய்யில் எழுதிக் கொண்டதாகச் சங்க அகத்திணைப் பாடல்களில் பதிவுகள் கிடைக்கப் பெற வில்லை.

இக்காலத்தில் பெண்கள் விழாக்களின்போதும் மங்கல நிகழ்ச்சிகளின்போதும் பறவைகள், பூக்கள், தழைகள் வடிவிலான ஒட்டும் தன்மையினையுடைய காகிதத்தில் ஆன பல வண்ணங்களில் தம் கைகளில் ஒட்டி அழகுபடுத்திக் கொள்கின்றனர். இது சில நாட்களில் கைகளிலிருந்து மறைந்துப் போகும். சங்க காலத் தொய்யில் எழுதும் பழக்கம் நவீன தொழில்நுட்ப மாற்றத்தால் கைகளில் வேண்டும் பொழுது சில நொடிப் பொழுதில் தம்மை அலங்கரித்துக் கொள்ளும் வகையில் வளர்ந்திருக்கிறது. தொய்யில் எழுதுதல் என்னும் பண்பாடு நாகரிக மாற்றத்தால் வளர்ச்சி பெற்றிருந்தாலும் அதன் அடிநாதம் மாறாமல் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**சந்தனம் பூசுதல்**

ஆண்கள் தங்கள் மார்பின் மேல் குளிர்ச்சியைத் தரக்கூடிய சந்தனத்தைப் பூசிக் கொண்டனர். இதனை,

> *''சாரல் ஆரம் வண்டு பட நீவி''– நற்.259:6*
> *''மலைச்சேரஞ் செஞ்சாந்தின் ஆர மார்பினன்''– குறுந்.321:1*
> *''நறுஞ்சாந்து புலர்ந்த கேழ்கிளர் அகலம்''– அகநா.26:14*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இது அவர்களை அழகுபடுத்தும் வகையிலும் அமைந்தது.(318)

**தழையுடை**

சங்ககால மகளிர் தழையுடை அணிந்துக் கொண்டனர் என்றும் தழையுடையைத் தலைவன் கொடுக்க தலைவி விரும்பி ஏற்றுக் கொண்டாள் என்றும் பதிவுகள் காணப்படுகின்றன. அசோகந்தளிர் கொண்டு வயலைக் கொடியால் பிணைக்கப்பட்டு தழையுடை உருவாக்கப்பட்டுள்ளது. அதனை மாதர் அணிந்துள்ளனர். (319) நீலநிறச் சாயம் ஏற்றப்பட்ட நீல உடை, கச்சை, துவரற்ற ஆடை எனப் பருத்தியால் நெய்யப்பட்ட ஆடையும் அணிந்துள்ளனர்.(320) துகில் (கலித்.81:5) கலிங்கம் (நற்.20:4) காழகம் (கலித்.73:17) எனபன சங்ககாலத்தில் ஆடைக்கு வழக்கில் இருந்த பெயர்களாகும். பருத்தி உடையும் பட்டுத்துணியும் நெய்து அணிந்த சங்கத் தமிழர், தழையுடை அணிந்ததற்கான காரணம்

புலப்படவில்லை. பட்டுத்துணியும், பருத்தி ஆடையும் இருக்க, தழையுடையைச் சிறப்புடையதாக அக இலக்கியங்களில் புலவர்கள் பதிவுசெய்ய வேண்டிய அவசியம் நுணுகி ஆராய்வதற்கு உரியது. தழையுடை, மரவுரி ஆகியவை ஆதிகால மனிதன் அணிந்தவை. சங்ககாலம் நாகரிக வளர்ச்சி பெற்ற காலம். ஆனால் அவ்வுடை சங்க அகத்திணைப் பாடல்களில் குறிப்பாக இன்றியமையாத சிறப்பிற்குரிய உடையாக காதலர் இடையே கருதப்படுவதற்குக் காரணம் அறிய இயலவில்லை. களவுக் காலத்தின் பொழுதும், விழாக்காலங்களிலும் பெண்கள் தழையுடை அணிந்ததாகப் பதிவுகள் கிடைக்கப் பெறுகின்றன. மாறாக அசோகமரத்தின் தளிர்களால் ஆனவை என்பது மட்டும் பதிவு கிடைக்கிறது. குறிஞ்சியாக இருந்தாலும் மருதமானாலும் நெய்தல் ஆனாலும் அசோகமரத் தளிர் பற்றிய குறிப்பு கிடைக்கிறது. சங்ககாலப் பெண்கள் மிக நுண்ணிய துகிலை மேற்சேலையாக அணிந்துள்ளனர் நற்.366:2-3).

**கூந்தல் அலங்காரம்**

சங்க அக இலக்கியங்கள் மகளிர் தம் கூந்தல் அலங்காரத்தை முச்சி[(321)], ஓதி[(322)], கூழை,[(323)] அளகம்,[(324)] கதுப்பு,[(325)] குழல்[(326)] எனப் பலவாறாகக் கூறுகின்றன. இவற்றில் சிறப்பாக 'ஐம்பால்'[(327)] என்கின்ற ஒரு சொல்லால் மகளிர் கூந்தல் பல இடங்களில் குறிக்கப் பெறுகிறது. பெண்களை 'மணங்கமழ் ஐம்பாலர் (கலித்.131:39) என்பது அவர்களின் கூந்தல் அலங்காரம் அடிப்படையில் சுட்டப்படுவதாகும்.

சங்ககாலப் பெண்கள் தம் கூந்தலை ஐந்து பிரிவாகப் பிரித்து பின்னலிட்டுள்ளனர். அக்கூந்தல் நீண்ட கரிய தோற்றத்தை உடையதாக விளங்கியது. வாழைமரம் பூ அரும்பும் காலத்து அதன் காம்புப்பகுதி தோற்றம் அளிப்பது போன்ற என்று புலவர் குறிப்பிடுவதிலிருந்து ஐம்பால் பின்னலின் தோற்றம் புலனாகும். கூந்தலை அலசித் தூய்மையாக வைத்திருந்தனர். நரை விழுந்த பெண்களும் கூந்தலைப் பின்னலிடும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். அக்கூந்தலுக்கு மயிர்சாந்து, நெய், வெண்ணெய் பூசிப் பராமரித்துள்ளனர். எண்ணெய் என்பது எந்த வகையான எண்ணெய் எனக் குறிப்பிடப் பெறவில்லை. கூந்தலைச் சமமாகக் கத்தரித்துவிட்டு கூந்தலை வளர்த்துள்ளனர். மணமூட்டுவதற்காகப் புனுகுத் தூள் பூசியுள்ளனர். கூந்தலில் ஞாழல், சிறுமுல்லை, தாழம்பூ, நரந்தம் பூ, குருந்தம், குவளை, நெய்தல், செங்கழுநீர்,

வேங்கைப்பூ, கழிமுள்ளி, பாதிரி போன்ற மலர்களைச் சூடியுள்ளனர். பெண்கள் முல்லை மலர் அணிவது சிறப்புத் தன்மையினதாகக் கருதப்பட்டுள்ளது. அது கற்பின் குறியீடாகவும் விளங்கியுள்ளது. பார்ப்பனச் சிறார்கள் தம் தலையில் குடுமி வைத்திருந்தனர். ஆண்களும் தம் தலையில் மலர் சூடும் வழக்கம் உடையவராய் இருந்தனர்.(328)

இவ்வாறாக, சங்கத்தமிழர் நிலப்பரப்பு சார்ந்த பொருட்களைக் கொண்டு சுற்றுச்சூழலுக்கு ஏற்ப தம்மை ஒப்பனைப்படுத்திக் கொண்டனர். அவர்களின் ஒப்பனைக் கூறுகள் காலம் கடந்தும் நாகரிக மாற்றத்தால் முழுவதும் பாதிப்பு அடையாமல் இன்றும் தமிழர்களிடம் வழங்கி வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

**பொழுதுபோக்கு விளையாட்டுகளும் பண்பாட்டுவயமாதலும்**

சங்க கால மக்கள் அவரவர் வாழ்ந்த இயற்கை சூழல்களுக்கு ஏற்பத் தாம் விளையாடும் விளையாட்டு முறைகளையும் பொருட்களையும் கருவிகளையும் பயன்படுத்தினர். அவ்வகையில் அம்மக்களின் பண்பாடும் பழக்கமும் விளங்குகிறது. ஒரு நிலத்தில் வழங்கும் விளையாட்டு, அதன் பண்பாட்டு நிலையில் சிறிது மாற்றம் பெற்று மற்றொரு நிலத்திலும் வழங்கப்பட்டு வளர்ந்து வந்துள்ளது. இதனை இனவரைவியலாளரின் கருத்துப்படி பண்பாட்டுப்பரவல் (Cultural Diffusion) என்பர். ஒரு நிலப்பரப்பில் வாழும் இனத்தின் பண்பாடானது மற்றொரு நிலப்பரப்பில் மற்றொரு இனக்குழுவினரால் போற்றி வழங்கப்படுவது பண்பாட்டுப்பரவல் எனப்படும். இதனைப் பண்பாட்டு வயமாதல் (Enculturation) என்றும் கூறுவர். அவ்வகையில் அலவன் ஆட்டல், ஊசல், ஏறுகோள், கண்புதைத்து ஒளிந்தாடல், கழங்கு, சிறுதேர் உருட்டல், சிற்றில் செய்தல், தாயம், பந்து விளையாட்டு, பாவை விளையாட்டு, மலர் செய்தல், மாலை தொடுத்தல், வட்டு, மணற்குவியலில் மறைந்தாடல் என்பன குறிப்பிடத்தக்கனவாகும்.

**அலவன் ஆட்டல்**

அலவன் என்பது நண்டு என்னும் நீர்வாழ் உயிரினம் ஆகும். கடற்கரைப் பகுதிகளிலும் நீர்ப் பிடிப்புப் பகுதிகளிலும் உள்ள அலவன்கள் கரை நோக்கி வரும்போது அவைகளைக் கைகளில் பிடித்து ஆட்டியும் மோதவிட்டும் நெய்தல் நில மக்கள் மகிழ்ந்துள்ளனர். இது அவர்களுக்குப் பொழுதுபோக்காக

இருந்துள்ளது. அலவன் நெய்தல் நில மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் சிறப்பிடம் பெற்றிருந்தை சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கும்.

*"பல்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்*
*திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி*
*அசையினள் இருந்த ஆய்தொடிக் குறுமகள்"– (அகநா.280:2-4)*

என்னும் பாடலடிகளில், செறிந்த மணல் பொருந்திய கடற்கரையில் நண்டை ஓட்டி விளையாடித் தளர்ந்து இளப்பாறியிருக்கும் இளம் பெண் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

*"............புன்னையம் புகர்நிழல்*
*பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே"– (குறுந்.303:6-7)*

என்ற அடிகளில் புன்னை மரநிழலில் அலவனை ஆட்டி விளையாடிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**ஊசல்**

சங்ககால மக்கள் தத்தம் நிலச்சூழலில் கிடைக்கக்கூடிய கொடிகளைப் பெரிய மரக்கிளைகளில் நீண்ட கயிறாகக் கட்டிவிட்டு அதில் அமர்ந்து விளையாடுவது ஊஞ்சல் விளையாட்டு ஆகும். இவ்விளையாட்டில் ஊசலில் அமர்ந்து கயிறுகளை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு கால்களினால் பூமியை உதைத்து வேக வேகமாக ஆடுவர். இவ்வாறு மேலும்கீழுமாக எதிர் எதிர் திசைகளில் காற்றில் மிதப்பதுபோல ஆடுவதில் மகளிர் அதிகமாக ஆர்வம் காட்டியுள்ளனர்.

ஊஞ்சல் கயிற்றினைப் பனை நார், தாழைநார் கொண்டு செய்தனர். அக்கயிற்றினை மலர்க் கொத்துகள், அசோகந்தளிர்கள் கொண்டு சுற்றிவிட்டும் அமர்ந்து விளையாடுவதற்குப் பலகைகளையும் துணை இருக்கைகளையும் அமைத்திருந்தனர். இவ்விளையாட்டு பெரும்பாலும் வீட்டுக்கு வெளியே சோலைகளில் நடைபெற்றது. இதனை,

*"பெருங் கயிறு நாலும் இரும் பனம் பிணையல்*
*பூங்கண் ஆயம் ஊக்க, ஊங்காள்*
*அழுதனள் பெயரும் அம்சில் ஓதி*
*நல்கூர் பெண்டின் சில் வளைக் குறுமகள்*
*ஊசல் உறு தொழில் பூசல் கூட்டா"– (நற்.90:6-10)*

என்னும் மருதத்திணைப் பாடலடிகள் உணர்த்தும். இது கரிய பனை நாரினால் திரித்த கயிற்றைப் பிணித்துத் தொங்கவிட்ட ஊசலில் ஏறிப் பூப்போன்ற கண்களையுடைய தன் தோழியர் அவ்வூசலை ஆட்டவும் ஆடாதவளாய் அழுது

அவ்விடம் விட்டுப் பெயர்வாள் என்னும் செய்தியைத் தருகிறது. இம்மருத நிலத்தில் பெரும்பான்மையாகக் காணப்படும் பனை நாரினால் ஊஞ்சல் கயிறு பின்னப்பட்டிருப்பது நோக்கத்தக்கது.

*“ஞாழல் ஓங்கு சினைத் தொடுத்த கொடுங் கழித்*
*தாழை வீழ் கயிற்று ஊசல் தூங்கி”– (அகநா.20:5-6)*

என்னும் நெய்தல் திணைப்பாடலடிகளில் வளைந்த உப்பங்கழியிலுள்ள தாழையின் விழுதுகளாலான கயிற்றால் ஞாழல் மரத்தினது உயர்ந்த கிளையிற் கட்டிய ஊசல் சுட்டப்பட்டுள்ளது.

*“...................................................அம் தளிர்ச் செயலைத்*
*தாழ்வு இல் ஓங்குசினைத் தொடுத்த வீழ் கயிற்று*
*ஊசல் மாறிய மருங்கும் பாய்பு உடன்”– (அகநா.38:6-8)*

என்ற குறிஞ்சித்திணைக்குரிய பாடலடிகளில் அழகிய தளிர்களையுடைய அசோகமரத்தினது கிளையில் கட்டப்பட்ட ஊஞ்சலைப் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. இவ்வாறே,

*“.......................நம் படப்பை*
*ஊட்டியன்ன ஒண் தளிர்ச் செயலை*
*ஓங்கு சினைத் தொடுத்த ஊசல்”– (அகநா.68:44-6)*

என்ற குறிஞ்சித்திணைப் பாடலடிகளிலும்

*“இனக்கிளியாம் கடிந்து ஓம்பும் புனத்து அயல்*
*ஊசல் ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை” (கலித்.37:13*-14)

என்ற பாடலடிகளிலும் ஊசல் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

**ஏறுகோள்**

*“கொல் ஏற்றுக்கோடு அஞ்சுவானை மறுமையும்*
*புல்லாளே ஆயமகள் ..........................”– (கலித்.103:63-64)*

என்ற பாடலடிகளில் ஏறுகோள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. முல்லை நிலத்தில் விளையாடப்படும் இவ்விளையாட்டானது அந்நிலமக்களின் இயற்கை சார்ந்த தொழில் அடிப்படையில் அமைவது சுட்டத்தக்கது.

**கண் புதைத்து ஒளிந்தாடல்**

இது கைளால் பிறரின் கண்களை மூடவும் மற்றவர் ஒளியவும் விளையாடும் விளையாட்டு ஆகும். இவ்விளையாட்டு பற்றி,

*“நலம் பெறு கையின் என் கண் புதைத்தோயே”– (ஐங்.293:2)*

என்ற குறிஞ்சித்திணைப்பாடல் எடுத்துரைக்கிறது.

**கழங்கு**

மகளிர் தம் தோழிமார்களுடன் கழங்கு விளையாடியுள்ளனர். இதனை,

*"சிறைநாள் ஈங்கை உறைநனி திரள்வீ*
*கூரைநல் மனைக் குறுந்தொடி மகளிர்*
*மணல் ஆடு கழங்கின் ...............''– (நற்.79:1-3)*

என்ற பாலைத்திணைப்பாடலடிகளும்

*''இளந்துணை ஆயமொடு கழங்கு உடன் ஆடினும்''– (அகநா.17:2)*

என்ற பாடலடியும்

*''கழங்கு ஆடு ஆயத்து அன்று நம் அருளிய''– (அகநா.66:24)*

என்ற மருதத்திணைப் பாடலடியும் எடுத்துரைக்கிறது.

**சிறுதேர் உருட்டல்**

தேரினை உருட்டியும், இழுத்தும் சிறுவர்கள் விளையாடிய உள்ளனர். ஒரு குறிப்பிட்ட தூரம் வரை இழுத்துச் சென்று ஓர் எல்லையில் தேரினை நிலைப்படுத்தி மகிழ்ந்துள்ளனர்.

*''தச்சன் செய்த சிறுமா வையம்*
*ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும் கையில்*
*ஈர்த்து இன்புறூஉம் இளையோர் போல'– (குறுந்.61:1-3)*

என்ற மருதத்திணைப் பாடலடிகளில் சிறுதேர் உருட்டி விளையாடி இளையோர் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

**சிற்றில் செய்தல்**

மகளிர் விளையாட்டுகளில் இதுவும் ஒன்று. மணலில் சிறிய சிறிய வீடுகளைக் கட்டித் தங்கள் கற்பனைத் திறத்திற்கேற்ப மகளிர் வியைாடுவர். இதனை,

*''வரிபுனை சிற்றில் பரி சிறந்து ஓடி*
*சிறு விளையாடலும் அழுங்கி''– (நற்.123:8-11)*

என்ற நெய்தல் திணைப்பாடலடிகள் உணர்த்தும். இது நெய்தல் திணைக்குரிய மணற் பாங்கான புவிச்சூழலில் சிற்றில் விளையாட்டு அமைவதை விளக்குகிறது.

*''சுடர்த் தொடீஇ கேளாய் - தெருவில் நாம் ஆடும்*
*மணற்சிற்றில் காலின் சிதையா அடைச்சிய*
*கோதை பரிந்து வரிப்பந்து கொண்டு ஓடி*
*நோதக்க செய்யும் சிறுபட்டி..............''– (கலித்.51:1-4)*

என்ற குறிஞ்சித்திணைப் பாடலடிகள் குறிஞ்சிநிலப்பகுதியிலும் சிற்றில் இழைத்தல் விளையாட்டு நடைபெற்றதை உணர்த்தும்.

*“நீடு ஆடும் சிற்றில் புனைகோ”– (கலித்.111:9-10)*
*“வரிமணல் முன்துளைச் சிற்றில் புனைந்த”– (கலித்.114:15)*

என்ற முல்லைத்திணைக்குரிய பாடலடிகளும் சிற்றில் இழைத்தல் விளையாட்டினை எடுத்துரைக்கின்றன. இவற்றால் சிற்றில் இழைத்தல் என்னும் பண்பாடானது அவ்வந் நிலத்தின் மண்ணின் தன்மைக்கும் இயற்கை அமைப்பிற்கும் ஏற்ப அமைந்துள்ளமை புலனாகும்.

**தாயம்**

இது ஒரு பொழுதுபோக்கு விளையாட்டு. காலம் போவதே தெரியாமல் ஈடுபடும் விளையாட்டு. இதனை,

*“கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து*
*நரைமூ தாளர் அதிர்தலை இறக்கி*
*கவை மனத்து இருந்தும் வல்வனப்பு அழகிய*
*வரி நிறச் சிதலை அரித்தலின்.....’– (அகநா.377:6-9)*

என்ற பாலைத்திணைப் பாடலடிகள் உணர்த்தும். இதில் மன்றத்தின் கண் உள்ள அம்பலத்தில் நரையினையுடைய முதியவர்கள் தம் நடுங்கும் தலையினைக் கவிழ்த்து வல்லாடும் இடம் கறையான் அரித்தமையால் பொலிவற்று அழகு கெடக் காணப்பட்டது என்னும் கருத்து இடம் பெற்றுள்ளது. இதனால் இவ்விளையாட்டிற்கு என்று தனியிடம் அமைத்து விளையாடுவர் என்பது புலனாகிறது. இவ்விளையாட்டில் பொருளை வைத்து ஆடியுள்ளனர் என்பதை

*“உடைப்பொதி இழந்தான் போல்”– (கலித்.136:12)*

என்ற அடி புலப்படுத்தும். தாய விளையாட்டில் இருதடவை சிறுதாயம் இட்டவன் வெற்றியும் இருகால் சிறுதாயம் இடவேண்டி ஒரு தாயம் இட்டவன் தோல்வியும் அடைதலாகிய முறையை,

*“மறுவித்தம் இட்டவன் மனம்போல நந்தியாள்*
*அறிவித்து நீங்கக் கருதியாய்க்கு அப்பொருள்*
*சிறுசித்தம் இட்டான்போல் செறிதுயர் உழப்பவோ”*
*– (கலித். 136: 14-16)*

என்ற பாடலடி உணர்த்தும்.

**பந்து விளையாட்டு**

பந்து என்பது உருண்டை வடிவமுள்ள விளையாட்டுப் பொருளாகும். வீட்டின் முற்றத்தில் பெண்கள் பந்தாடியுள்ளனர்.

*“பெருங்கண் ஆயம் உவப்ப தந்தை*
*நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்து*
*பந்தொடு பெயரும் பரிவிலாட்டி”– (நற்.140:5-7)*

என்னும் குறிஞ்சித்திணைப்பாடலடிகளில் தோழியர் மகிழுமாறு தன் தந்தையின் நெடிய தேர் இயங்கும் வெண்மணல் பரவிய முற்றத்தில் பந்தொடு விளையாடிய தலைவி பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

*“பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்*
*விளையாடு ஆயமொடு அயர்வோ ளினியே”– (குறுந்.396:1-2)*

என்ற பாடலடிகளில் பந்து விளையாட்டு ஆயத்தோடு சேர்ந்து ஆடுவது என்னும் செய்தி சுட்டப்பட்டுள்ளது.

*“வளங்கெழு திருநகர்ப் பந்துசிறிது எறியினும்’– (அகநா.17:1)*

என்ற பாலைத்திணைப்பாடலடியில் செல்வம் மிக்க அழகிய வீட்டில் மகளிர் சிறிது நேரம் பந்து எறிந்து விளையாடியது குறிப்பிடப்பட்டுள்ளது.

**பாவை விளையாட்டு**

பாவை என்றால் உருவம் என்பது பொருள். பாவை புனைந்து பாவையர் விளையாடியுள்ளனர். பாவை என்ற சொல் ஆண் பெண் என்ற இருபால் உருவங்களையும் குறிக்கும்.

*“தாதின் செய்த தண்பனிப் பாவை*
*காலை வருந்துங் கையாறோம்பென*
*ஓரை ஆயம் கூறக் கேட்டும்”– (குறுந்.48:1-3)*

என்ற பாலைத்திணைப் பாடலடிகள், பூந்தாது முதலிய பொடிகளால் செய்யப்பட்டு மிக்க குளிர்ச்சியையுடைய பனியில், துயிலவிடப்பட்ட விளையாட்டுப் பாவை பற்றிய குறிப்பைத் தருகிறது.

**மலர் கொய்தலும் மாலை தொடுத்தலும்**

மரங்களிலும் கொடிகளிலும் மலர்ந்துள்ள பல வகை மலர்களைப் பறிப்பது, மாலையாகத் தொடுப்பது, பாடிக்கொண்டே மலர்களைப் பறிப்பது ஆடையாகத் தைப்பது, அணிகலன்களாக அணிந்து கொள்வது என ஆயத்தாருடன் சேர்ந்து விளையாடும் விளையாட்டாகவும் தலைவன் தலைவி ஆகிய இருவரும் சேர்ந்து விளையாடும் விளையாட்டாகவும் இது அமையும்.

*“பூக்கொய் மகளிரின் தோன்றும் நாடன்”– (குறுந்.26:3)*

*“ஓங்கல் வெண்மணல் தாழ்ந்த புன்னைத்*
*தாதுசேர் நிகர்மலர் கொய்யும்*
*ஆயம் எல்லாம் உடன்கண்டன்றே”– (குறுந்.311:4-7)*

என்னும் குறிஞ்சி, நெய்தல் திணைக்குரிய பாடலடிகள், தலைவி தோழியருடன் இணைந்து மலர் கொய்த செய்தியைக் கூறுகின்றன.

*“கடுந்தேர் ஏறியும், காலின் சென்றும்*
*கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்*
*கைதை தூக்கியும், நெய்தல் குற்றும்*
*புணர்ந்தாம் போல.............................”– (நற்.349:1-4)*

என்ற நெய்தல் திணைப் பாடலடிகள், தலைவன் தலைவிக்கு வளைந்த கழியின் அருகிலுள்ள அடும்பின் மலரைப் பறித்து கொடுத்ததையும் தாழம்பூவைப் பறிக்குமாறு தலைவியைத் தூக்கி நின்றதையும் நெய்தல் மலரைக் கொய்து கொடுத்ததையும் எடுத்துரைக்கின்றன. இவற்றால் தலைமக்கள் சேர்ந்து விளையாடிய அவர்களின் அன்பை வெளிப்படுத்தும் விளையாட்டாக மலர் கொய்தலும் மாலை தொடுத்தலும் அமைவது விளங்கும்.

**வட்டு**

உருண்டு செல்வதற்கு வசதியாக வட்ட வடிவமாக உள்ள காய்களை உருட்டி விளையாடும் விளையாட்டு வட்டு ஆகும். இது ஒரு சிறுவர், சிறுமியர் விளையாட்டு. ஆடுவதற்கு வசதியாகச் சிறுவர்கள் தரையில் கோடு கிழித்துக் கொண்டு விளையாடுவர்.

*“ஈன்பருந்து உயவும் வான்பொரு நெடுஞ்சினைப்*
*பொரி அரை வேம்பின் புள்ளி நீழல்*
*கட்டளை அன்ன இட்டு அரங்கு இழைத்து*
*கல்லாச் சிறாஅர் நெல்லி வட்டு ஆடும்”– (நற்.3:1-4)*

என்னும் பாடலடிகளில், வேப்ப மரநிழலில் வேறு தொழில் ஒன்றும் கற்றறியாத சிறுவர்கள் பொன்னை உரைத்து மாற்றுப் பார்க்கும் கல்லைப் போன்ற ஆடுகளத்தைக் கீறிக் கொண்டு நெல்லிக்காய்களை வட்டாகக் கொண்டு ஆடுவர் என்னும் செய்தி சுட்டப்பட்டுள்ளது.

*“............மலர் நறுந்தாது ஊதும் தும்பி*
*கை ஆடு வட்டின் தோன்றும்”– (அகநா.108:16-17)*

என்ற பாடலடிகளில் மலர்களின் மணக்கும் பூந்தாதினைக் குடைந்து உண்ணும் வண்டுகள், மகளிர் கையின்கண் வைத்தாடும் வட்டுக்களைப் போல் தோற்றம் அளித்தன என்னும் கருத்து இடம்பெற்றுள்ளது. இதனால் வட்டு என்பது உருண்டை வடிவான காய்கள் என்பதும் வண்டின் உருவம் கொண்டது என்பதும் விளங்கும்.

**மணற் குவியலில் மறைந்தாடல்**

இது மணற்குவியலில் ஒரு பொருளை மறைத்து வைத்து, அதனைக் கண்டெடுக்குமாறு தன்னுடன் விளையாடுகின்றவர்களைக் கேட்டு ஆடுவதாகும். புன்னையின் விதையை வெள்ளிய மணலுள் அழுத்தி அதைத் தோழியரைக் கண்டுபிடிக்கச் சொல்லி விளையாடியதை,

*“விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி*
*......................புன்னையது நலனே”– (நற். 172:1-5)*

என்ற நெய்தல் திணைப்பாடலடிகள் எடுத்துரைக்கும்.

இவ்வாறு சங்க கால மக்கள் தமக்கு மனமகிழ்ச்சியை ஏற்படுத்தும் விளையாட்டுகளில் ஈடுபட்டனர். ஊஞ்சல் என்னும் விளையாட்டானது அதன் விளையாட்டு முறையில் ஒன்றுபட்டும் அதற்குரிய பயன்பாட்டு பொருளினால் வேறுபட்டும் அமைகிறது. அதே போல் மலர் கொய்தல் அவரவர் திணையில் கிடைக்கும் இயற்கைப் பொருளைக் கொண்டு செய்யும் நிலையில் செய்பொருளால் வேறுபடுகின்றது. குறிஞ்சிக்கு கழங்கு. முல்லைக்கு ஏறுகோள், மருதத்துக்குச் சிறுதேர், நெய்தலுக்கு அலவன் ஆட்டல், பாலைக்குத் தாயம் என்பன அந்தந்தத் திணைக்குரிய தனித்தன்மை வாய்ந்த விளையாட்டாக விளங்குகின்றன.

**தொகுப்புரை**

- மனித இனங்கள் பற்றிய ஆய்வில் மானிடவியல் இன்றியமையாத துறையாக விளங்குகிறது.
- மானிடவியல் உடல்சார் மானிடவியல், தொல்லியல், மொழியியல், பண்பாட்டு மானிடவியல் என்னும் நான்கு முதன்மைத் துறைகளின் வாயிலாக மனித இனங்களின் வாழ்வியலை ஆராய்கிறது.
- பண்பாட்டு மானிடவியலின் துணைத்துறைகளில் முதன்மையானதாக இனவரைவியலும், இனக்குழு ஒப்பாய்வியலும் விளங்குகின்றன.
- இனவரைவியல் குறிப்பிட்ட சிறிய அல்லது பெரிய அளவில் வாழ்ந்த, வாழ்கின்ற இனங்களின் வாழ்வியல் கூறுகளை ஆராயப் பயன்படுத்தப்படும் துறையாகும்.
- மானிடவியலுக்குத் தேவையான அடிப்படைத் தரவுகளைக் கொடுக்கக் கூடிய நிலையில் மிளிர்வது இனவரைவியல் கோட்பாட்டின் வழிக் கிடைக்கும் தரவுகளாகும்.

- ❖ தமிழின மக்களின் பண்பாட்டின் தொன்மையை அறிய உதவும் வரலாற்றுப்பெட்டகமாகச் சங்க இலக்கியம் விளங்குகின்றது.
- ❖ சங்க இலக்கியப் பனுவல்கள் எதார்த்தம் நிறைந்த காய்தல் உவத்தல் இன்றித் திரட்டப்பட்ட இனவரைவியல் தரவுகளாகும்.
- ❖ இத்தரவுகளில் இனவரைவியல் கோட்பாட்டினைப் பொருத்தி ஆராய்ந்து சங்கத் தமிழரின் வாழ்வியலைச் சரியான முறையில் மீட்டுருவாக்கம் செய்யமுடியும்.
- ❖ சங்ககாலப் புலவர்களும் இனவரைவியலாளர்கள் போன்றே செயல்பட்டுள்ளனர். இனவரைவியலாளன் களப்பணியில் முதலில் உற்றுநோக்கும் பண்பான புவிச்சூழல் என்னும் உற்றுநோக்கல் உத்தி சங்க இலக்கியங்களில் பரவிக் காணப்படுகிறது.
- ❖ தமிழகம் நிலநடுக்கோட்டிற்கு அருகாமையில் அமைந்துள்ளது. ஆகையால் பருவநிலையும் அதனை ஒட்டியே அமைகிறது.
- ❖ வடக்கே வடவேங்கடம், அயிரியாறு, தெற்கே குமரிமுனை, கிழக்கே வங்காளவிரிகுடாக் கடல், மேற்கே அரபிக்கடல் எனச் சங்கத்தமிழரின் நில எல்லைகள் அமைந்திருந்தன.
- ❖ தமிழகம் மித வெப்பமண்டலப்பகுதியாக உள்ளமையால் மழையும், வெயிலும், பனியும் மிதமாகக் காணப்படுகின்றன.
- ❖ தமிழர்கள்,பருவ நிலையை அடிப்படையாகக் கொண்டு ஓர் ஆண்டின் கூறுகளை ஆறு பகுதிகளாகப் பிரித்துத் தம் வாழ்வியலை அமைத்துக் கொண்டுள்ளனர்.
- ❖ வடகிழக்கு, தென்மேற்குப் பருவக்காற்றால் மழைப் பொழிவைத் தமிழகம் பெற்றது; பெறுகிறது. இது மட்டுமின்றி நிலத்தடி நீர் வளமும் செழித்திருந்தது. அவ்வகையில் அருவி, சுனை, ஆறு என நீர்வளத்தைப் பெற்றுப் பயன்படுத்தியுள்ளனர்.
- ❖ நிலத்தின் அமைப்பையும் வகையையும் நீரின் வளத்தையும் பொருத்து மரம், செடி, கொடிகளின் வளர்ச்சி காணப்பட்டுள்ளது.
- ❖ ஐவகைத்திணைகளில் வாழ்ந்த மக்களின் நிலஅமைப்பு நோக்கியும் தொழில் நோக்கியும் பொதுப் பெயர்கள் வழங்கப்பட்டுள்ளன.

- ❖ குரம்பை என்னும் கூரை வேய்ந்த குடில்களில் சங்க மக்கள் தாம் வாழும் நிலத்தில் கிடைக்கக்கூடிய மரம், செடி, கல், நார் ஆகியவற்றைப் பயன்படுத்தி, பருவகாலச் சூழலுக்கு ஏற்பவும் நில அமைப்பிற்கு ஏற்பவும் தம் உறைவிடத்தை அமைத்துக் கொண்டனர். குரம்பையின் சாய்தள அமைப்பு இதனை நன்கு புலப்படுத்தும். அரசர், செல்வந்தர், வணிகர் ஆகியோர் தம் உறைவிடத்தைச் சுதைமண் கொண்டு மதிற் சுவர்களோடு கூடிய மாடமாளிகைகளாகக் கட்டி வாழ்ந்துள்ளனர்.
- ❖ சிறிய குடில்களையுடைய உறைவிடப் பகுதி சீறூர் எனவும் சீறூரின் தொகுப்பு மூதூர் எனவும் வழங்கப்பட்டுள்ளது. உயர்ந்த மாடமாளிகைகள் அமைந்த பகுதி மூதூர் எனவும், அதன் தொகுப்பு நெடுநகர் எனவும் வழங்கப்பட்டுள்ளது.
- ❖ சங்கத்தமிழர் தெருவையும் குடியிருப்பையும்ஒழுங்கு முறையில் அமைத்துள்ளனர்.
- ❖ சங்க மக்கள் தம் நிலப்பகுதியில் கிடைக்கும் இயற்கை சார்ந்த பொருள்களை உணவாகக் கொண்டுள்ளனர். அவ்வகையில் ஐவனநெல், மூங்கில் அரிசி, செந்நெல், வரகு, தினை, பெரும்பயிறு, அவரை, கொள்ளுப்பயிறு, மாங்காய் போன்றவற்றுடன் பாலும் விலங்கின் ஊனும் உணவாக விளங்குகின்றன. இவற்றைப் பக்குவமாகச் சமைத்து உண்டுள்ளனர். கள், தேறல் என்னும் பழச்சாற்றினைத் தேனுடன் கலந்து புளிக்க வைத்துப் பக்குவப்படுத்திப் பருகியுள்ளனர். பாலிலிருந்து தயிர், வெண்ணெய், நெய் எனப் பகுத்தறிந்து பயன்படுத்தியுள்ளனர். ஊன் உணவில் அந்தந்த நிலத்தில் வாழும் விலங்கினங்களை வேட்டை ஆடி, சுட்டும் வதக்கியும் உண்டுள்ளனர். கல் அடுப்பில் சமைத்துள்ளனர். மருதநில மக்களும் நெய்தல் நிலமக்களும் மீன் உணவு உண்டதாகச் செய்திகள் பதிவாகியுள்ளன. உணவுச்சமையல் முறைகள் அனைத்தும் சங்கத் தமிழர் நாகரிக வளர்ச்சி அடைந்த இனக்குழுவினராகச் செயல்பட்டதைக் காட்டுகின்றன.

❖ கல், மண், மரம், தோல், உலோகங்களில் இரும்பு, செம்பு, பொன் ஆகியவற்றால் தமக்குரிய புழங்கு பொருட்களைச் செய்து கொண்டனர். பொன்னால் செய்த அணிகலன்களையே பெரும்பாலும் அணிந்துள்ளனர்.

❖ பருத்தி நூல் கொண்டு நுண்ணிய துகிலாகிய ஆடை நெய்து அணிந்துள்ளனர். இதனால் பருத்தி வளர்வதற்கு உகந்த மண் வள நிலப்பரப்பு இருந்தமை புலனாகும். பட்டுநூல் கொண்டு பட்டாடை நெய்து பயன்படுத்தியுள்ளனர். இது பட்டுநூல் தயாரிக்கும் தொழில்நுட்ப அறிவைச் சங்கத்தமிழர் பெற்றிருந்தமையை வெளிப்படுத்துகிறது. தழையுடை களவுக் காலத்தில் சிறப்பிற்குரிய குறியீடு கொண்ட ஆடையாகக் கருதப்பட்டுள்ளது.

❖ ஆண்களும் பெண்களும் தலையில் மலரணியும் வழக்கமுடையவர்களாக இருந்துள்ளனர். பெண்கள் நெடுங்கூந்தலை விரும்பி வளர்த்துள்ளனர். அதில் பொன்னாலும் மணியாலும் ஆன அணிகலன்களையும் தொடுத்த மலர்களையும் அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டுள்ளனர்.

❖ சங்ககாலச் சிறுவர் சிறுமியர் தம் நிலம் சார்ந்த பொருட்களைக் கொண்டு பொழுதுபோக்கு விளையாட்டை விளையாடி மகிழ்ந்துள்ளனர்.

❖ மானிடவியலாளர் வகைப்பாட்டின் படி நோக்குங்கால் சங்ககால மக்கள் பன்னெடுங்காலமாய் நாகரிக வளர்ச்சி பெற்று வாழ்ந்த இனக்குழுவினர் என அறிய இயலும்.

❖ சங்கத்தமிழர் இனம், தம் நிலம் சார்ந்த பருவச் சூழ்நிலைக் கேற்ப வளரும் இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தி தம் வாழ்வியலை அமைத்துக் கொண்டுள்ளனர் என்பது புலனாகும். சங்க மக்களின் நிலம் சார்ந்த பண்பாடானது, பரிணாம வளர்ச்சியில் செழுமைபெற்றிருப்பது புலப்படும். ஆதிகாலச் சமூக எச்சங்கள் அங்காங்கே காணப்பட்டாலும் சங்கத்தமிழரின் பண்பாடானது நாகரிக வளர்ச்சி பெற்ற சிறந்த பண்பாடு என்பது தெளிவாகும்.

## சான்றெண் விளக்கம்

1. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.1
2. Yu.v.Bromlly, theoretical ethnography, p.124
3. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.46
4. மேலது, ப.46
5. Yu.v.Bromlly, theoretical ethnography, p.124
6. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், பக்.5-41
7. மேலது, ப.19
8. மேலது, ப.68
9. பக்தவத்சல பாரதி, மானிடவியல் அறிமுகம், ப.44
10. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.105
11. Yu.v.Bromlly, theoretical ethnography,p.8
12. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.12
13. மேலது, ப.11
14. மேலது, பக்.63-64
15. மேலது, பக்.65-66
16. மேலது, பக்.108-109
17. பக்தவத்சல பாரதி, சமூக மானிடவியல், ப.46
18. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.110
19. மேலது, ப.120
20. க.ப.அறவாணன் தமிழரின் தாயகம், ப.13
21. ஞா.ஸ்டீபன், தொல்காப்பியமும் இனவரைவியல் கவிதையியலும், ப.2
22. ஆ.தனஞ்செயன், விளிம்புநிலை மக்களின் வழக்காறுகள், ப.3
23. அ.சிவசுப்பிரமணியன், இனவரைவியலும் தமிழ் நாவலும், ப.9
24. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.119
25. மேலது, ப.119
26. மேலது, ப.120
27. ஆ.தனஞ்செயன், விளிம்புநிலை மக்களின் வழக்காறுகள், ப.15
28. பக்தவத்சல பாரதி, பாணர் இனவரைவியல், ப.12
29. ஞா.ஸ்டீபன், தொல்காப்பியமும் இனவரைவியல் கவிதையியலும், ப.17

30. க.ப.அறவாணன், தென்னாடு, ப.8
31. Copy right @ 2011 www.mapaf india.com (update on 18th December 2011)
32. V.Kanakasabai.V., THE TAMILS EIGHTEEN HUNDRED YEARS AGO,p.17
33. வே.தி.செல்லம், தமிழக வரலாறு, ப.31
34. மேலது, ப.33
35. மேலது, ப.34
36. அகில் - நற்.282:7, குறுந்.339:1
37. அசோகு – செயலை – நற்.244:10, 376:7, குறுந்.214:4, ஐங்.211:3, 273:1
38. அரையமரம் - ஐங்.325:1
39. ஆலமரம் - நற்.343:4, குறுந்.15:2, ஐங்.303:1
40. இலவம் - நற்.105:1, ஐங்.320:1, 338:1, 368:1, 26:5, 33:10, அகநா.11:3
41. இருப்பை – குறுந்.329:1, அகநா.9:3, 15:13
42. இற்றி மரம் - ஐங்.279:1, நற்.162:9
43. ஈங்கை மரம் - நற்.181:4, 124:4, 2:6, 79:1, 193:1, 205:9, 312:2, குறுந்.110:5, 380:5, ஐங்.456:3
44. ஈச்ச மரம்,ஈந்து – நற்.2:2, 126:2, 174:1
45. ஊகாய்மரம் - குறுந்.274:1, 363:4, 66:2
46. ஓந்தி – நற்.92:2
47. ஓமை – நற்.84:8, 137:7, 198:2, 252:1, 279:7, 318:2 குறுந்.79:2, 124:2, 207:2, 260:8, 396:4, ஐங்.316:4, 321:2 அகநா.3:2, 5:8
48. கணைய மரம் - கலித்.25:9
49. கல்யாண முருங்கை - நற்.73:1, குறுந்.156:2, 103:2, கலித்.33:4, அகநா.3:15
50. காஞ்சி மரம் - குறுந்.10:4, 127:3, ஐங்.1:4, கலித்.26:3, 34:8
51. குருந்த மரம் - நற்.321:9, குறுந்.148:4, ஐங்.439:2
52. காயா மரம் -நற்.371:1, 242:4, குறுந்.183:5, ஐங்.412:1, 420:2, அகநா.14:2
53. குரவமரம் - நற்.56:1, 266:2, 224:3, குறுந்.341:1, ஐங்:344:2, 357:1,

54. கொன்றை மரம் - நற்.99:9, 141:3, 221:4, 242:3, 296:4, 302:2, 364:10, 371:1, குறுந்.21:3, 66:1, 148:3, 183:1, ஐங்.412:1, 420:1, 430:1, 435:3, 458:1, 462:2, 497:1, 500:1, அகநா.4:2, 15:5

55. கோங்குமரம் - குறுந்.254:2, 337:1, கலித்.33:11, 42:16, 56:23, நற்.86:7, 202:11, ஐங்.343:2, 366:5, 367:1, 370:1,

56. சந்தன மரம் - நற்.1:4, 5:4, 7:9, 55:11, 64:5, 140:2, 168:10, 261:8, 292:1, 328:9, 259:6, 265:5, 261:8, 292:1, 328:9, 351:6, குறுந்.198:7, ஐங்.212:1, 240:3, 253:1, 254:1, கலித்.9:12, 40:4, 43:3, 52:6, அகநா.2:6, 13:4,

57. செங்கருங்காலி – நற்.337:5, ஐங்.93:2

58. ஞாழல் - நற்.31:5, 54:9, 74:5, 96:1, 106:7, 167:8, 191:1, 267:4, 311:7, 315:7, குறுந்.50:1, 81:2, 310:6, 318:2, 328:1, 397:1, ஐங்.103:2, 141:1, 143:1, 144:1, 145:1, 146:1, 147:1, 148:1, 149:1, 150:1, 169:2, கலித்.26:4, கலித்.56:2

59. ஞெமை மரம் - நற்.394:2, 369:7, குறுந்.285:6

60. தடாமரம் - குறுந்.160:3

61. தில்லைமரம் - ஐங்.131:2, நற்.195:3

62. தென்னை மரம் - நற்.40:2

63. நறுமோரோடம் - நற்.337:5

64. நாவல் மரம் - நற்.35:2

65. நுணாமரம் -ஐங்.342:3

66. நெல்லி மரம் - நற்.3:4, 271:5, குறுந்.201:4, 209:1, 317:2, 235:3, ஐங்.334:2, 381:1, அகநா.5:9,

67. நொச்சி மரம் - குறுந்.138:3, நற்.184:9, 246:3, 293:1, 305:2

68. பித்திகை – நற்.97:7, 314:3

69. பனை மரம் - நற்.146:3, 220:1, 253:7, 377:1, குறுந்.17:1, 81:7, 173:2, 177:3, 182:1, 248:5, 293:2, 281:2, 301:1, 372:1, 374:6, நற்.126:6, 133:10, 142:4, 146:3, 169:8, 174:2, 300:12, 38:9, 123:4, 135:1, 152:1, 199:1, 271:9, 281:2, 303:4, 323:1, 335:7, 338:9, 354:2, 372:2, 392:4-6, ஐங்.114:4

70. பலா மரம் - நற்.26:6, 44:9, 51:10, 77:5, 102:5, 116:6, 180:1, 192:8, 201:5, 213:2, 232:5, 326:1, 353:4, 373:1, குறுந்.83:4, 90:4, 153:2, 257:3, 342:1,

365:5, 373:6, 385:1, 352:1, ஐங்.214:1, 216:3, 351:1, கலித்.41:9, 41:15, 50:12, அகநா.2:3, 8:7, 12:8,

71. புன்னை மரம் - நற்.31:10, 49:8, 63:3, 67:5, 74:7, 78:3, 87:6, 91:2, 94:6, 96:2, 101:4, 159:6, 163:8, 167:1,8, 172:5, 175:5, 222:7, 249:1, 278:1, 307:6, 311:9, 315:7, 323:7, 327:8, 354:5, 375:6, குறுந்.5:2, 123:3, 175:3, 236:4, 296:1, 299:3, 260:6, 303:6, 351:6, ஐங்.103:1, 110:1, 117:2, 132:1, 161:2, 189:1, அகநா.10:3
72. புங்க மரம் - குறுந்.341:2, நற்.9:5, ஐங்.347:3, ஐங்.368:1, கலித்.33:11
73. புளிய மரம் - ஐங்.51:3
74. மருதமரம் - நற்.330:5, 350:3, குறுந்.258:3, ஐங்.7:4, 31:3, 33:2, 70:2, 74:3,
75. மாமரம் - நற்.100:2, 118:1, 230:2, 243:3, 304:6, குறுந்.8:1, 73:3, 192:4, 201:2, 278:1, 292:2, 306:4, 331:6, ஐங்.10:4, 14:2, 19:1, 61:1, 87:2, 158:5, 349:2, கலித்.27:15, 28:22, 29:7
76. முருங்கை/முருக்கு – கலித்.33:4, அகநா.3:15
77. மூங்கில் - நற்.95:5, 386:5, 147:8, 82:2, 257:3, 51:1, 55:2, 85:2, 232:4, 276:9, 116:4, 119:8, 204:10, 213:5, 232:4, 294:3, 322:3, 333:2, 334:3, 352:10, 390:10, 393:6, 150:10, 28:7, 46:8, 62:1-3, 105:3, 166:3, 264:7, 366:10, குறுந்.18:1, 54:3, 74:2, 100:7, 115:4, 119:1, 179:5, 180:4, 185:2, 201:4, 226:1, 239:6, 268:6, 276:1, 346:1, 385:4, 279:8, 364:5, 304:2, 318:6, 7:6, 131:1, 253:5, 266:4, 331:1, 338:6, 396:7, ஐங்.220:2, 239:4, 278:1, 280:2, 291:2, 293:3, 20:3, 135:1, 175:1, 307:1, 315:4, 318:2, 395:1, கலித்.1:9, 38:26, 39:48, 40:8, 45:1, 50:1, 55:11, 57:1, 11:14, 14:1, 20:15, 25:6, 30:9, அகநா.8:8, 12:12, 6:6, 1:8, 15:18, 17:1
78. யாமரம் - குறுந்.198:1, 37:3, 232:5, 255:1, 307:6, நற்.186:7, 198:1, ஐங்.388:2
79. வஞ்சி - ஐங்.50:2
80. வாழை - நற்.232:3, 176:6, 188:1, 251:2, 309:4, 355:3, 399:4, 308:1, 400:1, குறுந்.308:1, 327:7, கலித்.41:15, 50:3, அகநா.8:9, ஐங்.460:3
81. வில்வம் - நற்.119:9, குறுந்.7:5, 39:2, 347:2, 369:1
82. வாகை – குறுந்.7:5, 39:2, 347:2, 369:1

83. விளாமரம் - நற்.24:2, 24:5,

84. வெட்சிமரம் - குறுந்.209:5

85. வெண்பாலை – நற்.107:2

86. வெண்கடம்பமரம் - நற்.34:8, 64:4, 20:3, 100:2, 92:3, 148:5, குறுந்.87:1, 99:4 92:3 22:3 211:4, ஐங்.331:2, 348:2, 383:1, 357:1, 400:1, கலித்.36:1, அகநா.3:11, 3:1

87. வெள்ளோந்திர மரம்/வெள்ளிலவமரம் -ஐங்.301:1

88. வேங்கை - நற்.2:6, 79:1, 181:4, 124:4, 193:1, 205:9, 312:2, குறுந்.110:5 380:5, ஐங்.456:3

89. வேம்பு - நற்.103:2, 279:1, குறுந்.24:1, 67:2, 196:1, 281:3, ஐங்.30:1, 339:2, 350:2

90. அடம்பங்கொடி - நற்.254:2, 145:2, 272:3, 338:2, 349:2, குறுந்.243:1, 248:5, 349:1 401:1, ஐங்.101:2

91. அல்லி - நற்.100:3, 200:6, 230:3, 290:11, 300:3, 354:3, குறுந்.46:1, 80:1, 84:5, 117:1, 122:2, 178:3, 300:2, 312:1, 370:1, ஐங்.21:2, 34:2, 35:2, 40:5, 57:2, 68:1, 72:1, 91:2, 93:2, 96:2, 215:4, அகநா.6:1, கலித்.13:12

92. அவரைக்கொடி – குறுந்.240:1, ஐங்.209:3, 271:1, 286:2,

93. இண்டங்கொடி - நற்.2:6,

94. கரந்தைக்கொடி – ஐங்.26:1,

95. கருவிளை/காக்கணங்கொடி – நற்.221:1, 262:1, ஐங்.464:7, குறுந்.110:3

96. காந்தள் - நற்.17:10, 34:2, 85:10, 173:2, 176:6, 185:8, 188:4, 313:6, 359:2, 379:13, 399:2, 69:5, 99:9, 161:7, 221:2, 29:1, குறுந்.1:4, 62:1, 76:1, 100:1, 107:1, 167:1, 185:6, 239:3, 259:2, 265:1, 284:3, 361:4, 373:7, ஐங்.223:2, 226:2, 254:2, 259:5, 293:1, 440:3, கலித்.39:14, 40:12, 43:8, 45:2, 48:11, 59:3, 7:15, அகநா.4:15

97. செங்கழுநீர் - நற்.260:1,

98. தமாலம் - நற்.292:2,

99. தாமரை - நற்.260:2, 300:4, 310:1, குறுந்.127:2, 300:3, 310:1, 376:5, ஐங்.6:4, 20:2, 53:3, 68:2, 424:3, கலித்.5:14, 13:11, 22:15, 31:5, 39:2, 52:6, 59:1, அகநா.6:16

100.தெறும்- நற்.302:5,

101.நறைக்கொடி – கலித்.54:9, 91:2, 101:12, 103:21, 104:31, 105:25, நற்.51:3, குறுந்.339:1, ஐங்.276:2, அகநா.242:18, 257:2, 282:9,

102.நீலமலர் - குறுந்.66:5 144:1, ஐங்.2:4, 116:2, கலித்.7:11, 14:2, 15:20, 33:28

103.பவர் - நற்.5:3, 391:3,

104.பாகற்கொடி – ஐங்.99:1, அகநா.15:4

105.பிரப்பங்கொடி – குறுந்.91:1, ஐங்.275:2, அகநா.6:19

106.பித்திகம்/பிச்சி - குறுந்.222:5

107.பீர்க்கங்கொடி – நற்.197:2, 277:7, குறுந்.98:5, ஐங்.452:5, 464:2, 31:4

108.மாணைக்கொடி –குறுந்.36:1

109.மிளகுக்கொடி - நற்.151:7, 297:8,குறுந்.90:2, 288:1, ஐங்.243:1, 216:1, கலித்.52:17, அகநா.2:6

110.முல்லைக்கொடி - நற்.59:8,61:8, 62:1, 64:17, 122:4, 69:5, 108:7, 115:6, 169:5, 242:2, 316:2, 321:3,361:1, 369:3, 366:5, 343:1, குறுந்.19:4, 62:1, 108:3, 126:3, 162:3, 168:1, 186:2, 188:1, 193:6,220:3,221:1, 234:2,240:3, 242:3, 275:1, 232:4, 348:3, 358:7, 382:1, 382:3, 387:1, 408:2, 412:1, 422:2, 437:3,440:3, 447:2, 448:3,454:1-3, 489:2, 492:2, 494:2, 499:1, அகநா.4:1, கலித்.14:3,22:9, 27:4, 30:11,

111.குளவி - நற்.51:8,52:1, 124:5, 119:8, 232:2, 337:3, 346:9, 376:5,391:4, 34:8, குறுந்.56:2, 59:3, 100:2, ஐங்.279:2, 345:2,

112.வயலைக்கொடி - நற்.179:1,305:1, 311:2,ஐங்.11:1, 25:2,52:1, 211:2,

113.வள்ளைக்கொடி –ஐங்.26:2, அகநா.6:17

114.வள்ளிக்கொடி –நற்.269:7,295:1, குறுந்.216:2,கலித்.39:12

115.அதவம் - நற்.95:3, குறுந்.24:3

116.அலரி - நற்.118:9, 145:2, 214:2, 286:2, 314:3, 321:3,

117.அரலை - நற்.121:4,

118.ஆவிரை – குறுந்.173:1

119.இருப்புமுள் - நற்.360:7,

120.உழுத்தங்காய் - குறுந்.384:1

121.எருக்கம் பூ - நற்.152:2,220:2, குறுந்.17:2

122.எள் - குறுந்.261:2

123.எறுழம் - நற்.302:5,

124.கள்ளிச்செடி - நற்.314:9, 384:2, குறுந்.16:5, 154:5, 174:2,ஐங்.115:2,

125.களாச்செடி - நற்.256:6,

126.கவலைக்கிழங்கு –குறுந்.233:1, ஐங்.208:1,270:1,

127.கருணைக்கிழங்கு - நற்.367:3,

128.குருக்கத்தி -நற்.97:6,

129.குமிழம் - நற்.6:7, 274:5,286:2,

130.குவளை - நற்.273:8, 34:2, 85:1, 160:8, 204:4, 205:6, 317:9, 382:2, 357:8, 376:5, 391:8, 161:2, 367:8, 370:8,105:8, 37:4, 166:1, 205:6, 262:7, 271:8, குறுந்.30:4, 62:2, 167:3, 270:6, 291:6, 300:1, 321:2, 329:1, 342:5, 346:4,388:1, ஐங்.72:3, 73:3, 225:2, 277:5, 299:2, 471), 500:2, கலித்.41:31, 64:16, 66:13

131.குல்லை - குறுந்.11:5,நற்.376:5

132.குறுக்காண்தட்டை - குறுந்.170:2,

133.குறிஞ்சி - குறுந்.3:3, நற்.268:3, நற்.301:1

134.கொடிச்சி – நற்.204:11, 306:3

135.செருத்தி - ஐங்.18:1, 112:2, 141:1, 182:1, கலித்.26:2

136.தாழை (கண்டல்) – நற்.19:2, 49:9, 54:11, 74:10, 78:4, 123:9,131:4, 163:8, 178:5, 203:4, 207:1, 211:1, 235:2, 270:1, 299:2, 349:3, 363:1, 335:4, குறுந்.117:3, 163:4, 219:6, 226:5, 228:1, 245:3, 303:2, 304:7, 340:4, 345:5

137.தினை –நற்.13:5, 102:9, 108:1, 128:7, 194:9, 204:1,206:2, 209:4,267:4, 288:8, 304:1, 306:1,6, 313:2, 317:3, 328:3, 336:2, 344:2, 368:1, 373:8, 376:2, 386:3, 389:6, குறுந்.25:3, 54:2, 72:4, 82:4,105:1, 133:1, 141:1, 142:2, 198:2, 217:1, 263:1, 291:1, 335:2, 339:1, 346:5, 357:5, 360:5, 362:3,375:3,392:4, 394:5, 397:1, ஐங்.207:2, 260:4, 261:1, 262:1, 263:1, 268:2, 282:1, 283:2, 284:2, 285:2, 286:1, 287:2,288:4, 289:2, கலித்.37:12, 39:7,40:3, 50:9, 52:14, அகநா.12:6, ஐங்.469:1, நற்.267:4,குறுந்.226:1, நற்.13:5, 102:9, 108:1, 128:7

138.தும்பை –ஐங்.127:2,

139.நறவம் - நற்.25:2, கலித்.54:9

140.நீர்முள்ளிச்செடி (முண்டகம்) - நற்.191:9, 207:2, 245:2, 311:3, குறுந்.49:1, 51:1, ஐங்.108:2, 121:2, 177:3,

141.நெருஞ்சி – குறுந்.315:4,88:2,

142.பருத்தி (பாரம்) - நற்.41:4,

143.பயிற்றம்பயிறு – குறுந்.338:3,

144.பாதிரி - நற்.52:1, 118:8, 337:4, குறுந்.147:1, ஐங்.346:2, 361:2,

145.பிடவம் - நற்.25:2, 99:9, 238:3, 242:1, 246:8, 256:6, குறுந்.251:3, ஐங்.412:2, 435:3, 461:1, 499:1,

146.பெரும்பயிறு –ஐங்.47:3,

147.மஞ்சள்கிழங்கு - நற்.101:1,

148.மரல்/கற்றாழை – கலித்.6:1, 13:5

149.வரகு –குறுந்.220:1, 282:2,

150.இருஞ்சாய்/தண்டான் கோரை - நற்.60:9, ஐங்.18:1,

151.நாணல் - நற்.241:5, ஐங்.11:1, 12:1, 13:2, 14:1, 15:3, 16:1, 17:1, 18:1, 19:3, 20:3,

152.நரந்தம் -குறுந்.52:3,கலித்.54:5

153.செந்நெல் - நற்.18:2, 190:5, 195:6, 275:1, 371:2, 373:4, 400:2, ஐங்.267:3, 285:3, 43:4, 238:2,1:2,3:4, 4:4, 27:1, 30:2, 47:1, 48:3, 49:2, 95:2, குறுந்.238:2, 296:4, 371:2,43:4,அகநா.13:19

154.கரும்பு - நற்.241:5, ஐங்.4:4, 12:1, 18:2, 55:1, 65:1,87:2, குறுந்.35:3, 149:3, 180:3, 198:2, 267:2, கலித்.40:28, அகநா.6:8, 13:22

155.பாசி - நற்.60:9, ஐங்.206:4,

156.கோரை - நற்.60:9, ஐங்.54:5, 76:1, 155:5, 383:5,

157.குறவன் - நற்.5:3, 44:8, 64:4,102:8, 108:3, 201:1, 209:2, 341:5,353:5, ஐங்.213:2, 251:1, 252:1, 284:2, அகநா.12:9, 78:7,182:6, குறுந்.339:3, 346:2, கலித்.39:15

158.குறமகள் - ஐங்.285:1,

159.வெற்பன் - நற்.36:4, 104:7, 188:5, 194:8, 282:9, 353:7, 231:1, அகநா.18:8,38:5, 42:14, 98:5, 112:13, 16:3, 242:2,392:18, குறுந்.353:1, 355:5, 359:8, 374:3,கலித்.39:50, 41:16, 43:31, 44:7, 50:5, 53:7, 17:12, ஐங்.300:2

160.வேட்டுவர் - அகநா.28:8

161.கொடிச்சியர் - நற்.82:3, 85:9, 95:8-9, 134:4, 204:11, 276:4, 306:3, 373:3, 379:5, ஐங்.256:2, 258:2, 260:2, 281:3, 282:2, 288:3, 289:1, 290:3, 296:1, 298:2, 299:3, 300:1,

162.கானவன் - நற்.65:6, 75:6, 82:11, 85:8, 165:2, 336:3, 386:2,393:5, ஐங்.208:1, 268:2,270:2, அகநா.88:5, 102:2, 132:5, 168:13, 172:6, 248:6,282:2,322:2, 342:2, குறுந்.333:4,335:6,379:2, 385:2, கலித்.41:8

163.புனவர் - நற்.119:1, ஐங்.246:3, 295:3,

164.நாடன் - நற்.119:3, 322:7, 373:4, 386:5, 389:10, 396:7, ஐங்.212:2, 214:3, 216:4, 220:2, 241:3, 251:2, 252:2, 258:3, 261:2, 266:2, 269:2, 271:2, 272:3, 274:3, 275:3, 280:3, 282:3,283:3, 285:3, 286:3, 287:2, 289:4, 296:2,

165.மலைநாடன் - நற்.55:1, 57:7,.61:9, 65:9, 85:11, 158:9, 168:6, 232:6, 251:4, 257:7, 294:9, 304:4, 399:8, குறுந்.3:4, 13:3, 26:3, 36:2, 42:3, ஐங்.202:4, 205:3, 219:3, 228:2, 242:5, 249:4, 262:3, 268:4, 276:6,292:2

166.பெருங்கல்நாடன் - நற்.93:5, 98:7,112:4, 233:4, 259:3, 328:3, குறுந்.365:6,371:3, 373:8, 377:4, 379:3, 389:3,

167.குன்ற நாடன் - நற்.114:6, 151:12, 165:5, 217:5, 285:8, 288:4, 359:3, குறுந்.87:3, 88:1, 90:6,105:5, 106:2, 111:5,115:6, 121:4, 134:7, 143:2, 150:3, 170:4, 187:3, 201:7, 308:6, 315:2,317:4, 327:3,342:4, 346:3, 360:8, ஐங்.230:5, 246:6, 263:3, 265:3, 267:3, 295:6, 299:1

168.பெருமலை நாடன் - நற்.309:6,

169.கானகநாடன் - குறுந்.54:5, 74:2, 83:5, ஐங்.217:3, 253:3

170.கானம் கிழவோன் - ஐங்.250:3

171.மலைகிழவோன் - நற்.25:5, 32:3, 44:12, 47:6, 51:10, 102:7, 108:5, 175:7, 228:9, கலித்.38:9, 38:23, 39:10, 39:37, 41:23,41:29, 41:44, 42:4, 43:6, 43:14, 43:22, 46:9,48:7,49:9, 52:5,ஐங்.204:5, அகநா.108:18, குறுந்.392:8

172.கோவலர் - நற்.69:8, 266:1, 289:7, 364:9, 371:8, ஐங்.439:2, 476:3, குறுந்.358:6, கலித்.106:4, அகநா.14:7, 54:10, 124:14,214:12,264:4,354:5

173.இடையன் - நற்.142:4, 169:7, அகநா.94:4, 274:8, 394:13

174.இடைமகன் - நற்.266:3,

175.நாடுகிழவோன் - ஐங்.404:4

176.புறவுஅணிநாடன் - ஐங்.405:4,424:1

177.புறவின் நாடுகிழவோன் - ஐங்.406:4, 407:4

178.புன்புலநாடன் - ஐங்.421:3

179.கான்கெழுநாடன் - ஐங்.430:3

180.நல்வயல்ஊரன் - ஐங்.459:5

181.வரையக நாடன் - ஐங்.498:5

182.கானத்தான் - குறுந்.183:7

183.கானவன் - அகநா.34:3

184.நாடன் - குறுந்.193:3

185.பொதுவன் - கலித்.101:16, 101:22, 101:28, 101:44, 101:49, 103:5, 103:22, 103:42,103:57, 104:63, 104:74, 105:27, 105:47, 105:51, 105:64, 106:17, 106:24,107:33, 111:7, 112:3, 112:21,

186.ஆயமகன் - கலித்.101:38,103:64, 103:67, 103:70, 105:52, 107:19, 109:12, 110:9, 111:22, 114:20

187.ஆயர்மகன் - கலித்.103:33, 103:37, 103:47,104:72, 105:58, 105:66,107:19, 113:7,115:4,

188.ஆயர் - கலித்.103:7, 104:6, 110:1,111:5,

189.ஆய்ச்சியர் - கலித்.106:32, 106:40

190.குறும்பொறைநாடன் -அகநா.4:13

191.வேட்டுவன் - நற்.59:3,

192.அகன்துறை ஊரன் - நற்.40:11,

193.உழவர் - நற்.60:2, 340:7, ஐங்.3:4, அகநா.346:5, குறுந்.10:3, 181:4, கலித்.68:4

194.தண்துறை ஊரன் - நற்.100:3, 280:4, 300:4, 380:9, ஐங்.2:5, 5:5, 6:5, 7:5, 9:5, 10:5, 13:3, 21:3, 83:4, 88:2, அகநா.56:8,76:2,216:5, 286:7, குறுந்.91:3, கலித்.71:8, 79:6

195.ஊரன் - நற்.180:3, 210:4, 230:5, 260:4, 290:3, 330:6, 390:7, 400:4, ஐங்.15:3,4,16:3, 17:2, 19:4, 22:2,26:2, 27:2, 30:3, 36:1, 39:1, 45:3, 47:3,

48:3,51:2, 54:4, 63:2,68:2, 75:2, 81:3, 85:3, 86:2, 89:3, 94:5, 95:3, 98:2, அகநா.46:6

196.யாணர் ஊரன் -ஐங்.1:6, 42:2, 43:3, 49:3, 50:2, 70:3, 87:3,அகநா.226:2, 246:4,குறுந்.85:6, 107:6,

197.துறைகேழ் ஊரன் - ஐங்.11:2, 12:2, அகநா.106:5, 276:5, 336:10

198.அணித்துறை ஊரன் - ஐங்.14:3

199.மூதூர் ஊரன் - ஐங்.15:3

200.கழனி ஊரன் - ஐங்.18:2, 25:3, 29:3, 60:2, 91:3, 96:3, அகநா.146:5

201.துறை நனிஊரன் - ஐங்.20:4

202.புனல் அணி ஊரன் - ஐங்.23:2

203.புனல்ஊரன் - ஐங்.65:2, அகநா.116:4, 156:7, கலித்.67:5,68:5,

204.ஆம்பல் நாடு கிழவோன் - ஐங்.40:5

205.ஊர் கிழவோன் - ஐங்.41:4

206.கிழவோன் - அகநா.266:10, 326:11, குறுந்.34:7

207.பழன ஊரன் - ஐங்.53:4, 96:4

208.கழனிஊரன் -அகநா.266:17,366:8

209.வளம்கேழ் ஊரன் - அகநா.26:4

210.பூக்கேழ் ஊரன் - அகநா.36:8

211.மாநிதிக்கிழவோன் - அகநா.66:17

212.கழனிஊரன் - அகநா.216:9

213.தூண்டில் வேட்டுவன் - அகநா.36:6

214.நாடன் - குறுந்.271:2

215.கொழுநன் - குறுந்.293:8

216.ஊரவர் - கலித்.74:15,72:13, 95:14,

217.புனல் நல் ஊர – கலித்.78:10,

218.மனையோள் - ஐங்.81:5, குறுந்.164:5, அகநா.396:15

219.ஊரன் மகள் - ஐங்.97:3, 99:3,

220.யாணர் ஊரன் மகள் -ஐங்.100:3,

221.முதலாட்டி – குறுந்.10:1,

222.துறைவன் - அகநா.30:11, 40:16, 70:4, 170:7, 190:3, 210:6, 380:3, குறுந்.97:3, 109:2, 117:4,125:7, 248:6, 296:5, 303:3, 310:7, 313:3, 316:8,318:3, 320:4, 326:4, 328:3,349:3, 351:4, 381:6, 386:2, 401:4,கலித்.125:19, 129:9, 131:34, 133:5, 135:5, 135:5,ஐங்.103:2

223.சேர்ப்பன் - நற்.15:3, 19:5, 31:12, 49:10, 58:10, 74:5, 78:11, 91:12, 94:6, 131:3, 219:9, 235:10, 239:8, 245:12, 287:5, 299:9, 303:12, 307:5, 331:8, 354:7, 363:6, 375:3, 378:10, அகநா.50:6, 80:3, 160:8, 290:8, 310:10, 320:5, 360:15, குறுந்.145:2, 175:4, 205:5, 219:6, 226:7, 236:6, 243:4, 269:7, 304:7, 306:6, 334:4, 397:3, ஐங்.108:2, 112:2, 117:4, 157:4, 159:3, 179:1, 183:3, 196:4, கலித்.121:6, 124:4, 125:15, 126:5, 127:22, 128:6, 128:19, 128:24, 131:44, 149:3, 132:7, 136:4,

224.பரதவர் - நற்.4:1, 38:2, 45:3,74:4, 87:8, 101:8, 111:3, 175:1, 199:6, 207:9, 219:6, 239:2,303:9, 349:10, 372:11, 388:4, அகநா.10:10, பரதமாக்கள் அகநா.30:3, 70:1, 210:1, 250:11, 280:14, 300:1, 330:16, 340:19, ஐங்.195:1,குறுந்.184:6, 304:4, 320:1

225.உமணர் - நற்.4:7, 138:3, 183:5, 331:2, அகநா.30:5, 390:3

226.இனமீன் வேட்டுவர் - அகநா.270:3

227.கொண்கண் - நற்.211:10, 231:8, 249:11, 278:6,

228.துறைவன் - நற்.267:5, 272:6, 278:5, 283:3, 291:5, 315:8,327:9, 345:5, 372:5, 382:8, 388:9,

229.துறை கிழவோன் - நற்.4:11,

230.கோவலர் -நற்.264:7, ஐங்.304:1, அகநா.21:22, 155:9, 219:15, 253:12, 293:11, 311:9, 321:7, 399:11,

231.கானவர் - அகநா.21:24, 231:5, குறுந்.71:4

232.மழவர் - அகநா.35:4, 91:11, 101:5, 119:9, 121:11, 127:15, 129:12, 269:4, 337:11, 131:6, 187:7, 249:12, நற்.52:9, 387:4

233.மறவர் - அகநா.35:6, 53:10, 63:12, 67:8, 75:6, 87:7, 89:10, 105:13, 143:10, 169:4, 297:6, 297:16, 319:4, 363:10, 387:14, குறுந்.283:5,331:3, கலித்.4:3,5:2,

234.உழவர் - அகநா.37:2,41:6, 193:2, 211:5, குறுந்.131:5

235.பரதவர் - அகநா.65:11,187:22,

236.நாடன் - அகநா.105:3,நற்.171:5

237.எயினர் - அகநா.79:14, குறுந்.12:3

238.இடையர் - அகநா.183:4,

239.மள்ளர் - அகநா.185:7, 189:5,

240.உமணர் - அகநா.191:4,337:5, குறுந்.124:1

241.கள்வர் - குறுந்.16:1

242.உயர்வரை நாடன் - குறுந்.343:7

243.குன்றநாடன் - ஐங்.301:4

244.மை வரை நாடன் - ஐங்.301:4

245.இறுவரை நாடன் - ஐங்.309:5

246.நல்வரை நாடன் - ஐங்.392:5

247.கிழவோன் - நற்.10:7

248.மலைகிழவோன் - நற்.28:9

249.சிறுகுடி – நற்.4:1, 45:1, 91:9, 82:11, 85:9-11, 114:3, 191:5,கான்கெழுசிறுகுடி நற்.122:3, 156:7, 168:11, 203:6, 204:10, 213:6,232:4, 239:5, 254:12, 299:5, 323:6, 338:8, 340:9, 386:9,367:6, 374:2,169:10, குறுந்.95:3, 100:3, 108:1, 145:1, 184:2, 228:3, 322:3,332:5, 355:6, 373:7,கலித்.39:11,45:7, 50:13, 52:10,102:3, 108:58, 7:22, 54:14, 70:2, 75:7, 103:7, 117:18, 269:22, சிறுகுடிப்பாக்கம், அகநா.110:12, 140:1, 204:12 250:11, 270:2, 284:7, 300:14, 315:18, 320:5,

250.சீறூர் - நற்.3:5, 92:5,95:7-8, 135:4,343:2,346:4, 392:6, குறுந்.41:3,79:5,242:4, அகநா.9:10 84:10, 104:13,384:6, 160:17, 63:13, 77:12, 87:4, 107:18, 129:11, 171:8, 203:15, 225:13, 265:20, 283:5, 287:5, 321:10, 329:4, 331:8, 367:5, 369:22, ஐங்.382:3,

251.சேரி - நற்.150:7, 380:5, அகநா.76:2, 276:7, 386:11, 383:2, குறுந்.231:2, 258:1, 262:1, கலித்.68:16

252.ஊர் - நற்.198:11, 320:7, ஐங்.24:2, 31:2, 34:1, 83:2, 92:3,அகநா.17:11, 95:11, 189:15, 191:5, 236:17,316:9,326:1, 346:24, 383:2,குறுந்.33:2, 34:3,50:3,53:5, 231:1, 262:1, 295:6, 309:6, 354:4,368:5, 379:1,கலித்.66:2, 71:1, 76:3, 76:6, 76:21, 97:27,

253.சீறூர் - அகநா.384:6,160:17, 63:13,77:12, 87:4, 107:18, 129:11, 171:8,203:15,

254.மூதூர் - அகநா.15:7,17:19, 65:4,83:7, 113:8, 115:1, 115:3, 141:10, 165:4, 301:7, 335:11, 347:6, 347:7, ஐங்.372:3, நற்.143:7, 143:7, 293:4

255.அகநா.93:12-14

256.அகநா.93:12-14

257.நற்.175:9

258.அகநா.141:12-15

259.அகநா.393:11

260.அகநா.393:16-18

261.அகநா.207:14-17, நற்.179:1-6, 297:1, குறுந்.396:1-2, 356:6-7, ஐங்.168:3-4

262.அகநா.37:12-14

263.அகநா.15:7,

264.அகநா.89:19-22, 105:4-6

265.அகநா.394:2-10

266.குறுந்.389:1-3

267.அகநா.129:7-12, 249:11-19, 309:1-6, 97:1-6

268.ஐங்.211:1

269.அகநா.169:1-7

270.அகநா.96:1

271.குறுந்.60:3

272.கலித்.117:7-8

273.ஐங்.47:1-2

274.ஐங்.48:1-3

275.குறுந்.333:4

276.நற்.393:4-5

277.கலித்.32:1-2, அகநா.29:5-7

278.நற்.296:3

279.கலித்.79:5

280.கலித்.81:3

281.கலித்.96:9

282.கலித்.59:14

283.காதணி – கனங்குழை – மகரக்குழை – நற்.16:9, கலித்.11:7, 13:26, 57:15, 58:21, 66:13, 71:19, 80:22, 90:8, 97:14, 103:9, 104:23, 109:14, 142:13, அகநா.3:17, 6:7, குறுந்.398:3

284.முத்துவடம் - நற்.222:3, ஐங்.306:2, கலித்.4:9, 57:2, 81:4, 82:14, 85:12, 92:35, 135:18,

285.சங்குமணி – குறுந்.23:2

286.பொன்னாலான காசு மாலை – ஐங்.310:1, கலித்.85:3

287.முத்தாரம் - கலித்.79:12

288.பொன் ஆரம் - கலித்.42:17

289.முத்துமாலை – கலித்.80:4

290.பவள வடம் - கலித்.85:4

291.வல்லிகை – கலித்.96:10

292.முக்காழ் வடக்கண்டிகை – கலித்.96:14

293.சந்தன மாலை – அகநா.13:4

294.நற்.220:2

295.குறுந்.11:5

296.குறுந்.52:3

297.குறுந்.346:4

298.ஐங்.52:1

299.ஐங்.91:4

300.ஐங்.121:2

301.ஐங்.127:2

302.ஐங்.182:2

303.ஐங்.301:2

304.கலித்.9:1-4

305.கலித்.103:1-5

306.கலித்.111:7

307.கலித்.115:5

308.அகநா.6:1

309.தொடி – நற்.23:1, 25:11, 332:4, குறுந்.1:3, 238:3, 243:3, ஐங்.38:4, 40:2, 176:2, 196:2, 321:5, 329:3, 330:5, 387:3, 388:3, 416:5, 444:2, 475:1, 487:2, கலித்.24:8, 29:18, 36:4, 38:4, 54:3, 60:18, 61:21, 62:9, 73:8, 73:16, 73:13, 84:31, 85:7, 86:8, 88:3, 90:4, 90:7, 91:10, 92:34, 98:30, 100:14, 135:7, 140:19, 145:47,

310.பொன்னாலான தொடி – நற்.136:9, 166:7, 212:8

311.முத்தாலான தொடி – கலித்.59:2

312.வளையல் - ஐங்.54:3, 71:1, 76:3, 83:3, 98:3, 133:3, 136:2, 140:3, 163:4, 165:4, 171:4, 172:1

313.கழல் - குறுந்.1:3, 7:1, 15:4, ஐங்.382:2, 399:4, 400:4, கலித்.98:30, அகநா.1:1

314.சிலம்பு – நற்.12:5, 110:5, 363:10, குறுந்.7:2, ஐங்.399:1, கலித்.57:3, 58:7, 59:7, 90:11, 125:16, 147:4, அகநா.6:1

315.கிண்கிணி/சதங்கை – நற்.250:2, ஐங்.442:5, கலித்.74:13, 81:6, 85:1-2, 86:9, 96:17

316.கண்ணிற்கு மைதீட்டுதல் - நற்.184:6, 205:6, 220:9, 241:11, 271:8, 301:3, 308:2, 316:3, 325:7, குறுந்.5:5, 272:7, 377:1, 398:3, ஐங்.16:2, 21:4, 37:2, 101:4, 125:3, 126:2, 170:4, 174:3, 181:1, 190:4, 242:4, 334:5, 351:4, 376:4, 378:5, 406:1, 471:2, 480:4, 500:1, கலித்.11:22, 14:2, 15:2, 27:17, 33:9, 33:28, 37:1, 38:45, 45:11, 57:9, 58:2, 60:16, 64:21, 70:11, 82:20, 84:37, 91:13, 98:15, 100:10, 103:60, 108:16, 112:24, 125:9, 130:16, 131:4, 142:11, 146:7, 147:55, அகநா.1:5, 25:14, 27:17

317.தொய்யில் எழுதும் பழக்கம் - நற்.225:7, குறுந்.276:4, 384:1, கலித்.18:3, 54:12, 63:8, 64:8, 76:2, 76:15, 97:12-13, 112:5, 117:4, 125:8, 131:3, 142:44, 143:33,

318.மார்பில் சந்தனம் பூசுதல் - கலித்.67:11, 73:13, 79:10, 91:12, 93:1, நற்.259:6, குறுந்.321:1, அகநா.26:14

319.தழையாடை – நற்.8:2, 9:4-5, 54:8, 359:4, 363:7, 390:4, குறுந்.80:1, 159:1, 214:5, 219:6, 293:5, 294:7, 295:1-2, 345:5, ஐங்72:1, 73:1, 191:3, 201:2, 211:2-3, 256:2, 291:3, கலித்.125:13, 142:26, அகநா.7:19, 7:19

320.பருத்தி ஆடை/பட்டாடை – கலித்.56:11, 65:4, 73:17, 81:5, 81:31, 85:5, 115:14, 124:3, ஐங்.206:5, நற்.33:5, 21:2, 4

321.முச்சி – நற்.51:7, ஐங்.93:5

322.ஓதி – நற்.26:9, 29:11, 225:3-4, 252:11, 339:9, 355:8, குறுந்.211:1, 214:2-3, ஐங்.269:4, 299:3, 368:5, 394:3, 448:5, கலித்.36:23, 150:23,

323.கூழை – நற்.23:2, கலித்.56:2-4, 107:14-15, 107:30-31, 115:13, 117:9-11

324.அளகம் - நற்.377:8-9

325.கதுப்பு - நற்.85:9, 197:6, 214:4-5, 337:8, 367:7,குறுந்.246:6, 254:5, ஐங்.74:4, 196:2, 345:2-3, 396:1-2, கலித்.4:11, 28:6, 40:9, 43:23, 71:19, 90:7, 115:5-7

326.குழல் - குறுந்.34:7, கலித்.37:21

327.ஐம்பால் - நற்.100:4, 140:3, 245:1-3, 337:7, 366:4, குறுந்.229:1, ஐங்.84:3, கலித்.29:6, 32:1-5, 57:1, 58:1, 59:8, 60:2, 125:16-17, 131:39-40

328.கூந்தல் - நற்.10:2-3, 20:3, 42:7-11, 52:1-3, 160:6-7, 284:1, 298:11, 313:1-4, 374:7, குறுந்.2:4-5, 23:2, 116:1, 208:2-4, 209:6-7, 225:6-7, 270:6-8, 272:8, 286:2-3, 312:5-6, 384:2, ஐங்.72:2, 76:1, 82:4, 173:3-4, 178:1, 191:2, 196:1, 225:1-3, 231:2, 232:1, 267:4, 294:5, 299:3, 300:1, 304:3-4, 306:4, 308:1, 374:3, 383:6, 411:4, 417:3-4, 495:3, கலித்.க.வா.10, கலித்.14:4, 22:12-14, 33:28, 40:8, 42:29, 49:18, 64:2-6, 72:20, 78:17, 80:23, 87:1, 89:1, 93:21-22, 93:35, 95:1-2, 96:8, 97:28, 104:20), 105:53-57, 111:12, 112:16, 122:12, 131:21, 140:33, 145:7, 147:19,

## இயல் இரண்டு

## சங்க அகத்திணைப் பாடல்களில் தொழில்சார் மக்களினம்

ஒரு சமுதாயம் குறைந்த அளவு அடிப்படைத் தேவைகளில் தன்னிறைவு அடைந்துள்ளது என்பது, அச்சமுதாயம் தமக்குள் நிறைவேற்றிக்கொண்ட உணவு, உடை, உறையுளின் தேவையைப் பொறுத்தே மதிப்பிடப்படுகிறது.'மக்கள் வாழ்விற்காகத் திட்டமிட்ட முறையில் புறச்சூழல்களோடும் சமூகச் சூழல்களோடும் இடைவினை புரியும் செயலே பொருளாதாரச் செயல்கள் எனப் பொருளியல்சார் மானிடவியலாளர் கூறுவர்.[(1)] மக்கள் தம் சுற்றுச்சூழலில் கிடைப்பனவற்றில் மிகப் பெரும் பகுதியைப் பயன்படுத்திக் கொள்ளும் உத்தியே பொருளாதார நடவடிக்கைகள் என்றும் அதனை வேறுவகையில் பொருள்படுத்திக் கூறுவார் நாஷ்.[(2)] அனைத்துச் சமுதாயங்களிலும் பொருளாதாரச் செயல்களின் இறுதி இலக்கு பொருள் உற்பத்தியாக அமைகிறது. இந்த உற்பத்தி என்னும் இலக்கில் நிலம், உழைப்பு (labour), தொழில்நுட்பம், மூலதனம் ஆகிய காரணிகள் மிகவும் முதன்மையானவையாகச் செயல்படுகின்றன. இங்கு நிலம் என்பதில் நீர் வளமும் அடங்குகிறது. நிலவளமும் நீர்வளமும் உற்பத்தி முறையைப் பெருமளவு அறுதியிடும் காரணிகளாகச் செயல்படுகின்றன. 'வணிக நோக்கமற்ற உற்பத்தி முறையைக் கொண்ட பழங்குடிகளின் உற்பத்தி முறையில் நான்கு நிலைகள் செயல்படுகின்றன. அவை : 1. தொழில் நுட்பமும் தொழிற்பகுப்பும் (division of labour) 2. உற்பத்தி அலகுகளின் அமைப்பு 3. பொருள் பரிமாற்ற முறைகள் 4. சொத்தையும் மூலதனத்தையும் நிருவகிக்கும் முறை.[(3)] ஆகியனவாகும். சங்க கால மக்களின் வாழ்க்கைப் பொருளாதாரத்திற்கு இம்முறை பொருந்தும். சங்க கால மக்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்தின் தொழிலையும் நிலத்தை ஒட்டிய பிற தொழில்களையும் கற்றுத் தேர்ந்தவர்கள். அத்தொழில்களின் வாயிலாகத் தங்களுடைய வாழ்க்கையினை வளமானதாகவும் செல்வமிக்கதாகவும் மாற்றுவதற்குத் தொழில்களை மேற்கொண்டு சிறப்புற்றிருந்தனர். சங்கத்தமிழர் மேற்கொண்ட தொழில்களை,

1. நிலத்திற்குரிய தொழில்கள்
2. நிலம் சார்ந்த பிறதொழில்கள்

என இரு நிலைகளில் வகுக்க இயலும். இவற்றுள் பெரும்பாலும் நிலத்திற்குரிய தொழில்களில் வேட்டையாடல், ஆநிரை மேய்த்தல், புன்செய் - நன்செய் வேளாண்மை, மீன் பிடித்தல் போன்றவை அடங்கும். நிலம் சார்ந்த பிறதொழில்களாக நெசவுத்தொழில்,சலவைத்தொழில், மட்கலத்தொழில், உலோகத்தொழில், கிணறு வெட்டும் தொழில். சாணைக்கல் தொழில், சங்கு அறுக்கும் தொழில்,வளையல் விற்றல், பூ விற்றல், ஊர்காவல் போன்றவை சிறுபாண்மை மேற்கொள்ளப்பட்டன.

ஒவ்வொரு சமுதாயமும் அது கொண்டுள்ள தொழில்நுட்பத்திற்கு ஏற்பவே அதன் சுற்றுச்சூழலின் வளத்தைப் பயன்படுத்துகிறது. இத்தொழில்நுட்பம் என்பது பெரும்பான்மையாகக் கையாளப்படும் கருவிகள், அணுகுமுறைகள், வேலையைச் செய்யும் முறைகள் போன்றவற்றைச் சேர்ந்தது. இயற்கையைச் சார்ந்தே தொழில் நுட்பங்கள் அமைகின்றன.

புவியியல் சூழ்நிலையின் தாக்கத்தினை எதிர்கொள்ள பல தேவைகள் தோன்றுகின்றன. ‘‘உணவு, உடை, தொழில், அத்தியாவசியப் பொருட்கள், பயணம், தகவல் தொடர்பு, பழக்கவழக்கங்கள், மரபுகள் ஆகியவை எல்லாம் சுற்றுச்சூழலைச் சார்ந்திருக்கின்றன.’’[4] இயற்கைச் சூழ்நிலையும் மனித இயல்பைப் பாதிக்கின்றன. சங்ககாலத் திணை நிலமக்கள் நிலப்பின்புலத்திற்கு ஏற்றவாறு தத்தம் தொழிலை அமைத்துக் கொண்டனர். மானிடவியலார் மனித இனத்தின் தொழில் முறையைப் பின்வரும் நிலைகளாகப் பகுத்துக் காண்கின்றனர். அவை,

- வேட்டையாடி உணவுசேகரித்தல்
- கால்நடைகளை வளர்த்தல்
- வேளாண் முறை

எனவாகும்.[5] இப்பகுப்பு முறையைச் சங்க அகத்திணை இலக்கியங்களில் பொருத்திப் பார்க்க இயலும். அவ்வகையில் சங்ககால மக்களின் உற்பத்திப் பொருளாதார முறையை இனவரைவியல் நோக்கில் ஆராய்ந்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

**உணவு சேகரிப்பு**

வேட்டையாடுவதற்கு முந்தையநிலை, உணவு சேகரிப்பு என்பர். இயற்கையாக விளைந்த காய், கனிகள், கிழங்குகள் முதலியவற்றைச் சேகரிப்பது இவ்வகையில் அடங்கும்.

*“................................................. குன்றத்துப்*
*பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினொடு”– (குறுந்.379:1-2)*

என்ற அடிகளில் கிழங்கு அகழ்ந்த பழைய குழி பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

குறிஞ்சி நில மக்களாகிய கானவர் குழியை அகழ்ந்து கிடைக்கின்ற கிழங்குகளைச் சேகரித்து உண்டு வாழ்ந்தனர். கானவர் கிழங்கிற்காக அகழ்ந்த குழிகள் நிறையுமாறு வேங்கை மரத்தின் பொன்னிறம் மிகுந்த பூக்கள் பரந்து கிடந்ததை,

“அன்னாய் வாழி வேண்டு அன்னை *கானவர்*
*கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கைப்*
*பொன் மலி புதுவீ தாஅம்”– (ஐங்.208:1-3)*

என்ற அடிகள் எடுத்துரைக்கும்.

**தேன் எடுத்தல்**

குறவர் தேன் எடுக்கும் பொருட்டு ஏற முடியாத மலையுச்சியின் கண்ணும் ஏணி வைத்து அதன் வழியே ஏறி, தேனீக்கள் சேர்த்து வைத்த தேனை அழித்துக் கொண்டு வருவர். இதனை,

*“தேனின் இறாலென ஏணி இழைத்திருக்கும்”– (கலித்.39:9)*

என்ற பாடலடி உணர்த்தும். மேற்கண்ட செய்திகளிலிருந்து உணவு சேகரிப்பு வாழ்க்கை முறை குறிஞ்சிநில மலைவாழ் மக்களிடத்தில் காணப்பட்டமை விளங்கும்.

**வேட்டையாடி உணவு சேகரித்தல்**

மர்டாக்கின் இனக்குழுவியல் வரைபடத் தரவுகளின் படி, உலகின் மொத்த நிலப்பரப்பில் 15 விழுக்காடு இன்றும் வேட்டையாடி உணவு சேகரிக்கும் முறை மக்கள் வசம் உள்ளது.(6) அன்றைய காலச்சூழ்நிலையில் தமிழர்களிடம் இப்பழக்கம் பரவலாகக் காணப்பட்டிருக்க வேண்டும். வேட்டையாடி உணவு சேகரித்தல் என்பது நானிலமாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என வரும் அனைத்துத் திணைகளிலும் நடைபெற்றது. சங்கஇலக்கியப்

பாலைத்திணைப்பாடல்களில் குறிஞ்சி, முல்லையின் கருப்பொருட்களே பெரும்பாலும் பயின்று வந்துள்ளன. குறிஞ்சியும் முல்லையும் பருவநிலைக்கால மாற்றத்தாலும் வெயிலின் கொடுமையாலும் வறண்டு காணப்படும் பகுதியே பாலை என எதிரொலிப்பதாய்ப் பாடல்கள் அமைந்துள்ளன. அவ்வெம்மை மிக்க பாலை நிலத்திலும் வேட்டையாடுதல் நடைபெற்றுள்ளது.

வேட்டையாடி உணவு சேகரித்தல் என்பதனை மானிடவியலார்,"காட்டு விலங்குகளை வேட்டையாடுதல், மீன்பிடித்தல், காட்டில் கிடைக்கும் காய், கனிகள், கொட்டை வகைகள், தேன் எடுத்தல் எனப் பிற உண்ணும் பொருள்களைச் சேகரித்தல், மரப்பட்டைகள், நார், மரப்பொருள்கள் போன்றவற்றைச் சேகரித்து மற்ற மக்களுக்குக் கொடுத்து அவர்களிடமிருந்து தேவையான பொருட்களைப் பெறுதல் ஆகியவை மூலம் உணவுத் தேவைகளை ஈட்டும் முறையே வேட்டையாடி உணவு சேகரித்தல் (hunting and food-gathering) முறையாகும்".(7) என வரையறுப்பர். இம்முறை சங்க இலக்கியத்தில் பெரிதும் பதிவாகியுள்ளது.

**காட்டு விலங்குகளை வேட்டையாடுதல்**

காட்டு விலங்குகளை வேட்டையாடுதலை மலைசார்ந்து வாழும் குறிஞ்சிநில இனக்குழு மக்களாகிய குறவர்களில் பெரும்பான்மையோர் மேற்கொண்டனர்.

*"...................................... சாரல்*
*கொடுவிற் கானவன் கோட்டுமா தொலைச்சிப்*
*பச்சூன் பெய்த பகழி போல"– (நற்.75:5-7)*

என்ற பாடலடிகள் மலைச்சாரலிடத்துக் கொடிய வில்லையுடைய வேட்டுவன் கோட்டினையுடைய பன்றியை எய்து கொன்று அதன் பசிய தசையிடத்தே அம்பினைப் பாய்ச்சியதால் அம்பு குருதியில் நனைந்து சிவந்துக் காணப்பட்டது என்பதை உணர்த்தும். முல்லைநில மக்கள் தம் உணவுத் தேவைக்கு வேட்டையாடிதை,

*"உடும்பு கொளீஇ வரி நுணல் அகழ்ந்து*
*நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி*
*எல்லுமுயல் எறிந்த வேட்டுவன் சுவல*
*பல்வேறு பண்டத்தொடை, மறந்து இலவத்து*
*இருமடைக் கள்ளின் இன் களி செருக்கும்*
*வன்புலக் காட்டு நாட்டதுவே..."– (நற்.59:1-6)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் வன்மையான புலத்தையுடைய காட்டுப் பகுதியில் வாழும் முல்லைநில வேட்டுவன் உடும்பு, தவளை,ஈயல், முயல் ஆகியவற்றைப் பற்றி வாழ்வான் என்பதும் அவற்றைப் பிடித்தலால் உண்டான களைப்பைக் கட்குடியால் மறப்பான் என்பதும் புற்றில் வாழும் ஈசலை உணவாகக் கொள்ளும் பொருட்டு வேட்டுவர்கள் புற்றினைத் தோண்டுதல் வழக்கம் என்பதும் சுட்டப்பட்டுள்ளன. நெய்தல் நிலத்தில் வாழும் சிறார்கள் கருமையான சேற்றுக் குழம்பினையுடைய வயலில் அதிகாலையில் வேட்டைக்குச் சென்றனர். அவர்கள் விரித்துள்ள நுண்ணிய கயிற்றினால் ஆகிய அழகிய வலையில் தலையிற் கொண்டையினையுடைய சேவல் கொக்கு அகப்பட்டது. இதனை,

*''குடுமிக் கொக்கின் பைங்காற்பேடை*
*இருஞ்சேற்று அள்ளல் நாட்புலம் போகிய*
*கொழுமீன் வல்சிப் புன்தலை சிறாஅர்*
*நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென*
*அல்குறு பொழுதின் மெல்குஇரை மிசையாது''– (அகநா.290:1-5)*

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். இங்கு நெய்தல் நிலத்தில் வாழும் மக்கள் தம் நிலத்திற்கு அருகில் இருக்கும் மருத நில வயல்களில் வேட்டையாடினர். உதாரணமாக அன்று காவிரிப்பூம்பட்டினம் என்று அழைக்கப்பட்ட பூம்புகாரின் கடற்கரையிலிருந்து மேற்கே 20 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சாய்வனம் என்ற ஊரின் பகுதியிலும் அருகாமையில் உள்ள ஊர்கள் மருத நிலப்பகுதியாக விளங்குவதால் இங்கு வேளாண்மை நடைபெறுகிறது. மதுரை மருதன் இளநாகனார் சாய்வனம் பற்றி,

*''நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து*
*யாணர்த் தண்பணை உறுமென கானல்*
*ஆயம் ஆய்ந்த சாயிறைப் பணைத்தோள்''– (அகநா.220:18-20)*

என்ற பாடலடிகள் மூலம் பதிவுச் செய்துள்ளார். சாய்க்கானம் என்பது தற்காலத்தில் சாயாவனம் என்று அழைக்கப்படுகிறது. 'சாய் இறை பணைத்தோள்' என்ற அடியை நோக்க அங்கு கோயில் கொண்டுள்ள இறைவனின் பெயரினைப் பொருத்திப் பார்த்து விளங்கிக் கொள்ள இயலும். இவ்வாறாக விளங்கும் பகுதிகளில் நெய்தல் நில மக்கள் மருதநில வயல்களில் வேட்டைத்தொழில் மேற்கொள்ள வாய்ப்பிருந்தது என்பதை உணர முடியும்.

**அம்பு கொண்டு வீழ்த்துதல்**

வேட்டையில் ஈடுபடும் கானவர் அதற்குப் பெரும்பாலும் அம்பினைப் பயன்படுத்தினர். இதனை,

*“............................................. கானவன்*
*சிறுபுறம் கடுக்கும் பெருங்கை வேழம்*
*வெறிகொள் சாபத்தெறி கணை வெரீஇ”– (நற்.228:5-7)*

என்ற பாடலடிகள் உணர்த்தும்.இதில் கானவன் அம்புகொண்டு வேழத்தை வீழ்த்தியது குறிப்பிடப்பட்டுள்ளது.

*“அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை*
*வீளை அம்பின் வில்லோர் பெருமகன்” (நற்.265:2-3)*

என்ற பரணரின் பாடலடிகளும் வேட்டைக்கு வில்லோர் அம்பினைப் பயன்படுத்தியதைப் புலப்படுத்தும்.

**வேட்டையில் அறம்**

தமிழர்கள் வேட்டையாடுதலிலும் அறநெறியைப் பின்பற்றினர்.

*“வயவாய் எறிந்து – வன்பறழ் தழீஇ*
*இளையர் எய்துதல் மடக்கி கிளையொடு*
*நால்முலைப் பிணவல் சொலிய, கான் ஒழிந்து*
*அரும்புழை முடுக்கர் ஆள்குறித்து நின்ற*
*தறுகட் பன்றி நோக்கி கானவன்*
*குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி*
*மடைசெலல் முன்பின்தன் படைசெலச் செல்லாது*
*அருவழி விலக்கும் எம் பெருவிறல் போன்ம் என*
*எய்யாது பெயரும் குன்ற நாடன்”– (அகநா.248:2-10)*

என்னும் பாடலடிகள் சான்றாகும். தன் பிணவல் பிள்ளைகளைக் காத்து எதிர்த்து நின்று இருக்கும் பன்றியின் செயலைக் கண்டு வீரம் மிகுந்து தனித்து நின்று போராடும் அப்பன்றியின் வீரம் கண்டு கொல்லாது விடுத்த வேடர்களின் அறம் போற்றத்தக்கதாகும். பன்றி தம் பிணை, பிள்ளைகளைக் காக்கப் போராடும் பண்பினைக் கண்டு மதித்து வேடர்கள் அப்பன்றியைக் கொல்லாது விடுத்த செயல் அறத்தின் பாற்பட்டதாகும்.

**வேட்டைத் தொழில் நுணுக்கம்**

வேட்டையின் போது ஊதுகொம்பினைப் பயன்படுத்தித் தம் கூட்டாளிகளை ஒருங்கிணைக்கும் வழக்கத்தை,

*“ஊதல் வேண்டுமால் சிறிதே – வேட்டொடு*
*வேய்பயில் அழுவத்துப் பிரிந்த நின்*

*நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே''– (அகநா.318:13-15)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதில் மூங்கில் செறிந்த காட்டிடையே வேட்டைக்குச் செல்லுங்கால் பிரிந்து சென்ற வேட்டுவர்களோடு நாய்களை அழைக்கின்ற குறிப்பாக ஊதுக்கொம்பினை ஊதுதல் விளங்குகிறது. இதிலிருந்து அடர்ந்த காட்டுப்பகுதியில் பிரிந்து தொலைந்துவிட நேரிட்டால், ஊதுகொம்பினைக் கொண்டு ஒலி எழுப்பி ஒன்றுகூடிப் பின் வேட்டையில் ஈடுபட்டுள்ளனர் என்பது தெளிவாகும்.

**வேட்டைக்கு நாய்களைப் பயன்படுத்துதல்**

வேட்டைக்குச் செல்லும் போது நாய்களைப் பயன்படுத்தினர். கல்லென்னும் ஓசையையுடைய காட்டின்கண் கடமான் வேட்டையில் அலைந்து பகற்பொழுது கழிந்தது. அதனைத் துரத்திச் சென்ற வேட்டை நாய்களும் இளைத்தன. இதனை,

*''கல்லென் கானத்துக் கடமா லாட்டி*
*எல்லும் எல்லின்று ஞமலியும் இளைத்தன''– (குறுந்.179:1-2)*

என்ற குட்டுவன் கண்ணனாரின் பாடலடிகள் எடுத்துரைக்கும். பன்றி வேட்டையின் பொழுது நாயினைப் பயன்படுத்தியதை,

*''சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்*
*சேறுஆடு இரும்புறம் நீறொடு சிவண*
*வெள்வசிப் படீஇயர், மொய்த்த வள்பு அழீஇ*
*கோள் நாய் கொண்ட கொள்ளைக்*
*கானவர் பெயர்க்கும் சிறுகுடியானே''– (நற்.82:7-11)*

என்ற குறிஞ்சித்திணைப் பாடலடிகள் உணர்த்தும். வேட்டையின் பொழுது நாய்களைப் பயன்படுத்தியதை அகநானூறும் குறிப்பிடும்(அகநா.28:7-8,182:5-6) வேட்டைக்குச் செல்லும்போது நாய்களைக் கூட்டமாகவும் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

*''புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு*
*முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல்*
*எந்தையும் இல்லன் ஆக''– (அகநா.158:15-17)*

என்ற அடிகள் உணர்த்தும். இதில் புலிக்கூட்டத்தைப் போன்ற நாய்கள் தொடர்ந்து வர வேட்டையாடுதல் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

நாய்களுக்கு மோப்பச் சக்தி அதிகம். அதுமட்டுமின்றி மனிதர்களை அண்டி வாழும் இயல்பு கொண்டது. இவ்விரு காரணங்களால் வேட்டைத் தொழிலுக்கு வேட்டுவர்கள் நாய்களை எளிமையாகப் பழக்கிக் கொண்டனர். நாய்

குட்டியாக இருக்கும் போது அதற்கு வேட்டைத் தொழிலுக்குரிய பயிற்சியினைக் கொடுத்துப் பயன்படுத்திக் கொண்டனர் என்பதை ஊதுகொம்பின் ஒலி கொண்டு நாய்களை ஒன்றுகூட்டிய முறையில் அறிய முடிகிறது.

**வேட்டையை ஒழித்து ஓய்வு கொள்ளல்**

பெருமழை பொழிகின்ற காலத்தும் நள்ளிரவுக் காலங்களிலும் மலையில் வாழும் குறவர்கள் வேட்டைக்குச் செல்வதில்லை. அந்நேரங்களில் வீட்டில் ஓய்வு எடுத்துக் கொண்டனர். இந்நிகழ்வை,

*"இன்இசை உருமொடு கணை துளி தலைஇ,*
*முன் உயிர் மடிந்த பானாட் கங்குல்,*
*காடு தேர் வேட்டத்து விளிவு இடம் பெறாஅது*
*வரி அதள் படுத்த சேக்கை"– (அகநா.58:1-4)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும்.இவை குறவர் வேட்டமொழிந்து புலித்தோலில் படுத்துறங்கியதை வெளிக்காட்டுகின்றன.

**முள்ளம் பன்றி வேட்டை**

குறிஞ்சி நிலப்பகுதியில் இயற்கையில் கிடைக்கக் கூடியது பலாப்பழம். அப்பலாப்பழத்தின் சுளைகளால் கள்ளினைத் தயார்செய்துள்ளனர். அக்கள்ளினை விரும்பி உண்ட வேடர்கள் மூங்கிலால் ஆன வில்லைக் கொண்டு வேட்டை நாயுடன் முள்ளம் பன்றியை வேட்டையாடியுள்ளனர். இதனை,

*"வாங்கமை நோன்சிலை எடுத்தத்து இரீஇ*
*தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்*
*வீளை அம்பின் இளையரொடு மாந்தி*
*ஓட்டு இயல் பிழையா வயநாய் பிற்பட*
*வேட்டம் போகிய குறவன் காட்ட*
*குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர*
*முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட"– (அகநா.182:2-8)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் 'முளவுமா' என்பதற்கு முள்ளம்பன்றி என உரையாசிரியர்கள் குறிப்பிடுவர்.இதனால் வேடர்கள் சிறிய விலங்கினமான முள்ளம்பன்றியையும் வேட்டையாடியுள்ளனர் என்பது விளங்கும். முள்ளம்பன்றி விரைந்து செல்லும் இயல்புடையது. ஆகையால் நாயினைக் கொண்டு விரட்டி மடக்கிப் பின் தங்களுடைய அம்பு கொண்டு அம்முள்ளம்பன்றியை வீழ்த்தியுள்ளனர்.

**யானை வேட்டை**

நிலத்தில் வாழும் விலங்கினங்களில் மிகப் பெரிய உயிரினமாகக் கருதப்படுவது யானை. யானையை வேட்டையாடுதல் பெருமைக்குரியதாகக் கருதப்பட்டுள்ளது.கானவர் யானையின் தந்தத்ததை எடுத்து வந்து தம் வீரத்திற்கு அடையாளமாகத் தம் குடிசையில் ஊன்றி வைத்துள்ளனர். இச்செயல் அவர்களுக்குத் தனித்துவம் மிக்க புகழைத் தருவதாகக் கருதியுள்ளனர். இதனை,

*“களிற்றுமுகம் திறந்த கவுளுடைப் பகழி*
*வால்நிணப் புகவின் கானவர் தங்கை”– (அகநா.132:4-5)*

*“ .................................. கருங்கைக் கானவன்*
*விரிமலர் மராஅம் பொருந்தி கோல் தெரிந்து*
*வரிநுதல் யானை அருநிறத்து அழுத்தி*
*இகல்அடு முன்பின் வெண்கோடு கொண்டு, தன்*
*புல்வேய் குரம்பை புலர ஊன்றி”– (நற்.172:6-10)*

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**வேட்டையாடிப் பகுத்துண்ணல்**

காட்டில் குறிஞ்சிநிலக் கானவன் அம்பெய்திக் கொணர்ந்த முள்ளம் பன்றியின் கொழுத்த தசைப்பகுதியைக் கிழங்கோடு தேன்மணம் கமழும் கூந்தலையுடைய கொடிச்சி சிறுகுடியினர் பலர்க்கும் பகுத்துத்தரும் செய்தியை,

*“ ............................. சாரல்*
*கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை*
*தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி, கிழங்கொடு*
*காந்தள் அம் சிறுகுடிப் பகுக்கும்*
*ஓங்கு மலைநாடன் நின் நசையினானே”– (நற்.85:7-11)*

என்பர் நல்விளக்கனார். ஒருவர் வேட்டையாடிப் பெற்ற இறைச்சி முழுவதையும் தாமே உண்டுவிட முடியாது. அதனைப் பதப்படுத்தி வைத்தாலும் சுவை மிகுந்ததாக இருக்காது. ஆகையால் வேட்டையாடிப் பெற்ற இறைச்சியைத் தம் இனக்குழுவினரோடு பகிர்ந்து கொண்டனர். வேட்டைக்குச் செல்ல முடியாதவர்களுக்கும் இவ்வுணவு பகிர்ந்து கொடுக்கப்பட்டது. இம்முறையில் வன விலங்குகளை வேட்டையாடும் சமூகத்தினர் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். சவரா, கோண்டு போன்ற பழங்குடிகள் இன்றும் பழமை மாறாமல் வாழ்கின்றனர்.

**மீன்பிடித்தொழில்**

மானிடவியலாளா் மீன்பிடித்தலையும் வேட்டையாடுதலில் வகைப்படுத்துவர். காடுமேடுகளில் உயிரினைத் துச்சம் என எண்ணி வேட்டையாடுதலும் கடற்பரப்பில் சுறா போன்ற மீன்களை வேட்டையாடுதலும் ஒப்பு நோக்கத் தகும். நெய்தல் நிலத்தில் வாழும் மக்கள் பரந்த கடற்கரைப்பரப்பினைத் தம் தொழிலின் ஆதாரமாகக் கொண்டு உழைத்தனா். ஆகையால் பரதவா் என்றும் அழைக்கப்பட்டனர். இப்பரதவா்கள் மீன்பிடித்தொழிலுக்கு ‘திமில்’ என்னும் மரக்கலனையும் வலையையும் பயன்படுத்தினா்.

*“................... கானல் நண்ணிய காமர் சிறுகுடி*
*நீனிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு*
*மீன்எறி பரதவர் மகளே....”– (நற்.45:1-3)*

என்ற பாடலடிகள் கடலில் மீன்பிடிக்கும் பரதவா் தொழிலை எடுத்துரைக்கிறது. நன்கு செம்மையாகச் செய்யப்பட்ட கதிரிட்டு முறுக்கிய வலிய கயிற்றாற் பின்னிய பெரிய வலையை இடிபோல முழங்குகின்ற அலைகள் வீசும் கடலில் இடும்பொருட்டாக நிறைய வலைகள் ஏற்றப்பட்ட தோணியைப் பரதவா் கடலில் செலுத்துதலை,

*“வடிக்கதிர் திரித்த வல்ஞாண் பெருவலை*
*இடிக்குரற் புணரிப் பௌவத்து இடுமார்*
*நிறையப் பெய்த அம்பி காழோர்*
*சிறைஅருங் களிற்றின் பரதவர் ஒய்யும்*
*சிறுவீ ஞாழற் பெருங்கடற் சேர்ப்பனை”– (நற்.74:1-5)*

என்ற உலோச்சனாரின் நெய்தல்திணைப் பாலடிகள் உணா்த்தும். மெல்லிய தலையையுடைய இறால்மீன்களுடன் பிற மீன்களையும் பெறுமாறு பின்னி வரிந்த வலையுடைய பரதவா் சுறாமீனையும் பிடித்து, தம் தோணியில் கொண்டு வந்து கரையில் உள்ள மணற்பரப்பில் இறக்குவதை,

*“துய்த்தலை இறவொடு தொகைமீன் பெறீஇயர்*
*வரிவலைப் பரதவர் கருவினைச் சிறாஅர்*
*மரல் மேற்கொண்டு மான் கணம் தகைமார்*
*வெந்திறல் இளையவர் வேட்டு எழுந்தாங்கு*
*திமில் மேற்கொண்டு திரைச் சுரம் நீந்தி,*
*வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி*
*நிணம் பெய் தோணியர் இருமணல் இழிதரும்*
*பெருங்கழிப் பாக்கம் ........................”–(நற்.111:2-9)*

என்ற பாடலடிகள் உணா்த்தும்.

**மீன் வேட்டையின் வகை**

சங்கப் பனுவல்கள் கூறும் மீன்பிடி முறைகள் கரையோர மீன்பிடிப்பு, ஆழ்கடல் மீன்பிடிப்பு என இருவகையில் அடங்கும். இவ்வகையான மீன்பிடிப்பு பகற்பொழுதிலும், இரவுப் பொழுதிலும் நடைபெற்றுள்ளது.

**பகற்பொழுது மீன்வேட்டை**

பகலில் கடலுக்குள் சென்று மீன்பிடித்து மாலைப் பொழுதில் கரைக்குத் திரும்புவதைப் பகற்பொழுது மீன்வேட்டை என்பர். இதனை,

> *“திரை உழந்து அசைஇய நிரைவளை ஆயமொடு*
> *உப்பின் குப்பை ஏறி, எல்பட*
> *வருதிமில் எண்ணும் துறைவனொடு’– (அகநா.190:1-3)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். கடல் அலையில் விளையாடிக் களிப்புற்றுத் தளர்ச்சியடைந்து நிரல்பட வளையணிந்த மகளிர் கூட்டத்துடன் உப்பு மேட்டில் ஏறிநின்று இருண்ட மாலைப்பொழுதில் கரைக்குத் திரும்பி வரும் படகுகளை எண்ணுதற்கு இடனான துறை என்பதால் பகற்பொழுதில் சென்ற படகுகள் மாலைப் பொழுதில் திரும்பி வந்தன என்பது புலனாகும்.

> *“மண்டிலம் மழுக மலைநிறம் கிளர*
> *வண்டினம் மலர்பாய்ந்து ஊத, மீமிசைக்*
> *கண்டற் கானல் குருகினம் ஒலிப்ப*
> *திரைபாடு அவிய திமில் தொழில் மறுப்ப*
> *கரைஆடு அலவன் அளைவயின் செறிய”– (அகநா.260:1-5)*

என்ற பாடலடிகளில் மண்டிலம் மறையும் மாலைநேரம் என்பது பதிவாகியுள்ளது. செவ்வானம் தோன்றிய மாலைப்பொழுதில் மீன்பிடிக்கக் கடலுக்குள் செல்லவில்லை என்பது குறிப்பு. மழை மேகம் படைதிரண்டு வந்து மழைபொழியும் காலத்துச் செவ்வானம் தோன்றும். இதனை இன்று வானிலை அறிக்கையில் வெப்பச் சலன மழை என்பர். இது படைத்திரள் மேகம் சூழ சிறிது நேரம் மாலை நேரங்களில் பொழியும் மழையாகும். செவ்வானம் என்னும் குறிப்பால் மழைப்பொழிவின் போது கடலின் காலநிலை கருதி மீன்பிடிக்கச் செல்லவில்லை என்பது புலனாகும்.

**இரவுப்பொழுது மீன் வேட்டை**

இரவுப்பொழுதில் அலைகளின் ஆரவாரம் இல்லாத கரிய கடலில் மீன்பிடிக்கப் பரதவர்கள் சென்றனர். அவ்வாறு சென்றபோது தம் தோணியில் விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு சென்றதை,

*“................................. சிறுகால்*
*அலவனொடு பெயரும் புலவுத் திரை நளிகடல்*
*பெருமீன் கொள்ளும் சிறுகுடிப் பரதவர்*
*கங்குல் மாட்டிய கனை கதிர் ஒண்சுடர்*
*முதிரா ஞாயிற்று எதிர் ஒளி கடுக்கும்*
*கானல் அம் பெருந்துறைச் சேர்ப்பன்”– (நற்.219:4-9)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் இரவுப்பொழுது மீன்வேட்டை இடம் பெற்றுள்ளது. திக்குத்திசை அறிய முடியாத இருள் சூழ்ந்த நேரம் இரவுப் பொழுதாகும். ஆகையால் கடலில் செல்லும் திமிலில் விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன. கடற்கரைக்குப் பரதவனை வழி அனுப்பும் பரதவர் பெண்டிர் வீட்டில் சின்னஞ்சிறிய விளக்குகளை ஏற்றி வைத்திருந்துள்ளனர். இவ்விளக்கொளிகள் கடலில் இருந்து கரையைப் பார்ப்பவர்களுக்கும் கரையிலிருந்து நடுக்கடலினைப் பார்ப்பவர்களுக்கும் பல்மீன் கூட்டம் போன்று தோன்றின. விளக்கின் வெளிச்சம் இரவுப் பொழுது தங்கள் வாழிடத்தை அடையாளம் காட்டும் ஒரு குறிப்பாகும்.

*“.......................... நளிகடல்*
*திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்*
*பல்மீன்கூட்டம் என்னையர்க் காட்டிய*
*எந்தையும் செல்லுமார் இரவே”– (அகநா.240:4-7)*

என்ற பாடலடிகள் நன்குணர்த்தும். முழுநிலவு கழித்து நான்கு நாட்களுக்குப் பிறகு தொடங்கி மறைநிலவு முடித்து ஆறுநாட்கள் வரையில் உள்ள மொத்தம் 16 நாட்களைக் கடல் பகுதியில் ‘இருள்’ என்றே மீனவர்கள் கூறுகின்றனர். இந்த நாட்களில் ‘கவுள்’ எனப்படுகின்ற தண்ணீரில் மின்னல் ஒளி போன்று தோன்றுவதால் வலை இருப்பது மீன்களுக்குத் தெரிவதில்லை. அதனால் இந்த நாட்களில் மீன்கள் அதிகம் கிடைக்கும். இக்காரணம் கருதியும் சங்ககால மீனவர்கள் இரவுப்பொழுதில் மீன் வேட்டையில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

**சுறா மீன்வேட்டை**

கடலில் வாழும் மீன்களிலேயே பெரிய மீன் சுறாமீன். அம்மீனை வேட்டையாடிப் பிடித்தலில் சங்ககாலப் பரதவர் கைதேர்ந்தவர்கள். மீன்பிடிக்கச் செல்லும் பரதவர், சுறாமீன்களைப் பிடிப்பதற்குக் கூரிய உளியைச் செருகிய மூங்கிலைக் கயிற்றில் கட்டிப் பயன்படுத்தியுள்ளனர். இது படகிலிருந்தபடியே,எறிந்து மீன்களைக் கொல்லும் கருவியாகும். இதன் ஒரு

பகுதியில் கயிறு கட்டப்பட்டிருக்கும். எறிஉளிக் கொண்டு சுறாமீனை வேட்டையாடியதை,

*"கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி*
*முகம்பட மடுத்த முனிவெதிர் நோன்காழ்*
*தாங்கருவாய் நீர்ச்சுரத்து எறிந்து, வாங்குவிசைக்*
*கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய"– (குறுந்.304:1-4)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இரவு நேரத்தில் சுறாமீன் வேட்டையில் பரதவர் ஈடுபட்டதை,

*"குணகடல் இவர்ந்து குரூஉக் கதிர் பரப்பி*
*பகல் கெழு செல்வன் குடமலை மறைய*
*புலம்பு வந்து இறுத்த புன்கண் மாலை*
*இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர*
*மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண்சுடர்*
*நீனி றப் பரப்பில் தயங்கு திரை உதைப்ப*
*.............................................................*
*..................................................................*
*............... செங்கோல்*
*கொடுமுடி அவ்வலை பரியப் போகிய*
*கோட் சுறாக் குறித்த முன்பொடு*
*வேட்டம் வாயாது எமர் வாரலரே"– (நற்.215:1-12)*

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கும். சுறா மீன் வேட்டையின் போது மீனவர்களுக்கு அடிபடவும் வாய்ப்புண்டு. அவ்வாறு அடிபட்டுப் புண் ஏற்பட்டதை,

*"வயச்சுறா எறிந்த புண்தணிந்து, தெந்தையும்*
*நீனிறப் பெருங்கடல் புக்கனன்………"– (குறுந்269:3-4)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதிலிருந்து சுறாமீன் வேட்டை என்பது பேராபத்து நிறைந்த கடுமையான வேட்டைத் தொழில் என்பது புலனாகிறது.

**நள்ளென் யாமத்தில் மீன்பிடித்தலைத் தவிர்த்தல்**

பரதவர் பகற்பொழுது இரவுப்பொழுது என இருபொழுதுகளில் மட்டுமே மீன்பிடிக்கச் சென்றனர். இருள் செறிந்த நடுயாமத்தில் மீன்பிடிக்கச் செல்லும் வழக்கம் இல்லை. இதனை,

*"கடற்சிறுகாக்கை காமர் பெடையொடு*
*கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்*
*வெள்இறாக் கனவும் நள்ளென் யாமத்து"– (அகநா.170:10-12)*

என்ற பாடலடிகள் சுட்டும். இருள் செறிந்த நள்யாமம் என்பது மறைநிலவு நாளைக் குறிக்கும். அப்பொழுது மீனவர்கள் மீன்பிடிக்கச் செல்வதில்லை. ஏனெனில் அன்று கடலில் அலைகளின் வேகம் மிகுதியாக இருக்கும்.

‘இரட்டைமடிப்பு’ அலைகள் அதிகமாக இருக்கும். படகு கவிழ்ந்துவிடும் அபாயமும் உண்டு. இக்காரணம் கருதி மீனவர்கள் மீன்பிடிக்கச் செல்வதில்லை.

**ஈட்டிய மீனைப் பகுத்துக் கொடுத்தல்**

மீன்பிடிக்கும் தொழில் தனி ஒரு நபரால் நிகழ்த்தப்படுவது அன்று. ஒரு குழுவாக இணைந்து செயல்படுவது. இளையவரும் முதியவரும் ஆகிய ஆண்கள் ஒன்றுகூடி இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இனக்குழு வாழ்வியல் முறையில் இத்தகு தொழில்கள் நடைபெறுவது இயல்பாகும்.

*“................................... பரத மாக்கள்*
*இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி*
*உப்பு ஓய் உமணர் அருந்துறை போக்கும்*
*ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழீஇ*
*அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கி”– (அகநா.30:3-7)*

என்ற பாடலடிகள் பரதவர்கள் குழுவாக இணைந்து செயல்பட்டதை விளக்கும்.

*“நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை*
*கடல்பாடு அழிய இனமீன் முகந்து*
*துணை புணர் உவகையர் பரதமாக்கள்”– (அகநா.30:1-3)*

என்ற பாடலடிகளில் ‘நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை’ என்ற அடி கவனிக்கத்தக்கது. இதிலிருந்து பெருங்கயிற்றால் ஆன குறுகிய கண்களையுடைய குறுங்கண் வலையை மீன்பிடித்தல் தொழிலுக்குப் பயன்படுத்தியது புலனாகும். மிகவும் சிறிய கண்களையுடைய இவ்வலையை,‘கரைவலை’, ‘மடிவலை’ என்பர். “கரைவலை மடி மீனவர்கள் இவ்வலையைப் பயன்படுத்தி கடற்கரையிலிருந்து 2 கி.மீ- க்குள் மீன்பிடிக்கின்றனர். கடலில் வீசிய வலையைப் பல மணி நேரம் கழித்து 60 க்கும் மேற்பட்டோர் ஒன்றாக சேர்ந்து இழுப்பர். இந்த முறையில் மீன்பிடிப்பதால் கடல் வளம் பாதிப்பதில்லை. கடலில் அலைகளின் சீற்றம் அதிகமாக இருந்தால் மீன்பிடிக்கச் செல்வதில்லை. ஏனெனில் ராட்சத அலைகளின் சீற்றத்தின் போது கரைவலையில் மீன்பிடிப்பது கடினம். மேலும் உயிருக்கும் ஆபத்து.

சங்க காலத்தின் பாரம்பரிய முறைப்படி கரைவலை மூலம் மீன்பிடிக்கும் மீனவர்கள் ராமநாதபுரத்தில் வாழ்கின்றனர். கீழக்கரை, ஏர்வாடி, வாலிநோக்கம், மாரியூர், மூக்கையூர் உள்ளிட்ட பகுதிகளில் வாழும் மீனவர்கள் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.”(8) (தினமலர் 10.2.2016 ப.11). பெருவலையைத் திமில் மூலம் எடுத்துச் சென்று ஓரிரு நாட்டிக்கல் மைல் (Nautical mile) தொலைவிற்கு

எடுத்துச் சென்று மீன்கிடைக்கும் கடற்பகுதியில் விரித்துவிட்டு, மீனவர்கள் கரைக்குத் திரும்பி வலையின் இரண்டு முனைகளிலும் கட்டப்பட்ட கயிறுகளைப் பிடித்துக் கூட்டமாகக் கரையிலிருந்தவாறே இழுப்பார்கள். சிறிய கண்களையுடைய இவ்வலையில் சிறிய மீன்களும் பெரிய மீன்களும் எனப் பலவகை மீன்கள் அகப்படும். ஆகையால் இனமீன் முகந்து என்றனர். இவ்வாறு பிடித்து எடுத்த மீன்களைப் பகுத்துக் கொடுத்ததை,

*''பெருங்களம் தொகுத்த உழவர்போல*
*இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி*
*பாடுபல அமைத்து கொள்ளை சாற்றி''– (அகநா.30:9-11)*

என்ற பாடலடிகள் விளக்கும். பரதவர்கள் அயிலை மீன்களைக் கடலிலிருந்து பிடித்து வந்து பகுத்துக் கொடுத்த செய்தியை மதுரைத் தமிழக்கூத்தனார் கடுவன் மள்ளனார்,

*''கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென*
*இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்*
*குறுங் கண் அவ்வலைப் பயம் பாராட்டி*
*கொழுங் கண் அயிலை பகுக்கும் துறைவன்''– (அகநா.70:1-4)*

எனப் பாடுவர்.

**பாரம்பரிய ஓலை வலை மீன்பிடி முறை**

இன்றைய தமிழக மீனவர்கள் பாரம்பரிய மீன்பிடி முறையில் இருந்து விடுபட்டு, செயற்கையான முறையில் கோல் இழுவலை, அடிமட்டப் பலகை இழுவலை, மிதவை இழுவலை, சூழ்வலை, சுருக்கு வலைகளைப் பயன்படுத்தி டன் கணக்கில் மீன்பிடிப்பதால் கடல் வளமும் அழிந்து வருகிறது.

இந்நிலையில் கடல்வளம் பாதிக்காமல் ஓலை வலைமூலம் மீன் பிடிக்கும் முறையை இராமேஸ்வரம் பாரம்பரிய மீனவர்கள் உயிர்ப்புடன் பின்பற்றி வருகின்றனர். தமிழர்களின் பாரம்பரிய மீன்பிடி முறைகளில் ஓலை வலை மீன்பிடி முறை முதன்மையானது. ஓலை வலை மூலம் மீன் பிடி முறையை இலங்கையிலும் தமிழகத்தின் சில பகுதிகளிலும் இன்றும் பின்பற்றுகின்றனர். முதலில் கடற்கரையில் இருந்து கடலில் குறிப்பிட்ட தொலைவுக்கு ஆங்கில 'யு' வடிவில் கரை வலையை அமைப்பர். பின்னர் வலையின் இருபுறமும் கயிற்றில் பனை ஓலைகளைக் கட்டி இரண்டு குழுக்களாகக் கரையில் நின்று மீனவர்கள் இழுப்பார்கள். கடலில் வலையின் மையப்பகுதியில் இயந்திரம் பொறுத்தப்படாத படகில் ஒருவர் வழிகாட்டியாகச் செயல்படுவார். கயிற்றின் நீளம் குறைந்தபட்சம்

100 மீட்டர் வரை இருக்கும். ஆட்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு கயிற்றின் நீளம் அதிகரித்துக்கொண்டே செல்லும். இந்தப் பனை ஓலை மீன்பிடி முறைக்கு அதிக முதலீடு கிடையாது. இந்த ஓலை வலையில் மீன்பிடிப்போரைப் பொறுத்தவரை அவர்களுக்குக் கூலி என்று தனியாக எதுவும் கொடுக்கமாட்டார்கள். பங்கு என்றுதான் கொடுப்பார்கள். பிடிக்கின்ற மீன்களை மூன்றாகப் பங்கு வைத்துக் கொள்வர் வலைக்கும், படகுக்கும் ஒரு பங்கு மற்ற இரண்டு பங்குகளை எத்தனை பேர் ஓலை வலையை இழுக்கிறார்களோ, அத்தனை பேருக்கும் சம பங்குகளாகப் பிரித்துக் கொள்வர். இதனால், ஆண், பெண் பாகுபாடோ, முதலாளி தொழிலாளி என்ற பிரிவுகளோ கிடையாது.[9] (தின இந்து 25.03.2016, ப.5) இது மிகவும் பழமையான பாரம்பரியமான மீன்பிடி முறையாகும். சங்ககாலப் பகுத்துண்ணும் முறையை இன்றைய இராமேஸ்வர மீனவர்கள் ஓலை வலை மீன்பிடிமுறை எடுத்துரைக்கிறது.

**மீனை உலர்த்துதல்**

திரைகடலில் முகந்து எடுத்த மீன்களையும் கடற்கரைப் பகுதியையும்

*''பெருநீர் அழுவத்து எந்தை தந்த*
*கொழுமீன் உணங்கற் படுபுள் ஓப்பி*
*எக்கர்ப் புன்னை இன்நிழல் அசைஇ'' - (அகநா.20:1-3)*
*''............................................ எந்தை*
*புணர் திரைப் பரப்பகம் துழைஇத் தந்த*
*பல்மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்''– (அகநா.80:4-6)*
*''நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்*
*நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்*
*பறிகொள் கொள்ளையர், மறுக உக்க*
*மீன்ஆர் குருகின் கானலம் பொருந்துறை''– (அகநா.300:1-4)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும். பெண்கள் மீன்களைக் கவரவரும் குருகினத்தை ஓட்டிய செய்தியால் மீன் உலரவைத்தல் தொழிலில் பெண்கள் ஈடுபட்டது புலனாகும். புலவர் வெள்ளியந்தின்னார்,

*''முற்றா மஞ்சட் பசும் புறம் கடுப்பச்*
*சுற்றிய பிணர சூழ் கழி இறவின்*
*கணம் கொள் குப்பை உணங்கு திறன் நோக்கி*
*புன்னை அம் கொழு நிழல் முன் உய்த்துப் பரப்பும்*
*துறை நனி இருந்த பாக்கமும் உறை நனி*
*..................................................*
*மீன் எறி பரதவர் மட மகள்''– (நற்.101:1-8)*

என்ற பாடலிலும் மீனும் இறாலும் உலர்த்திய செய்தியைப் பதிவு செய்துள்ளார். வேட்டையாடிய சுறாமீனை அறுத்தெடுத்து சிறுசிறு துண்டுகளாக்கி உலரவிட்டதை,

*“நிணச் சுறா அறுத்த உணங்கல் வேண்டி*
*இனப் புள் ஒப்பும்................”– (நற்.45:6-7)*

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

மீன்களை உலர்த்தியும் பச்சைத்தன்மையுடன் பதப்படுத்தியும் வைத்தலை உணங்கல் என்பர். மிதமான பதத்தில் காயவைத்தற்பொருட்டு மீன்களை மரத்தின் நிழலில் உலர்த்துவர் (குறுந்.320:1-4). இராமநாதபுரத்திலுள்ள இராமேஸ்வரம், கன்னியாகுமரியின் கடற்கரை சார்ந்த பகுதிகளில் வாழ்ந்து கொண்டிருக்கிற வயதான பெரியவர்களிடம் ‘உணங்கல்’ என்னும் சொல்லாட்சி இன்றளவும் புழக்கத்தில் வழங்கப்பட்டு வருகிறது.

இவற்றால் மானிடவியலாளர் குறிப்பிடும் தொழிற் பகுப்பு முறையில் நெய்தல் நிலமக்கள் மீன் உலர்த்துதல் தொழிலில் ஈடுபட்டுள்ளமை தெளிவாகும்.

**உப்பு விளைவித்தல்**

சங்க காலப் பரதவர் உப்பு விளைவித்தல் தொழிலிலும்ஈடுபட்டுள்ளனர். உப்பு விளையும் நிலம் பற்றிச் சங்க இலக்கியம் எடுத்துரைத்துள்ளது. மழை பெய்யாமல் வறண்டு போன கழிநீரிடத்து முள்ளிச்செடியின் மலர்கள் உதிரப்பெற்று, பரந்து கிடந்த சேறெல்லாம் ஒரு சேரக் காய்ந்து கருமையான அந்த சேற்றிடமெங்கும் வெண்மையான உப்பு விளையும் என்பதை,

*“................... மாநீர் முண்டகம் தாஅய்ச் சேறு புலர்ந்து*
*இருங் கழிச் செறுவின் வெள் உப்பு விளையும்*
*அழியா மரபின் நம் மூதூர் நன்றே”– (நற்.311:4)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். பாத்தி அமைத்து உப்பு விளைவித்ததை,

*“.............................................. அறை உற்ற*
*உப்பு இயல் பாவை உறை உற்றது போல”– (கலித்.138:15-16)*

என்ற அடிகள் புலப்படுத்தும். கடுமையான வெயிலில் கொதிக்கின்ற கல்லாக உப்பு விளைந்ததை,

*“கடுவெயில் கொதித்த கல்விளை உப்பு”– (நற்.354:8)*

என்ற அடி உணர்த்தும். இதனால், கார் மேகமில்லாத நல்ல தெளிவான வானம் கொடுக்கும் கடுமையான வெயிலில், பாத்தியிலுள்ள கடல்நீர் சூடாகி உப்புப் படிமமாய்ப் படியும் என்பது புலனாகும்.

உப்பானது சேறு நிறைந்த உப்பங்கழியில் விளைவிக்கப்படும். விளைந்த அவ்வுப்பினைப் பரதவர் குவித்து வைத்துக் காவல் புரிவர். இதனை,

*"உவர் விளை உப்பின் உழாஅ உழவர்*
*ஒழுகை உமணர் வருபதம் நோக்கி*
*கானல் இட்ட காவற் குப்பை"– (நற்.331:1-3)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் உழாது விளைவிக்கும் நெய்தல் நில மக்களாகிய பரதவர் உவர் நிலத்து விளைந்த உப்பினை மேன்மையுடைய உப்பு வணிகர் வருகின்ற காலம் நோக்கிக் கடற்கரைச் சோலையில் காவலையுடையதாய்க் குவிப்பர் என்னும் செய்தி இடம்பெற்றுள்ளது.

உப்பிற்குக் காவல் புரிதல் ஆண்களுக்குரிய தொழிற் பகுப்பு. ஏனெனில் உப்பு வயலில் நன்கு விளைந்த உப்புகள் பாறைகளாகக் காணப்படும். அவைகளை உடைத்த பிறகும் கத்தி போன்று கூர்மையான உப்புக்கற்களாக இருக்கும். இவ்வுப்புக்கல் கால்களின் பாதங்களைக் கிழிக்கும் தன்மை பெற்றவை. உப்பு விளையும் நிலம், பருவச்சூழல் உதடுகளில் வெடிப்பை ஏற்படுத்தும். ஆகையால் இயற்கையிலேயே மென்மையான உடல்வாகு கொண்ட பெண்கள் உப்புவிளைவித்தல், பாதுகாத்தல் தொழிலில் ஈடுபடுவது இல்லை. கடினமான உடல்தன்மையைக் கொண்ட ஆண்கள் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

பெரிய உப்பங்கழியாகிய வயலிலே வெண்ணிறக்கல் உப்பினை உழாமலேயே விளைவித்தனர். கடாவினை விரையச் செலுத்தும் தாற்றுக் கோலினையுடைய உப்பு வணிகர்கள் அவ்வுப்பினைப் பெற்று, அதன் விலையைக் கூறிக் கொண்டு ஞாயிற்றின் வெம்மையைப் பொறுக்காது வெடிப்புடை பிளப்புகளையுடைய குன்றங்களைக் கடந்து போவர் என்பதை,

*"இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த*
*வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி*
*என்றூழ் விடர குன்றம் போகும்*
*கதழ்கோல் உமணர்...................."– (அகநா.140:4-5)*

என்ற பாடலடிகள் நன்குணர்த்தும்.

*" நெடு நெறி ஒழுகை நிரை செலப் பார்ப்போர்*

*அளம் போகு ஆகுலம் கடுப்ப''– (நற்.354:8-10)*

*''உப்பொய் உமணர் ஒழுகையொடு வந்த*
*இளைப்படு பேடை இரிய குரைத்தெழுந்து*
*உரும் இசைப் புணரி உடைதரும்*
*பெருநீர்வேலிஎம் சிறுநல் ஊரே''– (அகநா.310:14-17)*

என்ற பாடலடிகளும் உப்புவணிகர் உப்பினைப் பெற்றுக் கொண்டு வேற்றிடங்களுக்கு விற்கச் சென்ற செய்தியைத் தருகின்றன. பெண்கள் சிறுதொழிலாக உப்பைத் தம் கூடைகளில் எடுத்துச் சென்று விற்று அதற்கு ஈடாக வெண்ணெல்லை வாங்கி வந்துள்ளனர். இதனை,

*''..................................... யாயும்*
*உப்பை மாறி வெண்ணெல் தரீஇய*
*உப்புவிளை கழனிச் சென்றனள்……''– (குறுந்.269:4-6)*

என்ற பாடலடிகள் எடுத்து இயம்பும். இதனால் பண்டமாற்று வணிகமுறை இனக்குழுப் பண்பாகத் திகழ்வது விளங்கும்.

**முத்துக்குளித்தல்**

கடற்கரையோரத்தில் வாழும் பரதவர் மீன்கள் மட்டுமல்லாமல் கடலில் கிடைக்கும் சங்கு, முத்து ஆகியவற்றைச் சேகரிக்கும் தொழிலிலும் ஈடுபட்டுள்ளனர். பரதவர்கள் பரந்துபட்ட கடலில் உலாவும் சுறாமீனை வேட்டையாடாமல் ஆழ்கடல் நீருள் மூழ்கி வலம்புரிச் சங்கினை எடுத்துள்ளனர். அச்சங்குகள் கொண்டு கல்லென ஒலி எழுப்பி ஆரவாரமிக்க கொற்கையோர் எதிர்கொண்டு அழைக்குமாறு படகினின்றும் இறங்கி வருதலை,

*''இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி*
*வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்*
*ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்*
*கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்*
*குவவுமணல் நெடுங்கோட்டு ஆங்கண்''– (அகநா.350:10-14)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். சங்கு எடுத்தல் மட்டுமின்றி முத்துக் குளித்தலையும்,

*''அலங்கிதழ் நெய்தற் கொற்கை முன்றுறை*
*இலங்கு முத்துறைக்கு மெயிறுகெழு துவர்வாய்*
*அரம்போ ழவ்வளைக் குறுமகள்''– (ஐங்.185:1-3)*

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவ்விரு பாடல்களும் 'கொற்கை' என்னும் துறைமுகத்தைச் சுட்டுகின்றன. இது பாண்டியருக்கு உரியது. பரந்தகன்ற

திரைகடலில் திரண்ட வடிவினையுடைய முத்துக்களை வாரிக் கொண்டு வந்து தம் கரையிடத்து உள்ள ஊர்ப்பாக்கத்தில் பலருக்கும் பகுத்துக் கொடுத்துள்ளனர். அவ்வாறு பகுத்துக் கொடுத்ததை,

*“............................................ விரிதிரைக்*
*கண்திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்*
*தேன்இமிர் அகன்கரைப் பகுக்கும்*
*கானல்அம் பெருந்துறைப் பரதவன்”– (அகநா.280:11-14)*

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். இன்றைய காலக்கட்டங்களில் ‘இராமநாதபுர மாவட்ட மீனவர்கள் சனவரி, பிப்ரவரி, மார்ச் ஆகிய மூன்று மாதங்களில் முத்துக்குளித்தல் தொழிலில் ஈடுபடுகின்றனர். இக்காலக்கட்டங்களில் சங்கின் முத்து மிகுதியாகக் கிடைக்கும் என்கின்றனர்.[10] (தின மலர் நாளிதழ் 07.02.2015 ப.8) சங்க காலம் தொடங்கி இன்று வரை முத்து எடுத்தல் தொழிலில் தமிழர் தொடர்ந்து தலைமுறை தலைமுறையாக ஈடுபட்டு வருவது சிறப்புக்குரியதாகும்.

**நிலம் சார்ந்த பரதவர் தொழில்**

சங்க காலத்தில் வாழ்ந்த பரதவர்கள் தம் சுயதேவைக்காகச் சூழ்நிலை சார்ந்த தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இங்கு சூழ்நிலை என்பது புவிச்சூழலைக் குறிக்கும். புவியியல் அமைப்பில் கடற்கரையோரத்தில் வாழ்பவர்கள் பரதவர்கள். ஆகையால் கடலை மையமாகக் கொண்டு தொழில்கள் நடைபெற்றன. கடல் வாழ் உயிரினமான மீன்கள், இறால்கள், சுறாக்கள் ஆகியவற்றை உணவுச் சேகரிப்பு முறையில் கடல் வேட்டையில் ஈடுபட்டனர். அணிகலன் தயாரிப்பிற்குத் தேவைப்படும் சங்குகள், முத்துக்கள் போன்றவைகளை கடலில் இருந்து எடுத்து சேகரித்து விற்பனை செய்துள்ளனர். கடல்நீரைக் கொண்டு உப்பு விளைவித்தல் என்னும் விளைச்சல் தொழிலையும் மேற்கொண்டுள்ளனர். உப்பு விளைவித்தல் பற்றிய நுணுக்கத்தைச் சங்ககாலத் தமிழர் அறிந்திருந்தனர். அதனைப் பண்டமாற்று செய்யும் பக்குவத்தையும் முறையாகக் கற்றிருந்தனர். அவர்கள் கடல்சார்ந்த தொழிலில் தனியாகவும் இணைந்து குழுவாகவும் செயல்பட்டுள்ளனர். பரதவர் தம் வாழ்வியல் தொழில் நுட்பங்களைப் பிற்காலத் தலைமுறையினருக்குக் கொடுத்திருக்கின்றனர். அதன் பதிவுகளைச் சங்ககால இலக்கியங்கள் இன்றும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

**கால் நடை வளர்த்தல்**

கானகத்தில் வேட்டையாடி உணவு சேகரித்த முல்லைநில மக்கள் பிற்காலத்தில் அங்கு சாதுவாக விளங்கிய ஆடு, மாடுகளைத் தம் சுய தேவைக்குப் பழக்கினர். அவ்வாறு பழக்கிய இனங்களின் விருத்தியைப் பெருக்கவும் எண்ணினர். அவைகளைப் பாதுகாத்து ஓம்பி அதனால் பெறும் பலன்களைப் பயன்படுத்திக் கொண்டனர். முல்லை நில மக்கள் மேற்கொண்டிருந்த கால்நடை வளர்ப்பு பற்றிக் காண்பது பொருளாதார முறையைப் பகுத்து ஆய்வதற்கு உறுதுணையாக விளங்கும். சங்கப் பனுவல்களில் கால்நடை வளர்த்தல் பெரும்பாலும் முல்லைத்திணைப் பாடல்களில் பதிவாகியுள்ளன. சிறுபான்மை குறிஞ்சி, மருதத்திணைப் பாடல்களில் பதிவாகியுள்ளன. முல்லை நிலத்தில் ஆடு, மாடு மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட இம்மக்கள் சங்க இலக்கியத்தில் இடையர், பொதுவர், கோவலர், ஆயர் எனப் பல பெயரால் அழைக்கப் பெற்றனர். இப்பெயர்கள் ஒரு குறிப்பிட்ட இனக்குழுவுக்குரிய பெயராக விளங்குவது குறிப்பிடத்தக்கதாகும். இதனால் ஒரு குறிப்பிட்ட இனக்குழுவைச் சார்ந்த மக்கள் இத்தொழிலில் ஈடுபட்டனர் என்பதனையும் அறிய முடிகிறது.

*''புல்லினத் தாயர் மகளிரோ டெல்லாம்''– (கலித்.111:5)*
*''பாலொடு வந்து கூழொடு பெயரும்*
*யாடுடை யிடை மகன்''– (குறுந்.221:3-4)*
*''பல்லான் கோவலர்''– (அகநா.399:11)*
*''காயாம்பூங் கண்ணிப் பொதுவன்''– (கலித்.103:57)*

என்ற பாடலடிகள் ஆயர், இடையர், கோவலர் ஆகிய பெயரைச் சுட்டுகின்றன. ஆயர் என்போர் பேணிக்காக்கும் நிரைகளைப் பொருத்து வகைப்படுத்தப்படுவர். ஆடு, மாடு, பசு, எருமை இவற்றினை மேய்க்கும் முறையைப் பொருத்து புல்லினத்தாயர், குடம்சுட்டுவர், கோட்டினத்தாயர் என வகைப்படுத்தி வழங்கிய முறையைச் சங்க இலக்கியப் பனுவல்கள் எடுத்துரைக்கின்றன.

**புல்லினத்தாயர் குடஞ்சுட்டுவர் பெயர் விளக்கம்**

'புல்லினம்' என்பது ஆட்டினைக் குறிக்கும் சொல். இவர்கள் செம்மறி ஆடுகளை மேய்க்கும் தொழிலை உடையவர். ஆகையால் இவர்கள் புல்லினத்தாயர் என அழைக்கப்படுகின்றனர். பசுவினால் பெறப்படுவது குடம் நிறைய பால். பால் ஒரு சமுதாயத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்குப்

பெரும் பங்கு வகிப்பது. ஆகையால் இத்தகைய பசுவினைப் பேணும் ஆயர் குடம் சுட்டுவர் என அழைக்கப்பட்டனர். இதனை,

*“புல்லினத் தார்க்குங் குடஞ்சுட் டுவர்க்குக் மெங்*
*கோல்லேறு கோடல் குறையெனக் கோவினத்தார்”*
*– (கலித்.107:2-3)*

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. ‘கோட்டினத்து ஆயர் மகன்’(கலித்.103:33),‘கோவினத்து ஆயர் மகன்”(கலித்.103:37),‘புல்லினத்து ஆயர் மகன்’ (கலித்.103:47) என்ற பாடலடிகள் முறையே எருமைத் திரளுடைய ஆயர் மகன், ஆநிரை மிகப் பெற்ற ஆயர் மகன், ஆட்டினத்தையுடைய ஆயர் மகன் எனப் பொருள்பட்டு நிற்கின்றன. ஏறுகோடல் நிகழ்ச்சியில் இம்மூவகை நிரைகளைப் பேணிக்காக்கும் தொழிலில் ஈடுபட்டவர்களும் கலந்துக் கொண்டுள்ளனர்.

இன்றைய காலக்கட்டங்களில் ஆநிரைகளை ஓம்புவோர் ஆட்டினத்தை மேய்ப்பவர்களை இழிவாகக் கருதும் நிலை உள்ளது.

**புலம்பெயர்தல்**

நிரைகளை மேய்த்தற் பொருட்டு ஆயர்கள் இடம்விட்டு இடம்நகர்ந்து குடிபெயரும் நிலையற்ற வாழ்விடம் உடையவர்கள். இதனை,

*“ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்*
*ஏறுடை யினநிரை வேறுபுலம் பரப்பிப்*
*புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோடல்”– (அகநா.34)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். புலம் பெயர்தல் என்பது அந்நிலவளத்தைப் பொறுத்து அமைகிறது. மேய்ச்சலுக்குத் தேவையான நிலத்தை நாடி ஆயர்கள் புலம்விட்டுப் புலம்பெயர்கிறார்கள். மேய்ச்சல் நிலத்தை அடிப்படையாகக் கொண்டு இவர்கள் இருப்பிடத்தையும் அமைத்துக் கொள்கின்றனர்.

**மேய்ச்சல் நிலத்தில் மேய விடுதல்**

சங்ககால ஆயர்கள் முல்லை நிலத்தில் உள்ள மேய்ச்சல் பகுதியில் ஆநிரைகளைப் பரக்க மேயவிட்டனர். அங்கு இருக்கும் சிறிய குன்றுகளிடத்து இருக்கும் பூக்களைக் கொய்து மாலையாக அணிந்துக் கொண்டனர். அறுகம் புல்லை நன்றாக உண்ட பசுக்களைப் பால்நிறைந்த பருத்த மடியுடன் கன்றுகள் இருக்கும் மன்றத்திற்குப் புகுத்தினர். கோவலர்கள் ஆநிரைகளை மேய்த்தும் தம்

மனம் மகிழும் செயல்களில் ஈடுபட்டும் மேய்ச்சல் தொழிலை மேற்கொண்டனர். இக்கருத்தை,

*“முல்லை வியன்புலம் பரப்பி கோவலர்*
*குறும்பொறை மருங்கின் நறும்பூ அயர*
*பதவு மேயல் அருந்து மதவுநடை நல்ஆன்*
*வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்ற*
*கன்றுபயிர் குரல, மன்றுநிறை புகுதரும்”– (அகநா.14:7-11)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் ஆயர்கள் மாடு மேய்த்தல் என்னும் தொழிலை விருப்பமுடன் செய்தனர் என்பது மலை அடிவாரத்தின் பகுதியைக் குறிக்கிறது. சிறுகுன்றுகள் நிறைந்த மலையின் அடிவாரமே மேய்ச்சல் நிலமாகப் பயன்படுத்தப்பட்டதும் புலனாகும்.

**ஆநிரைகளை மன்றம் திருப்புதல்**

பரந்துபட்ட நிலப்பரப்பில் ஆநிரைகளை ஆயர்கள் மேயவிட்டனர். அவ்வாறு மேய்ச்சலை முடித்தபின் ஆநிரைகளைத் தம் குடியிருப்புக்குத் திருப்பினர். ஆநிரைகளுக்கு என்று ஒதுக்கப்பட்ட தனியிடத்தை மன்றம் என்று அழைத்தனர். இத்தகைய மன்றத்தில் ஆநிரைகள் இரவின் முற்பகுதியான மாலையில் வந்து புகுந்ததை,

*“கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும்”– (அகநா.64:2)*
*“பல்ஆ புகுதரூஉம் புல்லென் மாலை”– (குறுந்.162:2)*
*“எல்லூர்ச் சேர்தரும் ஏறுடை இனத்துப்*
*புல்லூர் நல்லான் பூண்மணி கொல்லோ”– (குறுந். 275:3-4)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இவை ஆநிரைகளை மாலையில் மன்றம் நோக்கி அழைத்து வந்ததைப் பற்றியும் ஆநிரைக்கு மணிகட்டும் வழக்கம் இருந்ததைப் பற்றியும் எடுத்துரைக்கின்றன.

**கன்றினை மன்றத்தில் இருத்தல்**

ஆநிரைகளை மேய்ச்சலுக்கு அழைத்துச் செல்லும் போது இளங்கன்றுகளை மன்றத்திலேயே விட்டுச் சென்றுள்ளனர். மாலையில் தாய்ப் பசு வருவதைக் கண்ட இளங்கன்று ஒலி எழுப்பியதை,

*“பல்லா நெடுநெறிக்கு அகன்று வந்தெனப்*
*புன்றலை மன்றம் நோக்கி மாலை*
*மடக்கண் குழவி அலம் வந்தன்ன”– (குறுந்.64:1-3)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இச்செய்தியை,

*“கறவை கன்றுவயின் படரப் புறவில்*

*பாசிலை முல்லை ஆசில் வான்பூச்''– (குறுந்.108:2-3)*

என்ற பாடலடிகளும் எடுத்துரைக்கின்றன.

**ஆயர்கள் குழலூதுதல்**

ஆயர்கள் ஆநிரையை மேய்ச்சலில் விட்டுவிட்டு கற்காத இவர்கள் மூங்கிலால் ஆன குழலினை ஊதுவதை,

*''பல்லான் கோவலர் கல்லாது ஊதும்*
*சிறுவெதிர்ந் தீங்குழற் புலம்புகொள் தெள்விளி''*
*–(அகநா.399:11-12)*

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. ஆநிரைகளை ஒருங்கிணைக்கும் நோக்கத்திற்காக ஆயர்கள் குழுலூதினர். இக்குழல் ஓசை கேட்டு ஆநிரைகள் ஓர் இடத்தினை விட்டுப் பிறிதொரு இடம் செல்லுதல் தவிர்க்கும் பொருட்டு குழல் ஊதினர். ஆநிரைகளை ஓரிடத்தில் தங்கச் செய்யும் பொருட்டு ஊது கொம்பினை இசைத்தனர். கடுக்கை என்னும் கொன்றை மரநிழலில் தங்கச் செய்ததை,

*''வாடுபுலம் புக்கெனக் கோடுதுவைத் தகற்றி*
*ஓங்கு நிலைக் கடுக்கை அல்குநிழல் அசைஇப்''*
*– (அகநா.399:9-10)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். ஆயர் மாலையில் குழலினை இசைத்துக் கொண்டு ஆநிரையை ஓட்டி வருவர். கன்றுகள் தாய்ப்பசுவுடன் இணைந்தாற் போன்று ஒன்றாக மனைதோறும் போகும். இதனை,

*''பல்லா தந்த கல்லாக் கோவலர்*
*கொன்றை அம்தீம்குழல் மன்றுதோறு இயம்ப''– (நற்.364:9-10)*
*''புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோற்*
*கல்லாக் கோவலர் ஊதும்*
*வல்வாய்ச் சிறுகுழல்.............''– (அகநா.74:15-17)*

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன.

**ஆடு மாடுகளுக்கு மணிகட்டுதல்**

கோவலர் ஆநிரைகளின் கழுத்தில் மணி கட்டியிருந்தனர். அடர்ந்த காட்டை ஒட்டிய பகுதியில் மேய்ச்சல் நிலம் இருந்தது. அங்கு புதர்களும் செடிகளும் நிறைந்து இருக்கும். மாலை வேளைகளில் ஆநிரைக்கூட்டத்தைக் கூட்டும் போது ஏதேனும் செடி கொடிகளில் சிக்கிக் கொண்டு வழி தவறிய ஆநிரைகளைக் கண்டறிவதற்காகவே ஆயர்கள் இம்மணிகட்டும் வழக்கத்தைக் கொண்டனர். இக்காரணம் கருதியே கழுத்தில் மணிக்கட்டியுள்ளனர். இதனை,

*“செந்நிலப் புறவின புன்மயிர்ப் புருவை
பாடுஇல் தெள்மணித்தோடு தலைப்பெயர”– (நற்.321:1-2)*

என்ற அடிகள் உணர்த்தும். இவை சிவந்த நிலத்தையுடைய காட்டிடத்தில் ஆடுகளின் கூட்டம் மேயும் என்பதையும் அவ்வாடுகளின் கழுத்தில் மணிகள் கட்டியுள்ளனர் என்பதையும் தெரிவிக்கின்றன.

*“.................................... ஓங்கு விடைப்
படுசுவற் கொண்ட பகுவாய்த் தெள்மணி
ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇ”– (அகநா.214:10-12)*

என்ற பாடலடிகள் ஆநிரைகளுக்கு மணிகட்டும் பழக்கத்தைப் புலப்படுத்துகின்றன. ஆநிரைகளுக்கும், ஆடுகளுக்கும் மணிகட்டும் வழக்கம் இன்றளவும் தமிழர்களிடம் பழக்கத்தில் உள்ளது.

ஆயர்கள் ஆநிரைகளின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணிகளின் ஓசையைக் கொண்டு அடையாளம் கண்டனர். ஆநிரைகள் ஆயர்களின் குழல் ஓசையைக் கேட்டுத் தம் மேய்த்தல் தலைவனை அடையாளம் கண்டு கொண்டன. இத்தகைய இசைப் புரிந்துணர்வுக்குத் தமிழர்கள் ஆநிரைகளைப் பழக்கி வைத்திருந்தனர்.

**கிடைமடக்குதல்**

ஆயர் இடம்விட்டு இடம் சென்று ஆநிரை மேய்க்கும் தன்மையினர். ஆயர் வாழ்க்கை மேற்கொள்ளும் நாடோடிகள் கால்நடை வளர்த்தலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். வாழுமிடங்களைச் சுற்றியுள்ள பகுதிகளில் ஆண்டு முழுவதும் கால்நடைகளை வளர்க்க வேண்டிய நிலை இவர்களுக்கு உள்ளதால் பருவகாலங்களுக்கு ஏற்பவோ சீரான இடைவெளி கொண்டோ இடம்விட்டு இடம் பெயர்ந்து மேய்க்கின்றனர் என்று மானிடவியலாளர் கூறுகின்றனர். இதனால் இவர்கள் காடுகளில் இரவில் தங்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆயர்களில் ஒரு பிரிவினர் இடையர்கள். இவர்கள் ஆடுகளைப் பேணிக் காத்தனர். அவ்விடையர் இரவில் ஆட்டுக்குட்டியை ஒரு சேரத் தொகுத்தனர். பின் ஓலைப் பாயை முதுகில் சுமந்து கொண்டு நடு இரவில் கொள்ளிக்கட்டையை எரித்து அதன் தீயில் உள்ளங்கையைக் காய்ச்சிக் குளிர்காய்ந்துள்ளனர். குறுநரியை ஓட்டும் பொருட்டு நீண்ட ஒலி எழுப்பி உள்ளனர். ஆடுகளைப் பிடித்துக் கொன்று தின்ன காடுகளில் இருக்கும் குள்ளநரிகள் பட்டியை வட்டமிடும். ஆகவே அந்நரிகளை விரட்டுவதற்காக

இவ்வகையான சீழ்க்கைஒலி எழுப்பியுள்ளனர். இவ்வகை சீழ்க்கை ஒலி ஆட்டுமந்தைகளுக்கும் ஓர் எச்சரிக்கை அறிவிப்பாக அமைகிறது. இம்முறை,

*"..................... பானாட் கங்குல்*
*மறித் துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்*
*தண்கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ*
*வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணியன்*
*ஐதுபடு கொள்ளி அங்கை காய்*
*குறுநரி யுளம்புங் கூரிருள் நெடுவிளி"– (அகநா.94:3-8)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இக்கருத்தையே,

*"பருவம் செய்த பானாட் கங்குல்*
*ஆடுதலைத் துருவின் தோடு ஏமார்ப்ப*
*கடைகோல் சிறுதீ அடைய மாட்டி*
*திண்கால் உறியன் பானையன் அதளண்*
*நுண்பல் துவலை ஒருதிறம் நனைப்ப*
*தண்டுகால் ஊன்றிய தனிநிலை இடையன்*
*மடிவிடு வீளை கடிதுசென்று இசைப்ப*
*தெறிமறி பார்க்கும் குறுநரி வெரீஇ*
*முள்ளுடைக் குறுந்தூறு இரியப் போகும்"– (அகநா.274:3-11)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். கார்காலத்தில் இரவில் கிடைப்பாதுகாப்பில் இடையர்கள் ஈடுபட்டதை இப்பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. அவர்கள் கிடைப்பாதுகாப்பின் போது திணிய தாம்புக் கயிற்றினைக் கொண்ட உறியினையும், பானையையும், தோற்படுக்கையையும் கொண்டு சென்றுள்ளனர். உறியும் பானையும் பால் சேகரிப்பதற்காக இருக்க வாய்ப்புண்டு. இல்லையெனில் இரவுப்பொழுதிற்குரிய உணவினை அதில் எடுத்துச் சென்றிருந்தனர் என்றும் எண்ண வாய்ப்புண்டு. அங்கு கானகத்தில் ஓய்வு எடுப்பதற்காகத் தோற்படுக்கையைப் பயன்படுத்தியுள்ளனர். கையில் நீண்ட தடிபோன்ற கோலினைத் தம் கைவசம் எப்போதும் வைத்துக் கொண்டிருந்துள்ளனர். இது பல்வேறு பயன்பாட்டிற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆடுகளை மேய்ப்பதற்கும் அவைகளுக்கு மரத்தில் இருக்கும் இலை தழைகளைப் பறித்துக் கொடுப்பதற்கும், மற்ற விலங்குகளை விரட்டுவதற்கும் மலைப்பாங்கான அடிவாரங்களில் ஏறுவதற்குக் கடினமான இடங்களில் ஏறி இறங்குவதற்கும் பயன்படுத்தியுள்ளனர். இரவு நேரமாக இருப்பதால் தீமூட்டி எரிய விட்டுள்ளனர். அத்தீயினை உருவாக்குவதற்கு அவர்கள் தீக்குச்சியையோ சிக்கி முக்கிக்கல்லையோ பயன்படுத்தவில்லை. மாறாக, தீக்கடைக்கோல் கொண்டு தீமூட்டியுள்ளனர். தீக்கடைக்கோல் என்பது நன்கு வைரம்பாய்ந்த

மரத்துண்டினைக் குறிக்கும். நன்கு வைரம்பாய்ந்த மரத்துண்டினை எடுத்துக்கொண்டு அதனை மற்றொரு மரத்துண்டினைக் கொண்டு கடைந்து எடுக்கும் போது தீப்பொறி எழும். வலிமையான மரக்கோலைக் கொண்டு தீ உருவாக்கும் இம்முறை சங்கத்தமிழரின் தனித்தன்மையாக விளங்குகிறது. வைரம் பாய்ந்த அதாவது வலிமையான மரக்கோலைக் கிடைவாக்கில் படுக்க வைத்து அதன் மீது மற்றொரு கோலை நிற்க வைத்து குறிப்பிட்ட ஒரு புள்ளி மையத்தைத் தேர்ந்தெடுத்து அவ்விடத்தில் நிற்கும் கோலை தயிர் சிளுப்புவது போல் மிக விரைவாகக் கடைந்து எடுக்கும் போது கிடைமரக்கோல் கரிந்து தீப்பொறி உண்டாகும். அப்போது நன்கு காய்ந்த சருகுகளையோ, குருவிக்கூட்டின் பஞ்சினையோ தீப்பொறியில் காட்ட தீப்பற்றிக் கொள்ளும். நிலையாக நிற்கும் கோல் கிடைநிலை கோலைத் தொடும் இடத்தில் கூர்மையாக சீவிப் பயன்படுத்தினால் தீ விரைவில் உண்டாகும். இம்முறையைப் பின்பற்றியே தீயினை உண்டாக்கியுள்ளனர். கோலைக்கடைந்து தீயை உருவாக்குவதால் அது ‘தீக்கடைக்கோல்’ என வழங்கப்பட்டுள்ளது. இத்தீப்பிழம்பானது காட்டு விலங்குகளை மிரளச் செய்யும். அசைந்தாடும் தலையினையுடைய செம்மறியாட்டின் கூட்டத்தைப் பாதுகாத்தற் பொருட்டு தீக்கடையும் கோலாலே கடைந்தெடுத்த சிறுதீயை விறகிற் சேர்த்து மிக்கு எரியுமாறு செய்தனர். பின்னர், வாயை மடித்துச் சீழ்க்கை ஒலியை எழுப்பினர். விரைந்து சென்று ஒலித்த அவ்வொலிக்குத் துள்ளிக் குதித்தாடும் ஆட்டுக் குட்டியினைக் கவர்ந்து போக நேரம் பார்த்திருக்கும் குள்ளநரி அஞ்சி முட்களையுடைய புதரின்கண் புகுந்து ஒடுங்கும்.

காட்டில் கிடைமடக்குதல் என்னும் வழக்கத்தினை உடையவர்கள் இடையர்கள். இவ்விடையர்கள் காட்டில் வாழும் கொடிய விலங்குகளிடமிருந்து ஆநிரையைப் பாதுகாப்பதற்காகப் பெரிய மரங்களுக்குத் தீவைத்து இரவு முழுவதும் எரியச் செய்துள்ளனர். இத்தீப்பிழம்பும் சீழ்க்கை ஒலியும் ஆடுகளையும் ஆநிரைகளையும் காக்கப் பயன்படுத்திய தொழில்நுட்ப உத்தி முறையாகும். இதனால் கொடிய விலங்குகளும் பட்டியை நெருங்காது. ஆட்டுமந்தைகளும் வழிதவறிப்போகாது.

**ஆநிரைகளுக்குத் தண்ணீரூட்டல்**

வன்புலமாகிய முல்லை நிலத்தில் நீர் ஆதாரம் என்பது சற்றுக் கடுமையான ஒன்று. காட்டாற்றுப் பகுதிகளில் வாழ்ந்த முல்லைநில மக்கள்

காட்டாறுகள் வறண்டபொழுது ஆநிரைகளுக்காக ஆற்றுப்படுகையில் கோலினைக் கொண்டு பள்ளம் தோண்டினர். அதனால் ஊற்று எடுத்த நீரை ஆநிரைகளுக்குத் தந்து மக்களும் பயன்படுத்தினர். இதனை,

*''கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய*
*வானீர்ப் பத்தல்''– (ஐங்.304:1-2)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

**ஆயர் மகளிர் ஆநிரை மேய்த்தல்**

ஆயர்களுள் ஆண்கள் மட்டுமில்லாமல் மகளிரும் ஆநிரையை மேய்த்தனர். பகல் நேரங்களில் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இங்கு தொழில் முறைப்பகுப்பு என்று மானிடவியலாளர் குறிப்பிடும் முறையைக் காண முடியும். பெண்கள் தினை அரிந்த தாளிடத்தில் கன்றினை மேய்த்தனர். இதனை,

*''புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்க்குக் கொடுப்பதோ*
*இனத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ*
*தினைக் காலுள் யாய்விட்ட கன்று மேய்க்கிற்பதோ''*
*– (கலித்.108:31-33)*

என்ற பாடலடிகள் மகளிர் இளங்கன்றுகளை மேய்த்ததை விளக்குகின்றன. தினைக்காலுள் கன்றினை மேயவிட்டனர் என்ற குறிப்பிலிருந்து தம் குடியிருப்புக்கு அருகாமையில் உள்ள தினைப்புனம் என்பது தெளிவு. மகளிர், ஆண்களைப் போல் காடுகளில் பரந்துபட்ட மேய்ச்சல் நிலங்களில் மேயவிட்டனர் என்று பதிவாகவில்லை. ஆகவே, பெண்கள் மன்றங்களில் இருந்த இளங்கன்றுகளை மேய்த்துள்ளனர் என்பது புலனாகும். அதுமட்டுமில்லாமல் மேய்த்தலின் பொழுது தினைப்புனத்தில் உள்ள தம் தமையனுக்கு உணவு கொண்டு சென்றதையும் நோக்கும் பொழுது வீட்டுவேலை காட்டுவேலை என இருவேலைகளையும் பெண்கள் கவனித்துள்ளனர் என்பது தெளிவாகும். வெயில் வெம்மையால் யாரும் நடமாடாத உச்சி வெயிலிலும் இம்மகளிர் கன்று மேய்த்தலை,

*''வழங்காப் பொழுதுநீ கன்று மேய்ப்பாய்போல''– (கலித்.112:12)*

என்ற பாடலடி கூறுகிறது. இவ்வினக்குழு மக்களின் வாழ்வாதாரம் மேய்த்தல் என்பதால் வெம்மையையும் பொருட்படுத்தாது இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஆயர் மகளிர் பால் கறந்து விட்டு, இளங்கன்றுகளை வீட்டின் முன் கயிற்றால் கட்டுவர். இதனை,

*“தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்*
*தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த”– (கலித்.111:1-2)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இவை பெண்கள் வீட்டில் பால் கறந்து கொடுத்ததை விளக்குகின்றன. சங்க காலம் மட்டுமல்லாது இக்காலத்திலும் பெண்களின் பங்கு சரிபாதியாகவே உள்ளது.

**ஆநிரைகளைப் பாதுகாக்கும் தொழுவம்**

இரவு நேரத்திலும் மழைக்காலங்களிலும் ஆக்களைப் பாதுகாக்கும் பொருட்டு அவற்றைத் தொழுவத்தில் அடைத்துப் பாதுகாத்தனர்.

*“நல்லேறு இயங்குதொறு இயம்பும்*
*பல்லான் தொழுவத் தொருமணிக்குரலே”– (குறுந்.190:3-7)*

என்ற பாடலடிகள் பாம்புகள் மழையின் இடிச் சத்தத்திற்கு அஞ்சி ஒடுங்குமாறு கார் மழை இரவின் நடுநேரத்தில் பெய்தது. இதனால் தொழுவத்தில் தனித்து இருந்த பசுவானது குரல் எழுப்பியது என்னும் செய்தியைக் காட்டுகின்றன. மாட்டுத்தொழுவத்திலிருந்து ஆநிரைகள் வெளியே செல்லாமல் இருப்பதற்காக வாயிலின் கண் இரு பக்கத்தும் ‘உழலை’ என்னும் கழிகளை நிறுத்துவதற்குத் துளையிட்டு மரம் பொருத்தியிருப்பர். இதனை,

*“அழல்வாய் மருப்பினாற் குத்தி உழலை*
*மரத்தைப் போல் தொட்டன ஏறு”– (கலித்.106:20-22)*

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

**மேய்ச்சலின் போது கொண்டு சென்ற பொருட்கள்**

ஆயர்கள் கார்காலத்தில் ஆநிரைகளை ஓட்டிச் செல்லும் போது கறவைக்கலங்கள் வைத்த உறி, சூட்டுக்கோல் போன்றவற்றை தோற்பையில் போட்டு எடுத்துச் செல்வர். இதை,

*“கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்*
*இமிழிசை மண்டை யுறியொடு தூக்கி”– (கலித்.106:1-2)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. இவர்கள் ஆடு, மாடுகளைப் பேணிக்காத்தலால் அவற்றின் தோல்கொண்டு பை செய்துள்ளனர். அதனைத் தம் தேவைக்கும் பயன்படுத்தியுள்ளனர். இன்று நாகரிகத்தின் பெயரால் பல வடிவங்களில் மக்கள் தோற்பையைப் பயன்படுத்துகின்றனர். இந்நாகரிகத்திற்குரிய பண்பாடு உருவாக்கம் ஆயர்களிடத்து இருந்து தோன்றியது என்றால் அதுமிகையாகாது. தோற்பை என்னும் புழங்கு பொருள் பண்பாடு குறிப்பிட்ட

இனக்குழுவினரிடம் இருந்து நாகரிகமாற்றத்தால் பல்வேறு தலைமுறை தாண்டிப் பரவலாக மக்கள் பயன்படுத்தும் பண்பாட்டு நாகரிகமாக உருப்பெற்றுள்ளது. இன்று மாட்டுத்தோலைப் பல்வேறு இராசாயன முறைக்கு உட்படுத்திப் பக்குவப்படுத்தித் தோற்பைகள் தயாரிக்கப்படுகின்றன. இது மிகப்பெரிய அளவில் தொழிற்சாலைகளில் செய்யப்படும் தொழிலாக நடைபெறுகிறது. இவ்வாறு தயாரிக்கப்படும் மாட்டுத்தோல் பைகளுக்கு உலகச்சந்தையில் நல்ல விலை நிர்ணயிக்கப்படுகிறது. மக்களும் விரும்பி வாங்குகின்றனர். சங்ககாலத் தமிழர்களாகிய ஆயர்கள் பயன்படுத்திய தோற்பை பண்பாடு இன்று பல்வேறு மாற்றம் பெற்றுப் பயன்பாட்டில் உள்ளது. ஆயர்கள், இடையர்கள் மழையிலிருந்தும் குளிரிலிருந்தும் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளப் பனை ஓலையால் பின்னப்பட்ட பாய் போன்ற குடை, பண்டங்களை வைக்கும் கலப்பை, தண்டுகால் ஆகியவற்றை உடன் எடுத்துச் சென்றுள்ளனர். இதனை,

*"பாணி கொண்ட பல்கால் மெல்உறி*
*ஞெலிகோல் கலப்பை அதளொடு சுருக்கி*
*பறிப்புறத்து இட்ட பால் நொடை இடையன்"– (நற்.142:1-8)*

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

**ஆயர் ஆடவர் மகளிர் செய்த விற்பனைத் தொழில்கள்**

ஆயர் ஆடவரும் மகளிரும் தம் ஆநிரைகளால் பெற்ற பால், தயிர், மோர், வெண்ணெய்,நெய் ஆகியவற்றை விற்பனை செய்து. அதற்கு ஈடாக உணவுப்பொருட்களைப் பெற்றுள்ளனர். இதனை,

*"பாலொடு வந்து கூழொடு பெயரும்*
*யாடுடை யிடை மகன்……"– (குறுந்.221:3-4)*

என்ற பாடலடிகள் காட்டும்.

**ஆடவர் பால் விற்றல்**

பால் விற்கும் பொருட்டு மாலைக் காலத்தில் இடையரில் ஆண்கள் ஊரில் வந்து பாலை விற்று அதற்கு ஈடாக உணவுக்குரிய தானியத்தைப் பெற்றுச் செல்வர். இடையர் பால் விற்றலை,

*"பறிப் புறத்து இட்ட பால்நொடை இடையன்"– (நற்.142:4)*

என்ற பாடலடி எடுத்துரைக்கும்.

**ஆய்ச்சியர் தயிர் கடைதல்**

இரவு இருள் புலர்ந்த விடியற்காலையில் ஆயர் மகளிர் விளாம்பழத்தின் மணம் நாறும் பானையின் கண் நெய் பெறும் பொருட்டு மத்தினால் தயிர் கடைவர். இதனை,

*''விளாம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசிப்*
*பாசந்தின்ற தேய்கால் மத்தம்*
*நெய்தெரி யியக்கம் வெளில் முதல் முழங்கும்*
*வைகுபுலர் விடியல்……''– (நற்.12:1-4)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இவை ஆய்ச்சியர் விடியற்காலையில் மத்தம் கொண்டு தயிர் கடைந்து நெய் எடுத்தலை எடுத்துரைக்கின்றன. மட்குடத்தில் உள்ள தயிரை வெயில் வரும் முன்பு கடைந்தால் தான் வெண்ணெய் திரளும், வெயில் வந்த பின் கடைந்தால் வெண்ணெய் திரளாது.

*''சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற*
*பிறவா வெண்ணெய்''– (நற்.84:6-7)*

என்ற பாடலடிகள் சுட்டும். தயிரிலிருந்து கடையப்பட்ட மிதப்புப் பொருள் வெண்ணெய் ஆகும். எஞ்சியுள்ளவை மோராகும். வெண்ணெய் மிதப்பை,

''*பால்கடை நுரையின் பரூஉ மிதப்பு''– (அகநா.224:6)*

என்னும் அடி இயம்புகிறது.

**ஆய்ச்சியர் மோர் விற்றல்**

ஆயர் மகளிர் ஊரில் வந்து மோர் விற்றனர்.இதனை,

*''பேரூருஞ் சிற்றூருங் கௌவை எடுப்பவள் போல்*
*மோரொடு வந்தாள்''– (கலித்.109:6-7)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

**வேளாண்மை**

மனித இனத்தவர்களின் உணவு ஈட்டும் முயற்சி பல நிலைகளில் பரிணாம வளர்ச்சி அடைந்து வளர்ந்துள்ளது. ''கி.மு.10,000 ஆண்டுகளுக்கு முன்னர் வரை வேட்டையாடுதலும் இயற்கையில் கிடைக்கும் உணவுப் பொருட்களைச் சேகரித்தலுமே முதன்மையான வாழ்க்கைத் தொழிலாக இருந்தது. கி.மு. 7000 ஆண்டு வாக்கில் வடக்கு ஆப்பிரிக்கா, சிற்றாசியா (Asiaminor) தெற்காசியா போன்ற பழைய உலகப்பகுதிகளிலும் புத்துலகத்தைச் சேர்ந்த பாலைவன மக்களும் புத்துலகப் பகுதியில் வாழ்ந்த தொன்மைப் பண்பாட்டினரும் கால்நடைகளை மேய்த்து வாழத்தொடங்கினர். கி.மு. 3000

ஆண்டு வாக்கில் உலகின் பெரும்பான்மையானவர்கள். வேளாண்மையை முதன்மையான வாழ்க்கைத் தொழிலாக ஏற்கத் தொடங்கினர்.''[10] இந்தக் காலக்கட்டத்தில் வாழ்ந்த சங்கத் தமிழரும் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டு செயல்பட்டனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நால்வகைத் திணைச் சமுதாயங்களும் தங்கள் நிலங்களின் தன்மைக்கேற்ப வேளாண்மை செய்தனர். அச்சங்கத் தமிழரின் வேளாண்மை முறை பனுவல்களில் பதிவாகியுள்ளன.

மானிடவியலாளர் வோளாண்முறையை எளிய வேளாண்மை என்றும், பண்பட்ட வேளாண்மை என்றும் இருவகைப்படுத்துவர். இவ்விரு வேளாண்மையும் சங்கத்தமிழ் மக்களிடத்து வழக்கில் இருந்துள்ளது.

**எளிய வேளாண்மை**

எளிய வேளாண்மை என்பது பெரும்பாலும் சிறு நிலங்களில் பெண்களால் பயிர் செய்யப்படுவதாகும். இவ்வேளாண்மை உழுதுபயிரிடும் முறைக்கு முந்தைய வேளாண்மை முறையாகும். உழுது பயிரிடாமல் எளிய கருவிகளைக் கொண்டு நிலத்தைக் கொத்தித் தோட்டப் பயிர்களை விளைவிப்பதாகும். இவர்கள் பெரும்பாலும் தோண்டுகழி போன்ற எளிய கருவிகளை முதன்மையான கருவிகளாகப் பயன்படுத்துவர். தோண்டு கழிகளைப் பயன்படுத்தித் தனித்தனியே விதைகளை ஊன்றுவர். பெரும்பான்மையும் செடிகொடிகள் மரத்தின் விதைகள் ஆகியவற்றை ஊன்றுவர். பெண்கள் விளையாட்டாக ஊன்றிய விதை முளைத்து மரமாகி வளர்ந்துள்ளது. இதனை,'*ஆயமொடு வெண்மணல் அழுத்தி'–(நற்.172)* என்ற அடி குறிப்பிடுகிறது. ஊன்றுதலுக்கு 'அழுத்திய'' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

காட்டெரிப்பு வேளாண்மையும் எளிய வேளாண்மை முறையின் பாற்படும். ''நவீன சமநில வேளாண்முறை தொடக்கத்தில் காட்டெரிப்பு வேளாண் முறையாக (Slash and burn Cultivation) இருந்து வளர்ச்சி பெற்றதாகும். இம்முறையை இன்றும் பல பழங்குடிகள் செய்து வருகின்றனர். இவ்வகை வேளாண்மையில் காட்டுப்பகுதியில் வாழும் பழங்குடியினர் அவர்களின் குடியிருப்புக்கருகில் ஓர் இடத்தைத் தேர்வு செய்து அங்குள்ள காட்டினை அழித்து வெட்டிய மரங்களைத் தீயிட்டுக் கொளுத்துவர். இவ்வாறு கொளுத்துவதால் கிடைக்கும் சாம்பல் நிலத்திற்கு உரமாக அமைந்து நல்ல

விளைச்சலைத் தரும். இவ்வாறு தயார் செய்யப்படும் நிலத்தில் மூன்று முதல் ஐந்தாண்டுகள் வரை பயிரிடுவர்''.(11) இம்முறை வழியே சங்கத்தமிழரும் பயிரிடுவதற்காகப் புதர்களையும் கரம்புகளையும் காடுகளையும் அழித்து விளைநிலமாகப் பண்படுத்தி உணவுத் தேவையை நிறைவு செய்துள்ளனர். இவ்வகை நிலங்களில் மானாவாரிப் (வன்புலம்) பயிர் பயிரிடுவது சிறந்த பயனைத் தந்துள்ளது. அவ்விதம் புதிய தினைக் கொல்லையை உண்டாக்கும் பொழுது எழும் புகையினை. *''இதைமுயல் புனவன் புகைநிழல் கடுக்கும்'' (அகநா.140:1-3)* என்ற அடி காட்டுகிறது.

*''குன்றக் குறவன் சாந்த நறும்புகை*
*தேம் கமழ் சிலம்பின் வரையகம் கமழும்*
கானக நாடன் வரையின்''– (ஐங்.253:1-3)

என்ற பாடலடிகள் குன்றத்தின் கண் வாழும் குறவன் சந்தன மரத்தை எரித்து நிலத்தைப் பண்படுத்தலை உணர்த்தும்.

*''புனவர் கொள்ளியின் புகல் வரும் மஞ்ஞை*
*இருவி இருந்த குருவி வருந்துற''– (ஐங்.295:3-4)*

என்னும் இப்பாடலடிகளில் உள்ள 'புனவர்' என்பது காட்டின் கண் வாழும் இயல்பினரான குறவரைக் குறிக்கும். அவர்கள் புனத்தை அழித்துத் தீயிட்டுக் கொளுத்தி தினை முதலியன விளைவிக்கத் தகுதியுடையதாக ஆக்குவது வழக்கம் என்பதை உணர்த்துகிறது. ''*முதைப் புனங்கொன்ற வார்கலி யுழவர்'' (குறுந்15:6)*என்னும் அடி குறிஞ்சி நில மக்கள் மலைப்பகுதியில் விளைநிலமாகிய புனத்தில் சிறுசிறு மரங்களையும் புதர்களையும் வெட்டி எடுத்து சுட்டெரித்துப் பயிரிடப் பயன்படுத்தியதை எடுத்துரைக்கும். அகில் மரத்தை வெட்டி எரித்துப் பண்படுத்தியதை,

*''ஏனல் இதணத்து அகிற்புகை உண்டு இயங்கும்*
*வான் ஊர் மதியம் வரைசேரின்''– (ஐங்39:7-8)*

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

*''நறையகில் வயங்கிய நனிபுன நறும்புகை*
*உறையுறு மையின் போகிச் சாரல்*
*குறவர் பாக்கத் திழிதரு நாடன்''– (குறுந்.339.1-3)*

என்ற பாடலடிகள் குறவர் தினைப்புனத்தை உருவாக்குவதற்கு அங்கு படர்ந்திருக்கும் நறைக்கொடியையும் அகில் மரத்தையும் தீயிட்டுக் கொளுத்திய செய்தியைத் தருகின்றது. சந்தன மரக்காட்டினைச் சீர்படுத்தி, தினைக்

கொல்லையாக்கியதையும் மரக்காட்டினைப் பண்படுத்திச் செந்தினைகளை விளைவித்ததையும்

*“எரிதின் கொல்லை இறைஞ்சிய ஏனல்”* - அகநா.288:5

*“யாம் கொன்ற மரம் சுட்டஇயவில்*
*கரும்பு மருள்முதல பைந்தாட் செந்தினை”– (குறுந்.214:1-2)*

என்னும் அடிகள் உணர்த்தும். பிற மரங்கள் உள்ள காட்டினையும் மேம்படுத்தி, கானவன் பயிர்விளைவித்து விளைச்சலைப் பெருக்கியதை,

*“மரங் கொல் கானவன் புனந்துளர்ந்து வித்திய*
*பிறங்கு குரல் இறடிகாக்கும் புறந்தாழ்”– (குறுந்.214:1-3)*

எனபதால் அறிய முடிகின்றது.

**பண்பட்ட வேளாண்மை**

பண்பட்ட வேளாண்மை என்பது உழும் கருவிகளைக் கொண்டு பெரும்பரப்பில் பயிர் வகைகளை விளைவிப்பதாகும். பண்பட்ட வேளாண்மையானது பருவம் காணல், நிலத்தை உழுதல், நீர்பாய்ச்சுதல், எரு இடுதல், விதைவிதைத்தல், களையெடுத்தல், பாதுகாத்தல், அறுவடைசெய்தல் என்னும் வளர்ச்சி நிலைகளைக் கொண்ட வேளாண்மை முறையாகும்.

**பருவம் கண்டு பயிர்செய்தல்**

குறிஞ்சி நில உழவர்கள் பருவங்கண்டறிந்து பயிரிட்டனர். உயர்ந்த மரக்கிளைகளுள் காணும் மின்மினியைக் கொண்டு மழை பெய்கின்ற இயக்கத்தினைக் கண்டறிந்த தனிப்பாங்கினை,

*“பன்மர உயர்சினை மின்மினி விளக்கத்துச்*
*செல்மழை யியக்கங் காணும்” - (நற்.44:10-11)*

என்பர் பெருங்கௌசிகனார். வறட்சி மிகுந்த கோடைகாலத்தில் பயிர்த்தொழில் செய்வதில்லை. உழவர்கள் மழையை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். அம்மழை பொழிந்த காலத்தில் மகிழ்ச்சியில் நனைந்தனர். இவ்வுணர்வை,

*“நாடு வறம் கூர நாஞ்சில் துஞ்ச*
*கோடை நீடிய பைதுஅறு காலை*
*குன்று கண்டன்ன கோட்ட யாவையும்*
*சென்று சேக்கல்லாப் புள்ள உள்இல்*
*என்றூழ் வியன் குளம் நிறைய வீசி*
*பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை”– (அகநா.42:5-10)*

என்ற பாடல் வெளிப்படுத்தும். இதிலிருந்து சங்ககால உழவர் பெரும்பாலும் இயற்கை கொடுக்கும் வரமான மழையை நம்பியே பயிர் செய்தனர் என்பது புலப்படும். வேளாண்மைக்கு மழை வரும் காலத்தை எதிர்பார்த்து இருந்தனர்.

**நிலத்தை உழுது பண்படுத்துதல்**

வேளாண்மைப் பயன்பாட்டுக் கருவிகளுள் முக்கியமானது 'கலப்பை' ஆகும். இது உழவர் நிலத்தைப் பண்படுத்தப் பண்படுத்தும் கருவிகளுள் ஒன்று. நிலத்திலுள்ள உறுதியான மண்ணினைக் கீழ் மேலாகக் கலப்பதால் கலப்பை எனப்பட்டது. இவ்வகைக் கருவியை உருவாக்கவும் பயன்படுத்தவும் சங்கத்தமிழர் கற்றிருந்தது குறிப்பிடத்தக்கதாகும். இக்கருவியானது மரத்தால் செய்யப்பெற்றது. ஆனால், எந்தமரம் என்ற குறிப்பு சங்க பனுவல்களில் பதிவு செய்யப்படவில்லை. சங்கத்தமிழ் இலக்கியத்தில் இக்கருவி 'ஏர்' என்றும் 'நாஞ்சில்' என்றும் வழங்கப்படுகிறது. பெருமழை பெய்து நன்கு இருள் புலர்ந்த விடியற்காலையில் 'ஏர்களால்' இடம் உண்டாக உழப்பெற்ற பெரிய வடுவையும் கீழ் மேலாகப்புரண்ட புழுதியையும் உடைய செம்மண் நிலத்தைப் பிளந்து சென்ற நீண்ட படைச்சாலிலே உழவர் விதைகளை விதைத்தனர். இதனை,

*''பேர்உறை தலைஇய பெரும்புலர் வைகறை*
*ஏர்இடம் படுத்த இருமறுப் பூழிப்*
*புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து*
*ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்*
*வித்திய மருங்கின் விதைபல நாறி''– (அகநா.194:1-5)*

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**உழுதல்**

சங்க மக்கள் கலப்பை, காளைமாடு ஆகியவற்றைப் பயன்படுத்தி நிலத்தை உழுது வேளாண்மையைத் தொடங்கினர். அவ்வாறு நிலத்தை உழுது பண்படுத்தியதை,

*''முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கி*
*பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்*
*இடுமுறை நிரம்பி ஆகுவினைக்கலித்து*
*பாசிலை அமன்ற பயிறு''– (அகநா.262:1-4)*

*''.......................................... எழில் வேழம்*
*வறன் உழு நாஞ்சில் போல் மருப்புஊன்றி நிலம் சேர''*
*– (கலித்.8:4-5)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். நாஞ்சிலானது யானையின் தந்தத்தைப் போல் கூர்மையானதாக இருந்ததால் அதனைக் கொண்டு நிலத்தைக் கிழித்து எடுத்து மண்ணைப் புழுதியாக்குவது எளிதாகும்.

*''பகல் போல் முறைக்கு ஒல்கா*
*கோல் செம்மை ஒத்தி பெரும' - (கலித்.86:17-18)*

என்ற பாடலடிகளில் 'பகல்' என்பது நாஞ்சிலைக் குறித்துப் பயின்று வந்துள்ளது.

**உரமிடுதல்**

பயிருக்கு எரு இடுதல் என்பது இன்றியமையாத வேளாண்மைச் செயல்பாடாகும். சங்கத்தமிழரிடம் கால்நடை வளர்ப்புக்கு என்றே தனி இனக்குழு மக்கள் வாழ்ந்தனர். அவர்கள் கால்நடைகள் அதிகமாக வளர்ப்பதால் அவற்றின் கழிவுகளைச் சேமித்து வைத்தனர். அவை எருவாக உருமாற்றம் பெற்றன. உழவுசெய்ய வேண்டிய நேரத்தில் எருவினை விட்டு உழுது நிலவளம் பேணப்பட்டது. இங்கு முல்லை நில மக்களுக்கும் கால்நடை வளர்க்கும் உழுது பயிரிடும் மக்களுக்கும் இடையே பொருளாதாரப் பரிவர்த்தனை சுமூகமாக நடைபெற்றுள்ளது. சங்ககாலத்தில் கால்நடைகளின் சாணத்தைத் 'தாதெரு' என்றனர். எருக்களைக் கொட்டி வைப்பதற்கு என்றே விடப்பட்ட மன்றங்களில் அவைகளைச் சேர்த்து வைத்துள்ளனர். இதனை,*''காஞ்சித் தாது உக்கன்ன தாதெரு மன்றத்து''– (கலித்.108:60)* என்னும் பாடலடியின் வழி அறிய முடிகிறது.

**உழுதலில் நுட்பம்**

புழுதி மண் நான்கின் ஒரு பங்காகும்படி உழுது காயவிட்டால், அப்புழுதியே பயிருக்கு நல்ல எருவாகும் என்பது இயற்கை வேளாண் அறிவியலாகும்.''[(12)] இதையே

*''..................................... உறுபெயல்*
*தண்துளிக்கு ஏற்ற பலஉழு செஞ்சேய*
*மண்போல் நெகிழ்ந்து''– (அகநா.26:23-25)*

என்பது உணர்த்தும். அதாவது, மிக்க பெயலையுடைய நிலத்தைப் பலமுறை உழுதலால், அந்நிலம் நெகிழ்ந்து வேளாண்மைக்கு ஏற்றதாய் அமைதல் இங்கு சுட்டப்படுகிறது. பலமுறை உழுதலால் மண்ணின் தன்மை மேம்படும் என்பதோடு களைகளும் அழிக்கப்படும் என்பது வேளாண் உத்தியாகும். களைகளை அடியோடு அழிக்க ஆழ உழுவதும் சிறந்த முறையாகும்.

கோடை உழவு செய்வது ஒரு சிறந்த களைக்கட்டுப்பாட்டு உழவு முறை ஆகும். மழை பெய்த தகுந்த பதமான நிலத்தில் உழவு செய்யும் போது களைச்செடிகள் நீக்கம் பெறுகின்றன. இவ்வாறு உழுதலில் நுட்பத்தினைச் செயல்படுத்தி அதிக விளைச்சல் பெற்றதை,

*''ஊன் கிழித்தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்*
*வித்திய மருங்கின் விதைபல நாறி''– (அகநா.194:4-5)*

என்பது உணர்த்தும். உழவுத் தொழிலில் புகும் முகத்தான் மருத நிலத்தினை எருமை கொண்டு உழுது பண்படுத்தியுள்ளனர்.இதனை,

*''மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்*
*பெருநெற் பல்கூட் டெருமை உழவ''– (நற்.60:1-2)*

என்பர் தூங்கலோரியர். குறிஞ்சி நிலத்தை உழுத திறத்தினை,

*''இரங்கல் அடுக்கத்து என்னையர் உழுத''– (நற்.122:11)*

என்பர் செங்கண்ணனார். முல்லை நிலத்தை உழுத நிலையினை,

*''விதையர் கொன்ற முதையற் பூழி*
*இடுமுறை நிரப்பிய ஈரிலை வரகின்''– (நற்.121:1-2)*

என்பர் ஒரு சிறை பெயரியனார். இதனால் ஆயர்கள் விதைவிதைப்பதற்கு முன்பாகப் பலமுறை நிலத்தினை உழுது புரட்டிய பழங்கொல்லைப் புழுதியில் வரகினை விதைத்த செய்தி தெளிவாகும்.

**நீர் ஆதாரத்தை முறைப்படுத்திப் பயன்படுத்துதல்**

உடலும் உயிரும் போன்றது நிலமும் நீரும் ஆகும். நிலத்தின் வளத்தைப் பாதுகாக்க ஆங்காங்கே நீர்நிலைகளை அமைத்தனர். விளைநிலங்களின் இடையிடையே சிறுசிறு குளங்களை ஏற்படுத்தி மண்ணின் வளத்தைப் பேணினர். இதனால் விளைநிலங்கள் தன்மையில் மாறுபடாமலும் வேளாண் வளத்தில் குன்றாமலும் விளங்கின. இதனை,

*''நறுவடி மாஅத்து விளைந்து உகுதீம் பழம்*
*நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்''– (ஐங்.61:1-2)*

*''தூங்குநீர்க் குட்டத்துத் துடுமென வீழும்*
*தண்டுறை ஊரன்...........''– (நற்.280:3-4)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இங்கு பொய்கை, நீர்க்குட்டம் என்பவை நீர் ஆதாரம் பெற்ற நில அமைப்பைக் குறிப்பிடுகின்றன. இந்நீர்நிலைகளால் பழனம் செழிப்புற்று வளம் பெற்று விளங்கியதை,

*“கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்*
*பழன வாளை கதூஉம் ஊரன்”– (குறுந்.8:1-2)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். மலையில் நெல் விளைவிக்கும் பொழுது மலை அருவியின் நீரினைக் கொண்டு வேளாண்மை செய்தனர். இதனை,

*“மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி*
*அருவியின் விளைக்கும்............”– (குறுந்.371:2-3)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**எரு இடுதல்**

பண்டைக்காலத்தில் வேளாண் மக்கள் கால்நடைகளின் கழிவாகிய தொழு உரமும் இலைதழைகளாகிய தழைஉரமும் பயன்படுத்துவதை மரபாகக் கொண்டிருந்தனர். “பயிருக்கு பதினாறு வகை மூலச்சத்துகள் வேண்டும் என்கின்றனர் பயிரியலர். அவையாவன 1. உப்பியம் (Nitrogen - N) 2.எரியம் (Phosphorus - P) 3. வெடியம் (Potassium - K) 4. சுண்ணகம் (Calcium - Ca) 5. வாலிமம் (Maghesium - Mg) 6. கந்தகம் (Sulphur - S) 7. அயம் (Iron - Fe) 8. கன்னகம் (Manganesse - Mn) 9. செம்பு (Copper - Cu) 10. துத்தநாகம் (Zinc - Zn) 11. போரான் (Boron - B) 12. மலுப்டினம் (Molybidnum - Mb)13.பாசகம் (Chlorine - C) 14. கரியம் (Carbon - C) 15. நீரியம் (Hydrogen - H) 16. உயிரியம் (Oxygen)”[13]

“மேற்கண்டவற்றில் முதல் மூன்றும் முதனிலை (Primary) சத்துகள், 7 முதல் 13 வரை உள்ள மூன்றும் அனைத்தையும் இணைத்துச் செயற்படுத்தும் தன்மையன.”[14]

இவைகளில் முதல் மூன்றும் பயிர்வளத்திற்கு இன்றியமையாத சத்துக்களாகும். ‘உப்பியம்’ என்னும் தழைச்சத்து, பயிர்களுக்கு – பயிர் இலைகளுக்குப் பச்சைநிறம் தருகிறது. மணிச்சத்து எனப்படும் எரியத்தையும் சாம்பல்சத்து எனப்படும் வெடியத்தையும் வேலை செய்ய வைக்கிறது. எரியம் என்னும் மணிச்சத்து பயிரின் வளர்ச்சி வேகத்தைத் தூண்டித் தரமானது ஆக்கும். புதிய உயிரணு உற்பத்தியாக உதவும். வெடியம் என்னும் சாம்பல் சத்தானது பயிர்களுக்கு நோய் எதிர்ப்பு, பூச்சி அரிப்பு எதிர்ப்பு, குளிர் எதிர்ப்பு சக்தி ஆகியவைகளைத் தருகிறது.[15]

இவ்வகையில் எரு இடுதலில் நுணுக்கத்தினை அறிந்த சங்கத்தமிழா் இச்சத்துகள் கிடைக்கப்பெறும் தழை உரங்களையும் குப்பைக் கூளங்கள் நிறைந்த கழிவுகளையும் பயன்படுத்தினா். இதனை *‘தாது எரு மறுகின்’ (நற்.343:3),‘இரும்புனிற்று எருமைப்பெருஞ் செவிக்குழவி பைந்தாது எருவின்’ (நற்.271:1-2),‘தாது எரு மறுகின் மூதூா்’ (அகநா.165:4)* என்பன உணர்த்தும். எருக்களைக் கொட்டி வைப்பதற்கென்று விடப்பட்ட இடங்களில் அவற்றைச் சேர்த்து வைப்பா். இது *‘தாதெரு மன்றம்’ (கலித்.108:60)* எனப்பட்டுள்ளது.

**விதை விதைத்தல்**

சங்கத் தமிழா்களால் முல்லை நிலங்கள் என்று கூறப்பட்டவை இன்று மானாவாரி நிலங்கள் எனப்படுகின்றன. மானாவாரி நிலங்களில், விதைத்தலே பெரும்பான்மையும் நடைபெறும். மரங்கள் அடா்ந்த பகுதியில் உள்ள மரங்களையும், புதா்களையும் வெட்டிப் பண்படுத்திய நிலத்தில் காலை நேரத்தில் விதைவிதைக்கின்ற வட்டிலில் விதையை எடுத்து விதைத்ததுவிட்டு மாலை நேரத்தில் வீடு திரும்பும் போது அவ்விதைப் பெட்டியில் அந்நிலத்தில் மலரும் மலா்களைப் பறித்துக் கொண்டு வந்தார்கள் என்பதை,

*“வித்தொடு சென்ற வட்டி”– (நற்.210:3)*

*“முதைப் புனங்கொன்ற ஆா்கலி உழவா்*
*விதைக் குறுவட்டி போதொடு பொதுளப்*
*பொழுதோ தான் வந்தன்றே மெழுகான்”– (குறுந்.155:1-3)*

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. விதையின் அளவையும் முறையையும் கூடப் பண்டைய மக்கள் போற்றி வந்துள்ளனா்.

**களையெடுக்கும் தொழில்முறை**

பயிா்களின் ஊடே உள்ள களைகளை நீக்குதலின் பயனை அறிந்த சங்கத்தமிழா் அதனை நீக்கிப் பயிா்களைப் பாதுகாத்தனா். விளைநிலத்தில் பயிா்களுக்குகிடையே இருக்கும் தேவையற்ற புல் பூண்டுகளாகிய களைகளைக் கொட்டினைக் கையிற் கொண்டு எறியும் தொழிலைச் செய்தனா். இதனை,*“கோடுடைக் கையா் துளரெறி வினைஞா்”– (அகநா.184:13)*என்ற பாடலடி மூலம் அறிய நேரிடுகிறது. வேலை செய்யும் பொழுது உடல்சோா்வு தெரியாமல் இருப்பதற்காகப் பறையை ஒலிக்கச் செய்து கேட்டனா். வெயிலும் மழையும் தெரியாமல் உடல் பாதிப்பு அடையாமல் இருப்பதற்காகக் கொல்லை உழவா்கள்

கொம்புடைய ஓலைக்குடையைத் தலையில் கவிழ்த்துக் கொண்டனர். களைக்கொட்டினைக் கொண்டு களையினைப் பறித்துப் புலங்களிலிருந்து நீக்கினர். இதனை,

*''கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்*
*கறங்குபறைச் சீரின் இரங்க வாங்கி*
*களைகால் கழீஇய பெரும்புன வரகின்''– (அகநா.194:7-9)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. அருவியையுடைய பரந்த நிலத்தில் மலை நெல்லைக் கானவர் விதைத்தனர். அவற்றிடையே களையாக வளர்ந்துள்ள பருத்த இலைகளையுடைய காட்டு மல்லிகையையும் பசிய மரலையும் களையாகப் பறித்து எறிந்தனர்என்பதை,

*''அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்*
*பருவிலைக் குளவியொடு பசுமரல் கருக்கும்''– (குறுந்.100:1-2)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். களையெடுக்கும் தொழிலில் ஆண், பெண் ஆகிய இருபாலரும் ஈடுபட்டனர் என்பதை,

*''கடவை மிடைந்த துடவையஞ் சிறுதினைத்*
*துளரெறி நுண்துகள் களைஞர் தங்கை*
*தமரின் ..................................................''– (குறுந்.392:4-5)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதில் குறிஞ்சி நில மக்கள் தங்கள் தோட்டத்தின்கண் உள்ள அழகிய தினைகளுக்கிடையே நெருங்க முளைத்த களைகளைக் களைக் கொட்டினால் எறிந்தமையால் நுண்ணிய புழுதி எழுந்தது என்னும் கருத்து இடம்பெற்றுள்ளது. இதனால் களைக்கொட்டு மண்ணின் மேல் புறத்திலுள்ள வேண்டா செடி கொடிகளைக் கொத்தி எடுக்கப் பயன்பட்டது என்பது புலப்படும். 'தமர்' என்பதால் இக் களைகொட்டுத் தொழிலில் ஆண், பெண் வேறுபாடு இன்றி அனைவரும் ஈடுபட்டனர் என்பது தெளிவாகும். களை பறிக்கும் தொழில், குழு அமைப்பு முறையில் நடைபெற்றது. '*மரங்கொல் கானவன் புனம் துளர்ந்து வித்திய' (குறுந்.214:1)* என்பதில் களை எடுத்தலின் தேவை உணர்த்தப்பட்டுள்ளது.

**பயிர்களைப் பாதுகாத்தல்**

பயிர்களைப் பாதுகாக்கும் முறையில் விலங்குகளின் தன்மையைப் பொறுத்து தொழில்முறை உத்தியைப் பயன்படுத்தியுள்ளனர். ஆண்களுக்கும் பெண்களுக்கும் உரிய தகுந்த முறையில் தொழில் பகுப்பினை மேற்கொண்டு இரவும் பகலும் காவல் புரிந்தனர். உடல் வலிமையைப் பொறுத்து ஆண்களுக்கு

இரவு நேரக்காவல் என்றும் பெண்களுக்கு பகல்நேரக் காவல் என்றும் பகுத்துக் கொண்டனர். பயிர் வளர்ந்து அறுவடை ஆகும் வரை காவலில் ஈடுபட்டனர். நெல், தினை தானியங்களைப் பாதுகாக்கும் தொழிலில் குறிஞ்சிநிலத்தில் ஈடுபட்டது குறித்தே சங்க இலக்கியப் பனுவல்களில் பெரும்பான்மைப் பதிவுகள் காணப்படுகின்றன.

**பரண் அமைத்தல்**

கானவர், கொடிய விலங்குகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள மிக உயரமான பரண்களை அமைத்து பயிர்ப் பாதுகாப்புத் தொழிலில் ஈடுபட்டனர். அவ்வகைப் பரண்களை மரங்களின் மீதும் மலைக்குகைகளின் மீதும் அமைத்து இருந்தனர். பலா மரத்தின் மீது பரண் அமைத்துக் காவல் புரிந்த நிகழ்வு சங்கப் பனுவல்களில் பதிவாகியுள்ளது.

*''பிடியொடு மேயும் புன்செய் யானை*
*அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்*
*நெடுவரை ஆசினிப் பணவை ஏறி*
*கடுவிசைக் கவணையில் கல்கை விடுதலின்''– (கலித். 41:7-10)*

என்ற பாடலடிகள் பலாமரத்தின் மீது பரண் அமைத்து பயிர்ப் பாதுகாப்புத் தொழில் புரிந்தமையை விளக்கும். மலைக்குகைமேல் பரண் அமைத்திருந்ததை,

*''களிறு அணந்து எய்தாக் கல்முகை இதணத்து*
*சிறுதினைப் படுகிளி எம்மொடு ஓப்பி''– (அகநா.308:8-9)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். களிறானது தனது துதிக்கையால் மேல் நிமிர்ந்து பற்ற இயலாதவாறு மலைக்குகையின் மேல் அமைக்கப்பட்ட பரண் என்பது கவனிக்கத்தக்கது. மரங்களின் மீது பரண் அமைந்தாலும் சில பொழுது யானைகளால் தாக்குண்டு அழிய நேரலாம். ஆனால் பாறைகளால் ஆன கல்முகையை யானையால் அழித்தல் என்பது அரிது. ஆகையால் அவ்வகையான உயரமான மலைக்குகையைத் தேர்ந்தெடுத்துக் காவல் புரிந்தனர் என்பது தெளிவு.

**பகல் நேரக்காவல்**

பெண்கள் பகல்நேரங்களில் தினைப்புனக்காவலில் ஈடுபட்டுள்ளனர். தானியக் கதிர்களைக் கொத்தித்தின்ன வரும் கிளியினங்களை ஓட்டுவதாக இப்பகல்நேரக் காவல் அமைந்தது.

**இரவு நேரக்காவல்**

ஆண்கள் இரவு நேரக்காவலில் ஈடுபட்டுள்ளனர். முயல், பன்றி, யானை போன்ற விலங்குகளிடமிருந்து தானியங்களைப் பாதுகாத்தல் பொருட்டு இவர்கள் இரவு நேரங்களில் காவல் புரிந்தனர். கொள்ளிக்கட்டையை எறிதல், பொறி வைத்து விலங்குகளைப் பிடித்தல், வெண்காழ் தடி கொண்டு விலங்குகளை விரட்டுதல் ஆகிய செயல்கள் யாவும் கடினமானவை. ஆகவே ஆண்கள் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

**யானைகளிடம் இருந்து தினைக்கதிரைப் பாதுகாக்கும் முறை**

நள்ளிரவில் தினைப்புனக்காவலில் ஈடுபட்ட கானவர்கள் பரண்மேல் இருந்து கவண்கல்லை வீசி யானைகளை விரட்டினர் என்பதை,

*''கனமழை பொழிந்த கான்படி யிரவில்*
*தினைமேய் யானை இனனிரிந்து ஓடக்*
*கல்லுயர் கழுதில் சேணோன் எறிந்த*
*வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென''– (அகநா.392:12-15)*
*''...................... புலம் படர்ந்து*
*இரவின் மேயல் மரூஉம் யானைக்*
*கால்வல் இயக்கம் ஒற்றி, நடுநாள்*
*உரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்*
*கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்*
*உடுஉறு கணையின் போகி''– (அகநா.292:7-12)*

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. எரிகொள்ளியை வீசி யானையினை விரட்டியுள்ளனர் என்பதை,

*''சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி*
*வான மீனின் வயின்வயின் இமைக்கும்''– (குறுந்.150:1-2)*
*''ஏனலஞ் சிறுதினை காக்கும் சேணோன்*
*ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை*
*மீன்படு சுடரொளி வெரூஉம்*
*வான்தோய் வெற்பன் மணவா ஊங்கே''– (குறுந்.357:5-8)*

என்ற பாடலடிகள் சுட்டும். இவை பரண் மேல் இருந்து கொளுத்தி எறிந்த நறிய புகையினை உடைய விடுகொள்ளிகள் கண்டு யானைகள் அஞ்சி தினைப்புனத்தை விட்டுச் சென்றதை உணர்த்துகின்றன.

**பன்றிகளிடம் இருந்து தினைக்கதிரைப் பாதுகாக்கும் முறை**

மலை நெல்லைக் கவரும் பன்றிகளை வில்லை விடுத்துக் காத்துள்ளனர். என்பதை,

*“சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்*
*துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி*
*ஐவனம் கவரும் ..................”– (ஐங்.267:1-3)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். திணைப்புனத்தை மேய வரும் பன்றியைப் பிடிக்க பொறி வைக்கப்பட்ட செய்தியை,

*“எய்ம்முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின்*
*செய்யும் மேவல் சிறுகட்பன்றி*
*ஓங்கு மலை வியன் புனம் படீஇயர் வீங்குபொறி*
*நூழை நுழையும் பொழுதில்....”– (நற்.98:1-4)*

என்னும் அடிகள் உணர்த்தும். திணையை உண்ணவரும் பன்றியைப் பிடிப்பதற்காகப் புனத்திற்குரியவன் இணைத்திருந்த ‘பெருங்கல் அடாஅர்’ என்னும் எந்திரத்தில் ஒள்ளிய நிறமுள்ள வலிய புலி அகப்பட்ட காட்சியை,

*“தினை உண் கேழல் இரிய புனவன்*
*சிறுபொறி மாட்டிய பெருங் கல்அடாஅர்*
*ஒண்கேழ் வயப்புலி படூஉம்”– (நற்.19:1-3)*

என்பதில் அறிய முடிகிறது. இதில் வலிமை மிகுந்த புலி மாட்டும் என்பதால் எந்திரத்தின் தொழில்நுட்பமும் செய்திறமும் விளங்கும். இரவு நேரக் காவலின்பொழுது எரிசுடர் கொள்ளியை வீசியும் பன்றிகளை விரட்டியுள்ளனர்.

*“முதைச் சுவற் கலித்த மூரிச் செந்தினை*
*ஓங்கு வணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்*
*பகுவாய்ப் பல்லிப் பாடு ஓர்ந்து, குறுகும்*
*புருவைப் பன்றி வருதிறம் நோக்கி,*
*கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய*
*நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி.......”– (அகநா.88:1-7)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். சிறிய கண்களையுடைய பன்றியின் பெருங்கூட்டத்தை ஓட்டுவதற்கு முற்றிய திணைப்புனத்தைக் காவல் செய்பவர்கள் அனைவரும் காலத்தை எண்ணியிருந்து பெரிய ஊது கொம்பினை ஊதி ஒலி எழுப்புவர். இக்கருத்தை,

*“சிறுகட் பன்றிப் பெருநிரைகூடிய*
*முதைப்புனம் காவலர் நினைத்திருந்து ஊதும்*
*வன்புலக் காட்டு நாட்டதுவே”– (அகநா.94:9-12)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும்.

**முயல்களிடமிருந்து பயிரைப் பாதுகாக்கும் முறை**

முயல்கள் விளைநிலங்களில் குழித்தோண்டிப் பயிர்களை நாசம் செய்யும். இதனால் பயிர் விளைச்சல் குறையும். பயிரைக்காவல் செய்பவர் 'வெண்காழ்' என்னும் குறுந்தடியைப் பயன்படுத்தியுள்ளனர்.இதனை,

*''மாலை வெண்காழ் காவலர் வீச*
*நறும்பூம் புறவின் ஒடுங்குமுயல் இரியும்*
*புன்புல நாடன்...........''– (ஐங்.421:1-3)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும்.

**குருவியினங்களிடமிருந்து பயிரைப் பாதுகாக்கும் முறை**

குருவியினங்களை விரட்டும் தொழிலில் பெண்கள் ஈடுபட்டுள்ளனர்.தினைப்புனக்காவலாக இருந்தாலும் நெல்வயல் காவலாக இருந்தாலும் பகற்பொழுதில் காவலில் ஈடுபட்டுள்ளனர். பெண் யானையின் துதிக்கையைப் போன்ற கதிர்களையுடைய தினையை உண்ணவரும் கிளிகளை ஓட்டும் குறமகளிர் தம் கையால் புடைக்கும் குளிர் என்னும் கருவி ஒலித்தவழி அவ்வொலி பக்க மலைகளில் பட்டு எதிரொலிக்கும். இதனை,

*''.................................... சாரல்*
*பிடிக்கை அன்ன பெருங்குரல் ஏனல்*
*உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே*
*சிலம்பின் சிலம்புஞ் சோலை''– (குறுந்.360:4-7)*

என்ற பாடலடிகள்வழி அறிய இயலும். பசுமையான தாளினையுடைய சிவந்த தினையின் வளைந்த கதிர்களைக் கொண்ட அகன்ற இடத்தையுடைய பெரிய கொல்லையில் கழுத்தில் சிவந்த கோடுகளையுடைய கிளிகள் வந்துவீழும். அக்கிளிகளை ஓட்டிய செய்தியை,

*''பைந்தாட் செந்தினைக் கொடுங்குழல் வியன்புனம்*
*செந்நார்க் கிள்ளை நம்மொடு கடிந்தோன்''– (அகநா.242:5-6)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். வேளாண்மையில் பயிர்ப் பாதுகாப்பில் பெண்கள் குளிர் என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். இது விலங்குகளைப் பிடிக்கும் பொறிகளைப் போல் அல்லாது சிறிய வடிவில் கையால் இயக்கும் தன்மையில் அமைந்ததாகும். குளிர் என்னும் கருவியோடு தழல், தட்டை ஆகிய கருவிகளையும் பயன்படுத்தியுள்ளனர்.(குறிஞ்சிப்.41-44)

### தானியங்களைத் தூற்றுதல்

அறுவடை செய்து எடுத்த தானியங்களையும் அதன் தாள்களையும் தனித்தனியே பிரித்து எடுப்பதற்குத் தூற்றுதல் முறையைப் பின்பற்றியுள்ளனர். அவ்வாறு தானியங்களைத் தூற்றும் போது நல்ல தானியம் தனியாகவும் பதர் கூலங்கள் தனியாகவும் கீழே விழும். இவ்வாறு தானியங்களைத் தூற்றும் முறை,

*“மறந்து அவண் அமையாராயினும், கறங்கிசைக்*
*கங்குல் ஓதைக் கலிமகிழ் உழவர்*
*பொங்கழி முகந்த தாதில் நுண்துகள்,*
*மங்குல் வானின், மாதிரம் மறைப்ப*
*வைகுபுலர் விடியல் வைபெயர்த்து ஆட்டி”– (அகநா.37:1-5)*

என்ற பாடலடிகளில் பதிவாகியுள்ளது. உழவர்கள் இரவில் களத்தில் தங்கி இருள் புலர்கின்ற விடியற்காலத்தில் வைக்கோலைப் பிரித்து எடுக்கத் தூற்றியுள்ளனர். எடுத்துள்ளனர். விடியற்காலையில் காற்றின் வேகம் மிதமாக இருக்கும். அதே சமயம் வெயிலின் தாக்கம் குறைவு. எனவே, உடற்களைப்பு அதிகம் ஏற்படாமல் தூற்றுதல் தொழிலை விரைந்து முடிக்க ஏதுவாக அப்பொழுதினைத் தேர்ந்தெடுத்துள்ளனர். இச்செயல் சங்கத்தமிழரின் தொழில்நுட்ப அறிவை விளக்கும்.

### அறுவடைக்குப் பிறகு தானியத்தைப் பதப்படுத்துதல்

அறுவடை செய்த தானியங்களை மலையில் உள்ள பாறையில் காய வைத்துப் பதப்படுத்தியுள்ளனர். இத்தொழிலில் பெண்கள் ஈடுபட்டுள்ளனர். இதனை,

*“நிரைவளை முன்கை நேரிழை மகளிர்*
*இருங்கல் வியலறைச் செந்தினை பரப்பிச்*
*சுனைபாய் சோர்விடை நோக்கிச் ……”– (குறுந். 335:1-3)*

என்ற பாடலடிகள் மூலம் அறிய இயலும்.

### பயிரிடுமுறையில் தொழில்நுட்பம்

மண்ணின் வளம் பேணுதலுக்கும், வேளாண் விளைச்சலின் பெருக்கத்திற்கும் பண்டைத் தமிழர் பயிரிடுதலில் வெட்டி நடுதல், பயிர்சுழற்சி முறை, ஊடுபயிர்ச் சாகுபடி, தொடர்பயிர் சாகுபடி முதலிய வழிமுறைகளைப் பின்பற்றியுள்ளனர்.

**வெட்டி நடுதல்**

கரும்பு போன்றவைகளை வெட்டி நடவு செய்யும் முறை சங்க காலத்தில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதை,

*"கரும்புநடு பாத்தி அன்ன"– (குறுந்.262:7)*
*"கரும்புநடு பாத்திக் கலித்த ஆம்பல்"– (ஐங்.65:1)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும்.

**பயிர் சுழற்சி முறை**

நெல் பயிரிட்ட நிலத்தில் மீண்டும் நெல்லையே பயிரிடாமல் கரும்பு, வாழை போன்ற பயிர்களைப் பயிரிடுதலைப் பயிர்சுழற்சிமுறை என்பர் வேளாண் அறிஞர். இம்முறை நன்செய், புன்செய் இரண்டிற்கும் பொதுவானது ஆகும். மருதநிலத்தில் நெல்லையோ கரும்பையோ தொடர்ந்து பயிரிடும் பழக்கம் உழவர்கள்பால் இருந்ததில்லை. நெல்லையும் கரும்பையும் மாற்றி மாற்றிப் பயிரிட்டுள்ளனர். *'இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின் விளைகழை'– (அகநா.237:11)* என்பதால் நெல்விளையும் வயலில் கரும்பும் பயிரிடப்பட்டமை குறிப்பிடப்பட்டுள்ளது. அதேபோல, சுழற்சி முறையில் நெல், தினை போன்றவற்றிற்கு அடுத்து 'உழுந்து' பயிரிடப்பட்டதை,

*"பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்*
*ஊழ்ப்படு முதுகாய் உழையினங் கவரும்*
*அரும்பனி அற்சிரம் தீர்க்கும்"– (குறுந்.68:1-3)*

என்ற அடிகளும்,

*"இரும்பனிப் பருவத்து மயிர்க்காய் உழுந்து"– (நற்.89:5)*

என்ற அடியும் உணர்த்தும். இவற்றால் உழுந்து (உளுந்து) முன்பனிப் பருவத்தில் முதிர்ந்து அறுவடையாகியது என்பது புலனாகும். பருவத்திற்கேற்ற பயிர்களைச் சுழற்சி முறையில் பயிரிடும் வேளாண்துறை வளர்ச்சிக்கு 11-வது ஐந்தாண்டு திட்ட வரைவு அறிக்கையில் பரிந்துரைக்கப்பட்டுள்ள மற்றொரு அம்சம் மாற்றுப்பயிர் சாகுபடியாகும்' என்று வலியுறுத்துகின்றனர். வேளாண் அறிஞர்.[16] இப்பயிர்சுழற்சி முறைபற்றிச் சங்கத்தமிழர் நன்கு அறிந்திருந்தனர் என்பதும் அதனைச் செயல்படுத்தியுள்ளனர் என்பதும் விளங்கும்.

**ஊடுபயிர் சாகுபடி**

பொதுவாக, தனிப்பயிர் ஒன்றினை மட்டும் சாகுபடி செய்வதைவிட ஊடுபயிருடன் சாகுபடி செய்வது சிறந்ததாகும். நெற்பயிர் விளைச்சலில்

உளுந்து பயிரிடல், மணிலா விளைச்சலில் பருத்தி பயிரிடல் போன்ற பயிரிடு முறை ஊடுபயிர் சாகுபடிக்குச் சான்றாகும். இத்தகைய ஊடுபயிர் முறை அக்காலத்தே பயன்பாட்டில் இருந்ததை இலக்கியங்கள் காட்டுகின்றன. வன்புலமாகிய மேட்டுநிலத்தின் பயிராகிய தினையில் ஊடுபயிராக அவரையை விதைத்துள்ளனர். தினைக்கதிர்களைக் கொய்த பின்னர்தட்டை (தாள்) மட்டும் உள்ள வயலில் அவரையை விதைத்துள்ளனர். அவ்வாறு விதைக்கப்பட்ட அவரை தினையரிதாளில் படர்ந்து காய்க்கும். இதனை,

*''சிறுதினை கொய்த இருவி வெண்கால்*
*காய்ந்த அவரைப் படுகிளி கடியும்''– (ஐங்.286:1-2)*

என்ற அடிகளும்

*''பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகால்*
*கொழுங்கொடி அவரை பூக்கும்*
*அரும்பனி அற்சிரம்''– (குறுந். 82:4-6)*

என்ற அடிகளும் விளக்குகின்றன.

**தொடர்பயிர் சாகுபடி**

தொடர் பயிர் முறை என்பது வயலில் ஒரு பயிர் இருக்கும் பொழுதே அறுவடைக்கு வரும் நிலையில் அதைத் தொடர்ந்து வேறு பயிரை விதைத்துப் பயிரிடுதலாகும். நெல் விளைந்து அறுவடைக்குத் தயாராகி விட்ட நிலையில் சில நாட்களுக்கு உளுந்து, பாசிப்பயிறு முதலியவற்றை விதைத்து விடுவர். அறுவடை முடிந்ததும் ஒரு முறை உழவு செய்து விட்டால் அப்பயிர் நன்றாக முளைத்து வளர்ந்து நல்ல பலனைத்தரும். இம்முறை நன்செய் நிலங்களில் பண்டை நாளில் பெரிதும் பின்பற்றப்பட்டுள்ளன. இதனை,*'அரிகால் பெரும்பயிறு நிறைக்கும் ஊர' (ஐங்.47:3)* என்ற தொடரால் அறிய இயலும். அறுவடை முடிந்ததும் உழுது விதைத்த முறையை,

*''அரிகால் மாறிய அம்கண் அகல்வயல்*
*மறுகால் உழுத ஈரச் செறுவின்*
*வித்தொடு சென்ற வட்டி பற்பல*
*மீனொடு பெயரும் யாணர் ஊர''– (நற்.210:1-4)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும்.

**கூலியாட்களுக்கு உணவிடல்**

விதைக்கும் பொழுதும் களைபறிக்கும் பொழுதும் அறுவடைக் காலத்திலும் கூலியாட்களாக வேலை செய்யும் உழவர்களுக்கு நண்பகல் உணவாகக் கூழ் தரப்பட்டது. இதனை,

*"கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழிந்த*
*வல்லிலைக் குருந்தின் வாங்குசினை இருந்து"*
*– (அகநா.194:13-14)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இன்றும் வேளாண்மைத் தொழிலில் ஈடுபடும் கூலித் தொழிலாளிக்கு நண்பகல் உணவு வழங்கும் வழக்கம் தமிழகத்தில் பரவலாக வழக்கிலுள்ளது.

**வேனிற்காலத்தில் வேளாண்மை செய்யாமை**

வேனிற்காலத்தில் கோடையின் வெம்மை அதிகமாக இருக்கும். தண்ணீர்ப் பஞ்சம் நேரிடும். எனவே புன்செய் நிலத்தில் வாழும் குறிஞ்சி நில மக்களும் முல்லைநில மக்களும் வேளாண்மைத்தொழிலை விடுத்து ஓய்வு பெறுவர். இதனை,

*"உவரி யொருத்தல் உழாஅது மடியப்*
*புகரி புழுங்கிய புயனீங்கு புறவில்"– (குறுந்.391:1-2)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். வேனிற்பருவத்து வெம்மையால் உழுபகடுகள் (எருதுகள்) உழுதொழிலின்றிக் கொட்டில்களில் சோம்பிக்கிடந்தன. நீரின்றிப் பட்டுப்போன கானகத்தில் சிறிய பூ அணிந்த கூந்தலையுடைய மகளிர் தம் தொழில் ஒழிந்து கூடிக் கூட்டம் அமைத்துப் பேசுதலை,

*"வறம்கொள வந்த கானத்து குறும்பூங்*
*கோதை மகளிர் குழூஉ நிரை"– (நற்.238:1-2)*

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

**மழை வேண்டிச் சடங்குகள்**

உணவு சேகரிக்கும் காலம், வேட்டைக்காலம், கால்நடை வளர்ப்புக் காலம், வேளாண்மை செய்த காலம் ஆகிய காலங்களில் இனக்குழு மக்கள் வாழ்க்கையில் மந்திரத்திற்குப் பெரும்பங்கிருந்தது. அவ்வினக் குழுமக்களின் பொருளாதார வாழ்க்கையை ஊக்குவிப்பதற்கு மந்திரம் பயன்பட்டது. மழை வளமும் நீர் வளமும் வேண்டிச் செய்யப்பட்ட சடங்குகளையும் வேளாண் விளைபொருட்களை வழிபாட்டில் பயன்படுத்திய வளமைச் சடங்குகளையும் சங்கப் பனுவல்களில் காண முடிகின்றது. வேண்டிய நேரங்களில் மழை பெய்யச்

செய்வதும் போதுமான சூழலில் மழையை நிறுத்தச் செய்வதும் இச்சடங்கின் அடிப்படை நோக்கம். இக்கருத்து சார்ந்த சடங்குகள் இன்றளவும் மக்களிடத்தில் பரவலாகக் காணப்படுகின்றன. இச்சடங்கு பெரும்பாலும் குறிஞ்சித்திணையில் தான் நடைபெற்றுள்ளது. மழை வேண்டிச் செய்யும் சடங்கை,

*"பணைத்த பகழிப் போக்கு நினைந்து கானவன்*
*அணங்கொடு நின்றது மலைவான் கொள்கென*
*கடவு ளோங்குவரை பேண்மார் வேட்டெழுந்து*
*கிளையொடு மகிழும் குன்ற நாடன்"– (நற்.165:2-5)*

எனும் பாடலடிகள் எடுத்துரைக்கும். இது வேட்டையில் அம்பு தப்பிப் போனதற்குக் கடவுளின் கோபமே காரணம் எனக் கருதிய கானவன் கடவுளின் கோபத்தைப் போக்க மழை பெய்ய வேண்டியதையும் மழை பெய்ததையும் காட்டுகிறது. இவ்வாறே,

*"குன்றக் குறவ னார்ப்பி னெழிலி*
*நுண்ப லழிதுளி பொழியு நாட"– (ஐங்.251:1-2)*

எனும் பாடலடிகளில் மழை வேண்டிய வளச்சடங்கு சுட்டப்பட்டுள்ளது. குறவன் மழை வேண்டிக் கடவுளை வழிபட்டு ஆரவாரித்தபோது மேகம் மழை பொழிந்த செய்தி கூறப்பட்டுள்ளது. இவை எல்லாம் நீர் ஆதாரப் பெருக்கச் செயற்பாடுகள் நடைபெறாத குறிஞ்சியில் புன்செய் வேளாண் சமுதாயத்தில் செய்யப்பட்ட சடங்குகளாகவே உள்ளன. நீர்வள ஆதாரப் பெருக்கம் நீர்நிலைப் பெருக்கம், நீரைத்தடுத்துத் தேக்கி வைத்தல் போன்ற செயற்பாடுகள் புன்செய் வேளாண்மைச் சமுதாயத்தில் நடைபெற்றாலும் மருதநில நன்செய்வேளாண் சமுதாயத்தில் இவ்வகைச் சடங்குகள் நடைபெற்றமைக்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் இல்லை.

ஒவ்வொரு நிலத்திற்கும் ஓர் அடிப்படையான உணவுப் பொருள் உண்டு. குறிஞ்சிக்குத் தினையும் முல்லைக்கு வரகும் மருதத்திற்கு நெல்லும் அடிப்படை உணவுப் பொருட்கள் ஆகும். இந்த அடிப்படை உணவுப்பொருட்கள் அந்தந்த நிலத்தின் வளக்குறியீடுகளாகக் கருதப்பட்டுள்ளன. வெறியாட்டுச் சடங்குச் சூழல்களில் தினை இடம் பெற்றுள்ளதை,

*"மறிக்குரல் அறுத்து தினைப்பிரப் பிரீஇச்*
*செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்*
*தோற்ற மல்லது நோய்க்குமருந் தாகா*
*வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்தி*
*பேஎய்க் கொளீஇயள் இவளெனப் படுதல்*

*நோதக் கன்றே"–(குறுந். 263:1-6)*

எனும் இப்பாடலடிகள் உணர்த்தும்.

*"செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇ*
*கட்டிற் கேட்கு மாயின் வெற்பில்*
*..........................*
*நெடுவே ளணங்கிற் றென்னுங்கொலதுவே"– (நற்.288:6-10)*

என்னும் குறிஞ்சித் திணைப்பாடல் கட்டுரைத்தலில் நெல் பயன்படுத்தப்பட்ட நிலையைக் காட்டுகிறது. மருதநிலச் சமுதாயத்தில் வளத்தின் அறிகுறியாக நெல் மணச்சடங்கில் பயன்படுத்தப்பட்டதை,

*"நீரொடு சொரிந்த ஈரித ழலரி*
*பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க*
*வதுவை நன்மணங் கழிந்த பின்றை"– (அகநா.86:12-17)*

எனும் இப்பாடலடிகள் எடுத்துரைக்கும். நீரும் நெல்லும் பயன்படுத்தப்பட்ட நிலை வாழ்வின் செழுமைக்கு அவை உதவ வேண்டும் என்ற வளமை நோக்கத்தையே வெளிப்படுத்துகிறது.

**நிலம் சார்ந்த பிற தொழில்கள்**

நிலத்தில் கிடைக்கும் இயற்கை வளங்களைப் பயன்படுத்திச் செய்யப்படும் தொழில்கள் நிலம்சார்ந்த பிற தொழில்கள் ஆகும். பருத்தியைக் கொண்டு நெசவுத் தொழிலும், களிமண்ணைக் கொண்டு மட்கலம் செய்தலும் நிலம் சார்ந்த தொழில்கள் ஆகும். அவ்வகையில் நால்வகை நிலத்திற்கும் உரிய தொழில்களாக நெசவுத் தொழில், சலவைத் தொழில், ஓவியத்தொழில், மட்கலத்தொழில், கிணறுவெட்டும் தொழில், கிணறு கட்டும் தொழில், சாணைக்கல்தொழில், கருப்பட்டித் தொழில், சங்கு அறுக்கும் தொழில், பொற் கொல்லர் தொழில், ஊதுஉலைத் தொழில், சிற்பத் தொழில், இசைக்கலைத் தொழில் ஆகியன அமைகின்றன.

**நெசவுத்தொழில்**

மனித வாழ்வில் உணவினை அடுத்ததாக இன்றியமையாத ஒன்றாகக் கருதப்படுவது ஆடையாகும். பழங்கால மக்கள் தொடக்கத்தில் இலை, தழை, மரப்பட்டை விலங்குகளின் தோல்களை ஆடைகளாகப் பயன்படுத்தியுள்ளனர். மக்களின் அறிவு வளர்ச்சியால் பஞ்சினை நூலாக்கி நூலிலிருந்து ஆடைகளைத் தயாரித்து உடுத்தியுள்ளனர்.

மரப்பட்டையின் நாரில் தயாரித்த உடையினை மலையில் வாழ்கின்ற குறவர்கள் உடுத்தியுள்ளனர். பஞ்சைக் கொண்டு நெய்ததை,

*“எ∴குறு பஞ்சிற் றாகி வைகறை”– (நற்.247:4)*

என்பர் பரணர். ஆடையில் பூ வேலைப்பாடு செய்து நெய்து உடுத்தியதனை,

*“........................................................ நிலம் தாழ்ந்த*
*பூங்கரை நீலம் தழீஇ தளர்பு ஒல்கி”– (கலித்.115:13-14)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். நூற்புக்கருவி பலவற்றில் நூற்ற நூலைப் பின்னர் பெரிய ராட்டினத்தில் நூற்பார்கள். அதனை எடுத்து நீளமாக விரிப்பர். பசையிட்டுத் தோய்த்து நூலுக்கு மெருகு ஏற்றுவார்கள். இவ்வாறு நெசவு நெய்வதற்கு ‘பா’ என்றும் ‘பாவாற்றுதல்’ என்றும் குறிப்பர். இதனை,

*துகில் ஆய் செய்கைப் பாவிரிந் தன்ன*
*வெயில் அவிர்பு நுடங்கும் வெவ்வெங் களரி”– (அகநா.293:4-5)*

என்ற பாடலடிகள் சுட்டும். சங்கத்தமிழர்கள் பருத்திச் செடியின் பஞ்சை நூலாக்கி அதனை ஆடையாக நெய்யவும் கற்றிருந்தனர்.

**சலவைத் தொழில்**

சங்க காலத்தில் மக்கள் வெளுத்த ஆடையை உடுத்தும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். அத்தொழில் புரிவதற்கெனத் தனி மக்களும் இருந்துள்ளனர். இதனை,

“*வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த*
*புகார்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு”– (நற்.90:3-4)*

என்ற அடிகள் காட்டும். இதில் பழமையான ஊரில் பல மக்களும் வாழ்வதனால் அவர்களுடைய ஆடைகளைத் துவைக்கும் செயலிலிருந்து ஓய்வு இல்லாத வறுமையுற்ற புலைத்தி வாழ்ந்தாள் என்று சலவைத் தொழில் புரிந்தோரை அடையாளப்படுத்தியுள்ளார் அஞ்சில் ஆந்தையார்.

**வெளுக்கும் முறை**

உடையை வெளுக்க உவர்மண்ணைப் பயன்படுத்தியுள்ளனர். காழியர் என்னும் துணிச்சலவை செய்பவர்க்குரிய உவர்மண், நீர்வரத்துக் குன்றி வெம்மையால் களர் நிலம் போல் ஆயிற்று,என்பதில் இச்செய்தி இடம்பெற்றுள்ளது. இதனை,

*“...................... காழியர்*
*கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப்பு ஒழியக்*
*களரி பரந்த கல்நெடு மருங்கின்”– (அகநா.89:7-9)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். உவர்மண் என்பதைத் தற்காலத்துப் பேச்சு வழக்கில் ஒழு மண் என்பர்.

**கஞ்சிப் பசையிடுதல்**

ஆடையை வெளுக்கும் புலைத்தி அவ்வாடையைக் கஞ்சியில் இட்டு வெளுக்கும் முறையினை மேற்கொண்டுள்ளாள். இதனை,*“பசைகொல் மெல்விரல் பெருந்தோள் புலைத்தி”– (அகநா.34:11)*என்ற பாடலடிகளில் சுட்டுவர் மதுரை மருதன் இளநாகனார். ஆடைகளிலே ஊட்டப்பெற்ற கஞ்சிப் பசையினைக் கரைத்து விடும் மெல்லிய விரல்களையும் பெரிய தோள்களையும் உடையவள் ஆடை வெளுப்பவள் என்னும் கருத்து இதில் சுட்டப்பட்டுள்ளது.

**ஓவியத் தொழில்**

ஓவியத்தொழில் புரிவோர் திறன்மிக்கவர்கள் என்பதனைப் பாலைபாடிய பெருங்கடுங்கோ,

*“ஓவ மாக்கள் ஒள்அரக்கு ஊட்டிய*
*துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி”– (நற்.118:7-8)*

எனப் பாடுவர். தாம் மேற்கொள்ளும் தொழிலில் வல்லவர்களாக விளங்கக்கூடிய ஓவியர்கள் ஒள்ளிய அரக்காகிய எழுதுகோல் கொண்டு வரைந்த திறம் இதில் சுட்டப்பட்டுள்ளது.

*“புனை சுவர்ப்*
*பாவை அன்ன பழிதீர் காட்சி”– (நற்.252:6-7)*

என்ற அடிகளில் சுவரில் எழுதப்பெற்ற பாவை ஓவியத்தைக் குறிப்பிடுவர் அம்மெய்நாகனார். இதனால் ஓவியத்தொழில் பதிவு செய்யப்பட்டுள்ளமை புலனாகும்.

**மட்கலத் தொழில்**

மட்கலத் தொழிலில் வடிவமைக்கப்பட்ட ‘தசும்பு’ எனும் மண் பானையினை,*“சுடுமண் தசும்பின் மத்தந் தின்ற”–(நற்.84:6)*என்ற அடி உணர்த்தும். இதில் மண்ணால் செய்து சுடப்பட்ட நல்ல மண்பானையில் தயிரினைக் கடைந்து வெண்ணெய் எடுத்த திறம் சுட்டப்பட்டுள்ளது.

**கிணறு வெட்டும் தொழில்**

கோவலர்கள் கணிச்சி என்னும் கருவிகொண்டு கிணறுகளை வெட்டியுள்ளனர். இதனை,

*“பரல்மண் சுவல முரண்நிலம் உடைத்த*

*வல்வாய்க் கணிச்சி கூழ்ஆர் கோவலர்*
*ஊறாது இட்ட உவலைக் கூவல்''– (அகநா.21:21-23)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. கணிச்சி என்னும் இக்கருவி தற்காலத்தில் குந்தாலி என்று வழங்கப்படுகிறது

**கிணறு கட்டும் தொழில்**

கிணற்றினை வெட்டி எடுத்த பிறகு கருங்கல்லைச் சமச்சீரான வடிவில் அறுத்தெடுத்து அவற்றைக் கொண்டு கிணற்றிற்குச் சுற்றுச்சுவர் எழுப்பியுள்ளனர். இதனை,

*''கல்லறுத்து இயற்றிய வல்உயர்ப் படுவில்*
*பார்உடை மருங்கின் ஊறல் மண்டிய''– (அகநா.79:3-4)*

என்ற பாடலடி உணர்த்தும். கட்டுச்சோறு கட்டிக் கொண்டு சென்று கிணறு வெட்டும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். அவர்கள் வெட்டிய கிணற்றில் ஊறிய நீரினைப் பசுக்கூட்டம் குடித்தலை,

*''தோட் பதன் அமைத்த கருங்கை ஆடவர்*
*கனை பொறி பிறப்ப நூறி வினைப் படர்ந்து*
*..............................................................................*
*நனந்தலை அழுவம் நம்மொடு துணைப்ப''– (அகநா.79:1-9)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும்.

**சாணைக்கல் தொழில்**

சாணைக்கல் செய்தல் என்னும் சிறு தொழில் சங்க காலத்தில் நடைபெற்றுள்ளது. இதனை,

*''சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய*
*கற்போல் நாவினே னாகி மற்றுஅது''– (அகநா.356:9-10)*
*''சிறு காரோடன் பயினொடு சேர்த்திய*
*கல் போல் பிரியலம்............''– (அகநா.1:4-7)*

என்ற பாடலடிகள் காட்டும். காரோடன் அரக்கொடு சேர்த்து சாணைக்கல் செய்த முறை குறிப்பிடப்பட்டுள்ளது.

**கருப்பட்டித் தொழில்**

கரும்பினைப் பிழிந்து சாறு எடுத்து கருப்புக் கட்டி செய்துள்ளனர். இனிய பூமணம் கமழும் கரும்பின்கட்டிக் கற்கண்டு பயன்பாட்டில் இருந்ததை,

*''தேம் பூங்கட்டி என்றனீர் இனியே''– (குறுந்.196:2)*

என்ற பாடலடி உணர்த்தும்.

**சங்கு அறுக்கும் தொழில்**

தனக்குரிய யாகம் செய்யாத ஊர்ப்பார்ப்பான் தாழ் நிலையடைந்து அரம் கொண்டு சங்கு அறுக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளான். இதனை,

*“வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த*
*வளைகளைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன”– (அகநா.24:1-2)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதனால் சங்கின் நுனியாகிய கொழுந்தினை அறுத்து வளையல் செய்தமை புலப்படுகிறது.

**கம்மியர் தொழில்**

கம்மியன் பொறி அற்றுப்போன (உடைந்து போன) அணிகலனை இணைத்து, சந்து ஊதிக் கூட்டுதற்கு மண்கட்டுவர். இத்தொழில் நுட்பம் பற்றி,

*“உறுவினைக்கு அசாவா உலைவில் கம்மியன்*
*பொறி அறுபிணைக் கட்டும் துறை மணல்கொண்டு*
*வம்மோ தோழி மலி நீர்ச் சேர்ப்ப*
*பைந்தழை சிதைய கோதை வாட*
*நன்னர் மாலை நெருநை நின்னொடு*
*சிலவிளங்கு எல் வளை ஞெகிழ*
*அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்து எனவே”– (நற்.363:10)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். தலைவனுடன் உடன் தலைவி கடற்கரையில் அலவன் (நண்டு) ஆட்டி விளையாடியதில் அவளது காற் சிலம்பு உடைந்து போயிற்று. அச்சிலம்பினைக் கட்டுவதற்கு நெய்தல் துறையிலுள்ள மணலைக் கொண்டு வருவாயாக என்று பாடலடி கூறுவதாய் அமைந்துள்ளது. வெண்கலம், செம்பு போன்ற உலோகங்களை வடித்து, தங்களுக்குத் தேவையான வடிவங்களில் பாத்திரங்களாக உருவாக்கிப் பயன்படுத்தியதனை,

*“......................................... கம்மியர்*
*செம்புசொரி பானையின் மின்னிஎவ் வாயும்”– (நற்.153:2-3)*

எனும் அடிகள் உணர்த்தும். இதில் செம்பினால் செய்யப்பட்ட பானையை வடித்த தொழிற்திறத்தைத் தனிமகனார் சுட்டியுள்ளார்.

**கொல்லர் தொழில்**

தேர்களில் கட்டப்பட்ட மணிகள்,இரும்பை உருக்கி அரக்கினால் (மெழுகு) வடிவமைக்கப்பட்ட அச்சுக்களில் ஊற்றி உருவாக்கப்பெற்றன.

*“............................. மெழுகான்*
*றூதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி*
*மரம்பயில் இறும்பின் ஆர்ப்பச் சுரனிழிபு”– (குறுந். 155:3-5)*

என்ற பாடலடிகள் சங்ககால மக்கள் ஊது உலைத்தொழிலிலும் ஈடுபட்டனர் என்பதைத் தெளிவாக்குகின்றன. கொல்லர்கள் இரும்பின் பயனைக் கண்டு அதிலிருந்து பல்வேறு கருவிகளைச் செய்தனர். உழவர், தச்சர், பரதவர் எனப் பல தொழில்கள் செய்வோர் இருந்தாலும் அவர்களுக்குத் தேவையான கருவிகளைக் கொல்லன் வடித்துக் கொடுத்தான்.

*''இரும்பு செய் கொல் எனத் தோன்றும் ஆங்கண்''– (அகநா.72:6)*
*''இரும்பு வடித்தன்ன கருங்கைக் கானவன்''– (அகநா.172:6)*

என்ற அடிகள் சங்க கால மக்கள் இரும்பு கொண்டு கருவிகள் செய்துள்ளனர் என்பதைப் புலப்படுத்துகின்றன.

**சிற்பத் தொழில்**

கல்லில் உருவம் சமைப்பதற்கு முன்பாகச் சுதையாலும் மரத்தாலுமே உருவங்கள் செய்யப்பட்டன. சங்ககாலத்தில் நிலைத்த பொருளான பொன்னால் உருவம் செய்திருக்கிறார்கள். பொன்னால் செய்யப்பட்ட பாவையைப் பற்றி,

*''பொன் செய் பாவை வயிரமொடு ஆம்பல்''– (அகநா.127:8)*
*''தாஇல் நன்பொன் தைஇய பாவை''– (அகநா.212:1)*

என்று குறிப்புகள் பதிவாகியுள்ளன. அரசனது ஆணையை மீறியவர்கள் தம் நிறையுள்ள பொன்னால் செய்யப்பெற்ற பாவையைத் தண்டனையாக இறுத்தல் வழக்கமாகும். இதனை,

*''ஒன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை*
*பொன்செய் பாவை கொடுப்பினும் கொள்ளான்''– (குறுந்.292:3-4)*

எனும் பாடலடிகள் குறிப்பிடும். இதனால் பொற்சிலை வார்த்தல் தொழில் இருந்தமை புலனாகும். உலோகத்தினால் எந்த உருவைச் செய்ய வேண்டுமோ அந்த உருவைப் போல அரக்கினால் செய்து கொள்வது வழக்கம். இவ்வாறு அரக்கால் செய்த பாவை வெயில்பட்டு உருகுவதை ''செய்வுறு பாவையன்ன'' (குறுந்.195:6) என்னும் பாடலடி குறிப்பிடுகிறது. சங்க காலத்தில் சிலை செய்யும் படிமக்கலை வழக்கில் இருந்ததைத் தமிழ் இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

சங்க கால மக்கள் செம்பு, இரும்பு, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு புழங்குபொருட்களும் அணிகலன்களும் செய்து பயன்படுத்தியுள்ளனர்.

**இசைக்கலைத் தொழில்**

சங்கத்தமிழரின் வாழ்வியல் செய்திகளைப் பதிவு செய்துள்ள சங்க இலக்கியங்கள் இசைக்கலைஞர்கள் பற்றிய செய்திகள் பலவற்றையும்

வெளிப்படுத்தியுள்ளன. இசைக் கலைஞர்கள் இரப்பவராகவே வாழ்ந்துள்ளனர். இசைக் கருவிகளை இசைத்தும் பண்ணோடு பாடியும் ஆடல் நிகழ்த்தியும் தம்முடைய கலைத்திறனைப் புலப்படுத்தியுள்ளனர். அரசர்களோடு நெருங்கிப் பழகியவர்களாகவும் மக்களோடு இரண்டறக் கலந்து வாழ்ந்தவர்களாகவும் இருந்துள்ளனர். தொழில்முறைக் கலைஞர்களாகத் தம் கலைத்திறனை வெளிப்படுத்தியுள்ளனர்.

**தொழில் முறைக் கலைஞர்கள்**

பாணர் மரபினரைச் சார்ந்த இனக்குழுவினர் இசைத் தொழிலை மேற்கொண்டவர்களாக விளங்கியுள்ளனர். அவ்விசைக் குழுவில் அகவுநர், இயவர், கிணைவர், கோடியர், வயிரியர், முழவன், ஆடுமகள் (விறலி), பாண்மகள் எனப் பாண்மரபின் இனக்குழு மக்களைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

**அகவுநர்**

அகவும் ஓசையால் பாடுநர் என்று குறிக்கப்பெறுகின்றனர். வாய்பாட்டுப் பாடுபவரை அகவுநர் எனக் குறிப்பிடுவர். சங்க கால அரசன் அகவுநரைப் புரந்தமையால் அகவுநர் பெருமகன் என்று அழைக்கப்படும் செய்தியினைப்*''புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்''– (அகநா.113:3)*என்ற பாடலடி புலப்படுத்தும். அகவுநர் பாடுவதோடு இசைக் கருவிகளையும் இசைக்கக் கூடியவர்கள் ஆவர். அவர்கள் பறை, குழல், முழவு, யாழ், முதலிய இசைக்கருவிகளை இசைத்துள்ளனர். இச்செய்தியினை,

*''விசிபிணித்து யாத்த அரிகோல் தெண்கிணை*
*இன்குரல் அகவுநர் இரப்பின்''– (அகநா.249:3-4)*

*''நுண்கோல் அகவுநர்ப் புரந்த பேரிசை''– (அகநா.152:4)*

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன. பாடும் மரபையுடைய அகவுநர் அரசனிடம் யானையைப் பரிசாகப் பெறும் தகுதியுடையவர்கள் என்னும் செய்தியினை,

*''தேம்முதிர் சிமையக் குன்றம் பாடும்*
*நுண்கோல் அகவுநர் வேண்டின் வெண்கோட்டு*
*அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்''– (அகநா.208:2-4)*

எனும் அடிகள் இயம்பும். அகவுநர் அரசனைக் கண்டு பரிசில் பெறச் செல்லும் பொழுது தம் துணையுடன் செல்லும் வழக்கமும் இருந்தமையை,

*''இருங்கழை இறும்பின் ஆய்ந்து கொண்டு அறுத்த*

*நுணங்கு கண்சிறு கோல் வணங்குஇறை மகளிரொடு*
*அகவுநர்ப் புரந்த அன்பின் கழல்தொடி''– (அகநா.97:9-11)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதில் அகவுநர் அரசருக்கு அருகிலிருந்து அரசனை வாழ்த்திப் பாடுவதோடு இசைக்கருவிகளையும் இசைத்துப் பாடிப் பரிசில் பெறும் வழக்கமுடையவர்கள் என்னும் செய்தி இடம் பெற்றுள்ளது.

**இயவர்**

இயவர் என்பவர் தட்டை, தண்ணுமை, குழல் ஆகிய இசைக்கருவிகளை இசைக்கும் தொழிலை மேற்கொள்பவர்கள் ஆவர். இதனை,

*''தட்டைத் தண்ணுமைப் பின்னர் இயவர்*
*தீங்குழல் ஆம்பலின் இனிய இமிரும்''– (ஐங்.215:3-4)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். ஆமையைப் போன்ற தெளிவான கண்ணையுடைய கிணைப் பறையைச் சம்பங்கோழியைப் போன்ற வாத்தியக்காரன் இசைப்பான் என்னும் செய்தியை,

*''கம்புள் இயவன் ஆக விசிபிணித்*
*தெண்கண் கிணையின் பிறழும் ஊரன்''– (அகநா.356:3-4)*

என்னும் அடிகள் சுட்டும். இயவர் மன்னருக்கு அருகிலிருந்து இசைக்கருவிகளை இசைக்கக் கூடியவர் ஆவர். இதனை,'மன்னர் இயவரின் இரங்கும் கானம்'– (ஐங்.425:2) எனும் அடி எடுத்துரைக்கும். இயவர் போர்க்களங்களில் ஆம்பல் பண்ணினைக் குழலில் இசைப்பார்கள் என்பதை,

*''இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்*
*ஆம்பல் அம்குழலின் ஏங்கி''– (நற்.113:10-11)*

என்ற அடிகள் புலப்படுத்தும். இவற்றால் இயவர் என்னும் இனக்குழுவினர் அரசனை அண்டி வாழும் இசைக்கலை மரபினர் என்பதை உணரமுடியும்.

**கோடியர்**

கோடியர் என்பவர் பாணர் மரபினர்களுள் ஒருவர். வள்ளலின் புகழைத் தொகுத்துச் சொல்லும் கோடியர் இசைக்கும் தூம்பு என்னும் இசைக்கருவியின் இசையைப் போல யானையின் பிளிறல் மலைப்பக்கத்தே எதிரொலிக்கும் என்று இக்கோடியரின் இசைக்கும் திறனைப் பாடுவர். இதனை,

*''ஓய்களிறு எடுத்த நோயுடைய நெடுங்கை*
*தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும்''– (அகநா.111:8-9)*
*''அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்*
*பெருங்கல் மீமிசை இயம் எழுந்தாங்கு*
*வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை*

*சூர் புகல் அடுக்கத்து மழை மாறு முழங்கும்''– (அகநா.359:8-11)*

எனும் அடிகள் எடுத்தியம்பும். கோடியர் இசைக்கும் யாழ் ஒலி வேடன் வலையில் அகப்பட்ட கனத்துள் எனும் பறவை கத்தும் ஒலியை ஒத்திருக்குமென்பதை,

*''பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ*
*நெடுங்கால் கணத்துள் அம்புலம்பு கொள் தெள்விளி*
*சுரம்செல் கோடியர் கதுமென இசைக்கும்*
*நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்''– (நற்.212:1-4)*

எனும் அடிகள் புலப்படுத்தும். கோடியர் இசைக்கும் முழவின் ஒலி அருவியோசையை ஒத்திருக்கும் என்பதை,

*''பெருவரை மிசையது நெடுவெள் ளருவி*
*முதுவாய்க் கோடியர் முழவின் ததும்பி''– (குறுந்.78:1-2)*
*''ஆடு மயில் முன்னது ஆக, கோடியர்''– (அகநா.352:4)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். கோடியர், ஆடுகளம் அமைத்து சிறப்பாக ஆடுபவர்கள்; யாழ், முழவு, பறை முதலான இசைக்கருவிகளைத் திறம்பட இசைப்பவர்கள். அரசனை வாழ்த்திப் பாடுபவர்கள். அதன் பலனாக சிறிய பரிசுகள் முதல் ஊர் வரையிலும் பல்வேறு பரிசுகளைப் பெற்றுள்ளனர்.

**வயிரியர்**

இசைத் தொழிலில் ஈடுபட்டவர்களில் வயிரியரும் ஒருவராவர். இவர்கள் பாணர் குழுவில் இடம் பெற்றுள்ளனர். முழவு என்னும் இசைக்கருவியை முழக்கியுள்ளனர். இதனை,

*''புலம்புரி வயிரியர் நலம்புரி முழவின்''– (நற்.100:10)*
*''செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை*
*மண்ஆர் முழவின் கண்ணகத்து அசைத்த''– (அகநா.155:13-14)*
*'வழைஅமல் அடுக்கத்து வலன்ஏர்பு வயிரியர்*
*முழவு அதிர்ந்தன்ன முழக்கத்து ஏறோடு''– (அகநா.328:1-2)*

*''.......................... வயிரியர்*
*இன்இசை ஆர்ப்பினும் பெரிதே''– (அகநா.45:11)*

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

**முழவன்**

முழவு என்னும் இசைக்கருவியை இசைப்பவன் முழவன் ஆவான். விழா நடைபெறும் பழமையான ஊரில் விறலிக்குப் பின்னே நின்று முழவினை இசைத்துள்ளான்.இதனை,

*''விழவு கொள் மூதூர் விறலி பின்றை*
*முழவன் போல அகப்படத் தழீஇ''– (அகநா.352:5-6)*

என்னும் அடிகள் விளம்புகின்றன.

**ஆடுமகள் (விறலி)**

ஆடுமகள் பாண் மரபைச் சேர்ந்தவள். இவளுக்கு விறலி என்னும் பெயரையும் சங்கப்பனுவல் குறிப்பிடுகிறது. இவள் மூங்கில் கழிகளுக்கு மத்தியில் கட்டப்பட்ட கயிற்றினிடையே பல்வேறு இசைக்கருவிகளின் இசைக்குத்தக்க ஆடுவாள். மயில் ஆடுவதைப் நடுங்கி ஆடுவாள் என்னும் செய்தியை,

*''அறியா துண்ட மஞ்ஞை ஆடுமகள்*
*வெறியுறு வனப்பின் வேர்த்துற்று நடுங்கும்''– (குறுந்.105:3-4)*

என்ற அடிகள் விளக்கும்.

**பாணர் இனக்குழு வாழ்க்கை**

சங்க காலத்தில் பாணர் இனக்குழு மக்கள் புலம் பெயரும் வழக்கம் உடையவர்களாக வாழ்க்கை நடத்தினர். அவ்வாறு செல்லும் பொழுது தம்முடைய இசைக்கருவிகளையும் பிற பொருட்களையும் சுருக்கிக் கட்டி, காவடிகளில் கொண்டு செல்வர். அவ்வாறு கட்டிச் செல்லும் பை கலப்பை எனப்பட்டுள்ளது. கலப்பையர் எனும் சொல் பொதுவாக இசைவாணர்களைக் குறிப்பதாகும்.கூத்தர் சிறிய பல இசைக்கருவிகளுடன் பல ஊர்களுக்குச் சென்று கூத்தாடுவர். கூத்து முடிந்தவுடன் பல வாத்தியங்கள் உடைய பைகளை உடையவராய் அவ்விடத்தை விட்டுப் பெயர்வர். இதனை,

*''........................................ சிறுபல் இயத்தொடு*
*பல்ஊர் பெயர்வனர் ஆடி ஒல்லென*
*தலைப்புணர்த்து அசைத்த பல் தொகைக் கலப்பையர்''*
*– (அகநா.301:20-22)*

என்னும் அடிகள் உணர்த்தும். போர்க்களத்தும் பாசறையிடத்தும் பாணர்கள் தங்கியிருந்து வீரர்களை ஊக்குவிப்பது முதலான செயல்களைச் செய்து வந்தனர். எவ்வி என்னும் குறுநிலத்தலைவன் விழுப்புண் பட்டுப் போர்க்களத்தில் வீழ்ந்த பொழுது வணங்குதற்குரிய யாழின் வளம் பொருந்திய வளைந்த கோட்டை, பாணர்கள் ஒடித்துப் போட்டனர் என்னும் செய்தியை,

*''எவ்வி வீழ்ந்த செருவில் பாணர்*
*கைதொழு மரபின் முன்பரிந்து இடூஉப் பழிச்சிய*

*வள்உயிர் வணர் மருப்பு அன்ன”– (அகநா.115:8-10)*

என்னும் அடிகள் குறிப்பிடுகின்றன. பாணர்கள் எளிய வாழ்வு வாழ்ந்து வந்த போதிலும் மக்களை மகிழ்விக்கும் செயலைச் செய்து வந்தனர். இவர்களின் வருகையை மக்கள் விரும்பினர். அரசர்களிடமும், தலைவர்களிடமும், மக்களிடமும் பெறும் பரிசில் பொருட்களைக் கொண்டு தம் வாழ்க்கையை நடத்தினர்.

**கள்வர் தொழில்**

மழையின்றி வறண்ட காலத்தில் ஒரு சில இனத்தவர் பொருள் தேடி வேற்றுநிலம் சென்றனர். ஒரு சிலர் களவுத் தொழிலில் ஈடுபட்டனர். அவர்களை எயினர், கள்வர் எனச் சங்கப் பனுவல் குறிப்பிடுகிறது. ஆடும் பொழுதெல்லாம் ஒலிக்கும் அழகிய கையினையுடைய அச்சத்தைச் செய்யும் துடியினையும் வளைந்த வில்லினையும் உடைய மறவர்கள் அவ்வழிச் செல்வோரை அலறத் தாக்கி அவருடைய கைப்பொருளைக் கொள்ளும் நோக்குடன் சுரவழியில் ஈடுபட்டதை,

*“ஆடுதொறு கனையும் அவ்வாய்க் கடுந்துடிக்*
*கொடுவில் எயினர் கோட்சுரம் படர”– (அகநா.79:13-14)*

என்ற அடிகள் விளக்கும். ஆறலை கள்வர் வில்லம்பு கொண்டு சுரவழி செல்வோரை மாய்த்ததையும் இரும்பைத் தலையிடத்தே கொண்ட தங்களின் அம்புகளின் கூர்மையை அறிய நகத்தால் அவற்றின் நுனியை நெருடுவதையும், கள்ளிச்செடிகள் நிறைந்தப் பகுதியில் கள்வர்கள் மறைந்து வாழ்ந்து தாக்கியதையும்,

*“கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்’– (குறுந்.12:3)*
*“.................................... கள்வர்*
*பொன்புனை பகழி செப்பங் கொண்மார்*
*ஊகிர்நுதி புரட்டும் ஓசைபோலச்*
*செங்காற்பல்லி தன்துணை பயிரும்*
*அங்காற் கள்ளி யம்காடு இறந்தோரே”– (குறுந்.16:1-5)*

என்னும் பாடலடிகள் வெளிப்படுத்தும்.

## தொகுப்புரை

- மனித இனத்தின் தொழில் முறைப் பரிணாமவளர்ச்சியை வேட்டையாடி உணவு சேகரித்தல், கால்நடை வளர்த்தல், வேளாண்முறை என மூன்றாகப் பாகுபடுத்துவர் மானிடவியலாளர். அவ்வகையில் சங்க காலத்திலும் இத்தகைய தொழில் முறைப் பரிணாமவளர்ச்சி நிகழ்ந்துள்ளமையைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.
- கிழங்கு அகழ்ந்து எடுத்தல், தேன் எடுத்தல் என உணவு சேகரிப்பு முறைகள் சங்ககால மக்களிடம் வழக்கத்தில் இருந்துள்ளன. பன்றி, முயல், மான், யானை, உடும்பு எனப் பல்வேறு விலங்குகளை வேட்டையாடியுள்ளனர். வேட்டைக்கு நாய்களைத் தமக்கு உதவியாகப் பழக்கி வைத்துக் கொண்டுள்ளனர். வேட்டையாடிய விலங்குகளின் மாமிசத்தைத் தம் இனக்குழுவினருக்குப் பகுத்துக் கொடுத்துள்ளனர். ஆண்பாலினர் மட்டும் வேட்டையாடுதலில் குழுவாக ஈடுபட்டுள்ளனர். தனிநபராகவும் வேட்டையாடியுள்ளனர். இத்தொழிலில் பெரும்பாலும் குறிஞ்சி, முல்லை நில மக்கள் ஈடுபட்டுள்ளனர்.
- வேட்டையாடுதலில் மானிடவியலாளர் பகுப்புப்படி மீன்பிடிதொழிலும் அடங்கும். பரந்துபட்ட கடற்பரப்பில் சுறாமீன் போன்றவற்றை ஈட்டி கொண்டு எறிந்து வேட்டையாடுதல் பரதவர் தொழில் ஆகும். பரதவர் பெரும்பாலும் கடலில் திமிலில் சென்றுஈட்டி, வலை ஆகியவற்றைக் கொண்டு வேட்டையாடினர். இரவில் மீன்வேட்டையின் பொழுது எரிகொள்ளியைப் பயன்படுத்தியுள்ளனர். பருவம் பார்த்து மீன்பிடித்தொழில் செய்துள்ளனர். இருள் நிறைந்த மறைநிலவு பொழுதில் கடலில் மீன்பிடிக்கச் செல்லவில்லை. மீன்வேட்டையில் சுறா, இறால், பலஇனமீன்கள் ஆகியவற்றைப் பிடித்துள்ளனர். ஈட்டிய மீனைத் தம் கடற்கரைப் பகுதியில் உள்ளவர்களுக்குப் பகுத்துக் கொடுத்துள்ளனர். பரதவர்கள் கரைவலையைப் பயன்படுத்திக் குழுவாக இணைந்து மீன்பிடித்தலில் ஈடுபட்டுள்ளனர். மீனை உலர்த்தும் தொழிலிலும் விற்கும் தொழிலிலும் பெண்கள் ஈடுபட்டுள்ளனர். கடலில் இறங்கி மீன்பிடிப்பது ஆண்கள் தொழில் எனத் தொழிற்பகுப்பு அடிப்படையில் செயல்பட்டுள்ளனர். மீனைப் பதமாக மரநிழலில் உலர்த்தி எடுப்பது

‘உணங்கல்’ எனப்பட்டுள்ளது.இவ்வழக்கு இராமேஸ்வரம், கன்னியாகுமரிப் பகுதி மக்களிடம் இன்றும் வழக்கில் உள்ளது. மீன் வேட்டை மட்டுமல்லாது கடல் நீரைப் பாத்தி கட்டி உப்பு விளைவித்துள்ளனர். உப்பு விற்கும் தொழிலை மேற்கொள்பவர்கள் உமணர் எனப்பட்டுள்ளனர். சங்கின் முத்துக் குளிக்கும் தொழிலில் ஆண்கள் ஈடுபட்டுள்ளனர்.

❖ கால்நடை வளர்ப்பில் முழுநேரத்தொழிலாக முல்லைநிலத்தவர் ஈடுபட்டனர் எனக் குறிப்பிட்டாலும் இத்தொழிலில் மருதம், குறிஞ்சி நிலப் பகுதியைச் சேர்ந்த மக்களும் பகுதிநேரமாக ஈடுபட்டமை சங்கப் பனுவல்களில் இடம் பெறுகின்றன. ஆடு. பசு, எருமை ஆகியவற்றை வளர்ந்து அவற்றிலிருந்து கிடைக்கும் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலிய பொருள்களைத் தாம் பயன்படுத்தியது போக எஞ்சியதைப் பண்டமாற்று செய்துள்ளனர். கால்நடை மேய்த்தல் ஆண்களுக்குரியதாகவும் அதன் உற்பத்திப் பொருட்களைப் பண்டமாற்று செய்வது பெண்களுக்குரியதாகவும் தொழிற்பகுப்பு இருந்துள்ளது.

❖ வேளாண்மை என்பது குறிஞ்சி, முல்லை. மருதம் என அனைத்து நிலத்திலும் நடைபெற்றுள்ளது. இவற்றுள் காட்டெரிப்பு வேளாண்மை குறிஞ்சி, முல்லை நிலப் பகுதியிலும் பண்பட்ட வேளாண்மை மருதநிலத்திலும் நடைபெற்றுள்ளது. ஐவன நெல், தினை ஆகியவை குறிஞ்சியிலும் வரகு, அவரை ஆகியவை முல்லை நிலத்திலும் பயிரிடப்பட்டன.

❖ நெசவுத்தொழில், சலவைத் தொழில், ஓவியத்தொழில், மட்கலத்தொழில், கிணறு வெட்டும் தொழில், சானைக்கல் தொழில், கருப்பட்டித்தொழில், சங்கு அறுக்கும் தொழில், ஊது உலைத்தொழில், இசைக்கலைத் தொழில் என நிலம் சார்ந்த பிறதொழில்கள் நடைபெற்றுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1) பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.463
2) மேலது, ப.463
3) மேலது ப.464
4) சஷி, இந்தியாவின் ஆயர் சமுதாயம், ப.12
5) பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.467
6) மேலது ப.462
7) மேலது ப.464
8) தினமலர் நாளிதழ், தேதி :10.02.2016,ப.11
9) தினமலர் நாளிதழ் தேதி :07.02.2015,ப.8
10) பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல் ப.465
11) மேலது ப.472
12) ஆர்.எஸ்.நாராயணன், இந்திய வேளாண்மையில் வாழ்வியல் தொழில்நுட்பம்,ப.230
13) மேலது ப.235
14) மேலது பக்.36-40
15) மேலது ப.40-41
16) மேலது ப.237
17) காசிநாதன்,தமிழர் தெய்வங்கள், ப.106

## இயல் மூன்று

## சங்க அகத்திணைப்பாடல்களில் பண்பாடுசார் மக்களினம்

ஒரு மனிதனின் பண்பாட்டை வளர்த்தெடுப்பதில் குடும்பம் இன்றியமையாத பங்காற்றுகிறது. ஆகையால் சங்ககாலப் பண்பாட்டை மீட்டுருவாக்கம் செய்ய வேண்டுமெனில் குடும்பத்தின் கூறுகளை ஆராய்வது அவசியம். குடும்பம் என்பது தொன்மையானதும் எல்லாக் காலச் சமுதாயங்கள் சார்ந்ததும் ஆகும். பல்வேறு வகைப்பட்ட பரிமாணங்களையும் பெற்று வளர்ந்து வருவதும் குடும்பமே. பொருளாதாரம் எனும் அடிப்படையைத் தளமாகக் கொண்டு உருவானது குடும்பம்.அவ்வகையில் சங்ககாலச் சமுதாயத்தில் அமைப்புற்றிருந்த குடும்ப நிலைமை, உறவுமுறை, வழிபாட்டு முறை, நம்பிக்கைகள், சடங்குகள், பழக்க வழக்கங்கள் ஆகிய பண்பாடுசார் மக்களினத்தை சங்க அகத்திணைப்பாடல்கள் கொண்டு ஆராய்வது இவ்வியலின் அடிப்படை நோக்கமாகும்.

### மணப்பிணைப்பு

குடும்பம் என்னும் பிணைப்பு ஆணும் பெண்ணும் மணம் செய்து கொள்ளும் போது தொடங்குகிறது. இது திருமணம் எனப்படும். திருமணம் என்ற இச்சொல்லுக்குக் குடி, மணம், மன்றல், வதுவை, வதுவை மணம், வரைவு என்பனபண்டைத்தமிழரால் வழங்கப்பெற்ற வேறு சொற்களாகும்.

*''வதுவை நல் மணம் கழிந்த பின்றை''– (அகநா.86:17)*
*''வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று''– (அகநா.136:8)*
*''வதுவை அயர்வாரைக் கண்டு''– (கலித்.114:4)*
*''வதுவையும் ஈங்கே அயர்ப''– (கலித்.115:20)*

ஆகிய பாடலடிகளில் 'வதுவை' என்ற சொல் திருமணம் குறித்து வந்துள்ளது. திருமணம் இரண்டு தனிப்பட்டவர்களுக்கிடையே நடைபெறும் உடன்படிக்கையன்று. இரண்டு குழுக்களிடையே இணைப்பை, நெருக்கத்தை ஏற்படுத்தும் உறவுத்தளையாகும். இந்த உறவுத்தளை அகமணம், புறமணம் என்ற அடிப்படையில் நிகழ்ந்தது, நிகழ்ந்தும் வருகின்றது. இத்திருமணமானது சங்கத்தமிழரிடம் ஒரே இனக்குழுவிற்குள்ளும் வேறொரு இனக்குழுவினரோடும் நடைபெற்றதைச் சங்க இலக்கியங்கள் பதிவுச் செய்துள்ளன.

### அகமணம்

ஒருவர் தாம் சார்ந்த குழுவிற்குள் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்னும் சமூக முறைமையே அகமணம் (Endogamy) எனப்படும்.

‘‘அகமணமானது நேரடியாக இரத்த உறவுடையோருடன் மணஉறவு கொள்வதைத் தடுக்கிறது. சில சமுதாயங்களில் அகமணமானது ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பைச் சார்ந்தும் அமைகிறது. இதனை மானிடவியலாளர்கள் நிலப்பரப்பு சார்ந்த அகமணம் (Territorical Endogamy) என்பர்.’’(2)இத்தகைய நிலப்பரப்பு சார்ந்த அகமணம் பற்றிச் சங்கப்பாடல்கள் பதிவுச் செய்துள்ளன.

**நிலப்பரப்புசார்ந்த அகமணம்**

சங்க காலத் திருமணம் பெருமளவில் நிலப்பரப்பு சார்ந்து நடந்த திருமணமுறையாக உள்ளது. பெண்ணை இன்னாருக்குத்தான் கொடுப்பது என்ற வரையறையும் வலுவாகவே பின்பற்றப்பட்டுள்ளதை,

*‘‘ஆயர் மகனாயின் ஆயமகள் நீ ஆயின்*
*நின்வெய்ய னாயின் அவ்வெய்யை நீயாயின்*
*நின்னைநோ தக்கதோ இல்லைமன் நின்னெஞ்சம்*
*அன்னைநெஞ் சாகப்பெறின்’’– (கலித்.107:19-22)*

என்ற பாடலடிகள் தலைவன் ஆயர் மகனாவான். நீ ஆயர் மகளாவள். நீ அவனை விரும்புகின்றாய். அவன் நின்னை விரும்புகின்றான். இருவரும் ஒத்த குடியினைச் சேர்ந்தவர். ஆகையால் தாய் நோவத்தக்க காரியமில்லை என்றாள் தோழி என்பதிலிருந்து காதல் மணமானாலும் ஒத்தகுடியுள் நடக்கும் மணம் ஏற்கப்பட்ட நிலை விளங்கும்.

*‘‘சிறுதினைக் காவலனாகி பெரிதும் நின்*
*மென்தோள் ஞெகிழவும் திருநுதல் பசப்பவும்*
*பொன்போல் விறல்கவின் தொலைந்த*
*குன்ற நாடற்கு அயர்வர் - நன் மணனே’’– (ஐங்.230:2-5)*

என்ற பாடலும் குறவர் குலப்பெண்ணுக்கும் ஆணுக்கும் திருமணம் நடைபெற்ற செய்தியைக் குறிப்பிடும்.

**புறமணம்**

புறமணம் என்பது அகமணமுறைக்கு நேர்மாறானது. ‘‘ஒருவர் அவர் சார்ந்த குழுவுக்குள் திருமணம் செய்து கொள்ளாமல் வேற்றுக் குழுவினருடன் மட்டுமே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற முறையைப் புறமணம் (Exogamy) குறிக்கிறது.’’(3) புறமண உறவை,

*‘‘யாயும் ஞாயும் யாரா கியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்*
*யானும் நீயும் எவ்வழி யறிதும்*
*செம்புலப் பெயல் நீர்போல*

*அன்புடை நெஞ்சம் தாங் கலந்தனவே''– (குறுந்.40:1-5)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் தலைவன், தலைவி ஆகிய இருவரும் முன்பின் அறியாத நிலையில் அவர்களின் பெற்றோர்கள் உறவற்ற நிலையிலும் இருவர் நெஞ்சமும் கலந்த புறமணம் சுட்டப்பட்டுள்ளது.

ஒரே குலம் அல்லது ஒரே இனக்குழுவினைச் சேர்ந்தவராக இருந்தால் கண்டிப்பாக ஒருவரை ஒருவர் அறிந்திருக்கக் கூடும். வேறொரு இனக்குழு அல்லது குலத்தைச் சேர்ந்தவர் என்பதால் தான் ஒருவரை ஒருவர் அறிந்திருக்கவில்லை. இங்கு களவு வழிப்பட்ட புறமணம் இருவேறு இனக்குழுக்களிடையே நடைபெற்றுள்ளது.

மானிடவியல் அறிஞர்கள் குறிப்பிடும் அகமணம், புறமணம் வகைகளில்இனஅகமணமும் (Racial Endogamy) இனப்புறமணமும் (Racial Exogamy)சங்கத்தமிழரிடம் காணப்பட்டது.

**திருமண வகைகள்**

சங்க காலத் தமிழர் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவர் என்பதால் அவர்கள் வாழ்ந்த சூழலுக்கேற்ப அவர்களது திருமண முறைகள் வேறுபடலாயின. பலவகையான திருமணங்கள் நடைபெற்றதைச் சங்கப் பாடல்கள் உணர்த்தும். சங்ககால இனக்குழுவினரிடம் நடைமுறையில் இருந்த திருமண முறைகளை,

1. திணை சார்ந்த சடங்கு மணம்
2. இனக்குழுவிற்குள் திருமணம்
3. களவு மணம்
4. பொருள் கொடுத்து மணத்தல்
5. தேர்வுத் திருமணம்
6. திணைக்கலப்பு மணம்
7. வலிய மணம்

எனப் பாகுபடுத்த இயலும்.

**திணைசார்ந்த சடங்கு மணம்**

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர் திணை அடிப்படைத் திருமணத்தைச் சடங்கு வழி நடத்தினர். மருதத்திணையில் மரபுப்படி நடந்த திருமணத்திற்கு அகநானூற்றின் 86, 136-ஆம் பாடல்கள் சான்றாக உள்ளன. இப்பாடலில்

உரோகினியுடன் சந்திரன் கூடிய நல்ல நாளில் வீட்டில் விளக்கேற்றி மாலைகளைக் கட்டி செறிந்த இருள் நீங்கிய அதிகாலையில் முதுபெண்டிர் புதிய பானைகளைத் தர அதைப்பெற்றுக் கொண்டு புதல்வரைப் பெற்றெடுத்த மங்கலப்பெண்டிர் நால்வர் கூடி, கற்புநிலை வழுவாமல் பெற்றோர் விரும்பும் துணையாகுக என வாழ்த்தி நெல்லும் மலரும் இடப்பட்ட நீரைத் தலையில் சொரிந்து வதுவைமணம் நிகழ்த்தியது குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு 'பேரில்கிழத்தி' ஆக எனத் தலைவி வாழ்த்தப்பட்டு சுற்றத்தார் தர ஓரில்லத்தில் கணவனுடன் கூடிய நிலையும் பேசப்பட்டுள்ளது. இவ்வாறே,

*''சகட மண்டிய துகள்தீர் கூட்டத்துக்*
*கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்*
*படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ''– (அகநா.136:5-7)*

எனத் திணைசார் மணம் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்க காலத்தில் வாழ்ந்த முல்லை நில ஆயர்கள் திணைமரபுத் திருமணத்தை மேற்கொண்டனர். எருமைக் கொம்பினை மணற் பரப்பில் நட்டு பூத்தூவி வழிபட்டு மணம் முடித்ததை,

*''தருமணற் றாழப்பெய் தில்பூவ லூட்டி*
*எருமைப் பெடையோ டெமரீங் கயரும்*
*பெருமணம் ......................''– (கலித்.114:12-14)*

எனக் கலித்தொகை குறிப்பிடும். இவ்வாறு திணைசார்ந்த இயற்கை மணஉறவு நிகழ்ந்த காலத்து ஆரியர்களின் கலப்பால் ஏற்பட்ட மாற்றத்தைச் சங்கப் பனுவல்களும் பதிவு செய்யத்தவறவில்லை.

*''வரையிழி யருவியிற் றோன்று நாடன்*
*தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்*
*வந்தன்று வாழி தோழி நாமும்*
*நெய்பெய் தீயி னெதிர் கொண்டு*
*தான்மணந் தனைய மெனவிடுகந் தூதே''– (குறுந்.106:2-6)*

என நெய் ஊற்றி மூட்டப்பட்ட தீயின் முன்னர் நடக்கும் திருமணத்தைக் குறுந்தொகையின் குறிஞ்சித்திணைப்பாடல் குறிப்பிட்டுள்ளது. இஃது அந்தணப் புலவராகிய கபிலரால் இயற்றப்பெற்றது. இங்கு ஆரியக் கலப்பால் நிகழ்ந்த திருமணச் சடங்கு இடம் பெறுவது கவனத்தில் கொள்ளத்தக்கதாகும். அந்தணன் கொடுக்கக் கொள்ளும் மணமுறைக்குச் சான்றாக பின்பழந்தமிழ் நூலான கலித்தொகையில் காமக்கிழத்தியின் கூற்றில் அமைந்த மருதக்கலிப்பாட்டில் அந்தணன் தீவலம் வந்து திருமணம் செய்துக்கொண்ட நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது. இதனை,

*''மடந்தைதன் துணையாக*
*ஓதுடை யந்தணன் எரிவலஞ் செய்வான்போல்*
*ஆய்தூவி யன்னந்தன் யணிநடைப் பெடையொடு*
*மேதகத் திரிதரூஉம் மிகுபுனல் நல்லூர''– (கலித்.69:4-7)*

என்பது உணர்த்தும். தீவலம் வந்து மணக்கும் திருமணம் சங்ககாலத் திணை மணமுறைக்கு வேறாக, காலமாற்றத்தின் விளைவாக நிகழ்ந்திருப்பதையும் இந்தச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

**இனக்குழுவிற்குள் திருமணம்**

சங்ககாலத் திருமணம் பெருமளவில் இனக்குழுவிற்குள்ளேயே நடந்த திருமணமுறையாக உள்ளது. பெண்ணை இன்னாருக்குத்தான் கொடுப்பது என்ற வரையறையை,

*''ஆயர் மகனாயின் ஆயமகள் நீ ஆயின்*
*நின் வெய்யனாயின் அவன் வெய்யை நீ ஆயின்*
*அன்னை நோதக்கதோ இல்லை மன்; - நின் நெஞ்சம்*
*என்னை நெஞ்சாகப் பெறின்'' - கலித்.107:19-22*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். ஒத்தகுடியுள் இனக்குழுவிற்குள் திருமணம் நிகழ்ந்துள்ளது. இவ்வாறே,

*''சிறுதினைக் காவலனாகி பெரிதுநின்*
*மென்தோள் ஞெகிழவும் திருநுதல் பசப்பவும்*
*பொன்போல் விறற்கவின் தொலைத்த*
*குன்ற நாடற் கயர்வர்நன் மணனே''– (ஐங்.230)*

என்ற பாடலும் குறவர்குலப் பெண்ணுக்கும் ஆணுக்கும் நடைபெற்ற மணத்தைக் குறிப்பிட்டுள்ளது.

**களவுத் திருமணம்**

களவொழுக்கம் திருமணத்தில் முடிந்தது பற்றிய பல பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.

*''.......................... ஆய்கழல்*
*சேயிலை வெள்வேல் விடலையொடு*
*தொடுவளை முன்கை மடந்தை நட்பே''– (குறுந்.15:4-5)*

காலில் ஆய்ந்து கட்டிய கழலினையும் செம்மையாகிய இலைபோன்ற வடிவுடைய வெள்ளிய வேலினையும் ஏந்திய தலைவனொடு பலவாகத் தொக்க வளையல்களை அணிந்த முன்கையையுடைய மடந்தை ஒரு மணையில் தங்கியமையால் அவர்கள் கொண்ட நட்பு உண்மையாயிற்று என்று

செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்று கூறும் கூற்றால் களவொழுக்கம் திருமணத்தில் முடிந்தது புலனாகும்.

*"........................... தூமணற் சேர்ப்பனை*
*யானும் காதலென் யாயும் நனி வெய்யள்*
*எந்தையும் கொடீஇயர் வேண்டும்"– (குறுந்.51:3-5)*

நெய்தல் நிலத் தலைவனிடம் யானும் காதலுடையேன், நம் தாயும் மிக்க விருப்பமுடையவள், தந்தையும் அவனுக்கே மணம் முடித்துக் கொடுக்க, அவன் வரைவொடு வருதலை விரும்புவான் என்று கூறுவதும் களவொழுக்கம் திருமணத்தில் முடிந்ததை எடுத்துரைக்கும்.

*"அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்*
*பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ, அன்னை*
*தம்இல் தமது உண்டன்ன சினை தொறும்*
*தீம்பழம் தூங்கும் பலவின்*
*ஓங்குமலை நாடனை வரும் என்றோளே"– (குறுந்.83:1-5)*

என்ற குறிஞ்சித்திணைப் பாடல் தலைவர் தலைவியை மணம் முடிக்க வருவார் என உரைத்த செவிலியைத் தோழி பாராட்டுவதாக அமைகின்றது. இதில் தலைவன் வரைவதற்கு உரியவனாய் வருவான் என அன்னை மொழிந்தனள் என்பது களவுத் திருமணத்திற்கு உடன்பட்டதை விளக்குகிறது.

*"உரும் இசைப் புணரி உடைதரும் துறைவற்கு*
*உரிமை செப்பினர் நமரே...."– (குறுந். 351:4-5)*

*"............................... நாடன்*
*இரவின் வரூஉ மிடும்பை நாம் உய*
*வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப*
*நமர் கொடை நேர்ந்தனர் ஆயின், அவருடன்*
*நேர்வர்கொல் வாழி தோழி நம் காதலர்*
*புதுவர் ஆகிய வரவும் நின்*
*வதுவை நாண் ஒடுக்கும் காணுங்காலே"– (நற்.393:7-13)*

*"............................ துறைவன்*
*நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே*
*அலர்வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றப்*
*பலரும் ஆங்கு அறிந்தனர் மன்னே இனியே*
*வதுவை கூடிய பின்றை......"– (அகநா.70:4-8)*

என்ற பாடலடிகள் களவு மணத்தைப் பெற்றோர் ஆதரித்ததைக் காட்டுகின்றன. குறிஞ்சித்திணைப்பாடல் ஒன்றில் தலைவியானவள் களவுக்காதல் ஏற்றுக் கொள்ளப்பட்டு மணநாள் விரைந்து வருவதை எண்ணி மனைவாழ் (குலதெய்வம்,

இல்லுறை தெய்வம்) தெய்வத்திற்குப் பலி கொடுப்பதற்கு ஆயத்தமாகும் செய்தியை,

*“இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து*
*எந்தையும் எதிர்ந்தனன் கொடையே அலர்வாய்*
*அம்பல் ஊரும் அவனொடு மொழியும்*
*சாய்இறைத் திரண்ட தோள்பாராட்டி*
*யாயும் அவனே என்னும் யாமும்*
*வல்லே வருக வரைந்த நாள் என*
*நல்இறை மெல்விரல் கூப்பி*
*இல்உறை கடவுட்கு ஆக்குதும் பலியே”– (அகநா.282:11-18)*

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். தலைவன் (மணமகன்) வீட்டார் தலைவி (மணமகள்) வீட்டிற்குச் சென்று மகட்பேசியதையும், அதற்குத் தலைவியின் சுற்றத்தாரும் உடன்பட்டதையும்,

*“அம்ம வாழி, தோழி! நம்மொடு*
*சிறுதினைக் காவலன் ஆகிப் பெரிதும் நின்*
*மென்தோள் ஞெகிழவும் திருநுதல் பசப்பவும்*
*பொன்போல் விறற் கவின் தொலைத்த*
*குன்ற நாடற்கு அயர்வர் - நன் மணனே”– (ஐங்.230:1-5)*

*“கொடிச்சி கூந்தல் போலத் தோகை*
*அம்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்*
*வந்தனன் எதிர்ந்தனர் கொடையே*
*அம் தீம் கிளவி பொலிக நின் சிறப்பே”– (ஐங்.300:2-5)*

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. களவானது தாய் தந்தையர் சுற்றத்தார் மூலம் பேசி, திருமணத்திற்கு ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. இவ்விரண்டு பாடல்களும் குறிஞ்சித் திணைக்குரியன. இவ்வாறான களவுமணம் மலைவாழ் பழங்குடி மக்களிடம் இன்றும் வழக்கத்தில் உள்ளது. இது பண்பாட்டு மரபாகவும் ஏற்கப்பட்டு வந்திருப்பதை அம்மக்களின் திருமண மரபு சுட்டிக்காட்டுகிறது. களவுக்காலத்தில் பிறர் அறியாவண்ணம் காதலன் காதலியின் கூந்தலில் மலர்சூட்டி மகிழ்ந்தான். பின் வதுவைச் சடங்கின் போது சுற்றத்தார் பலரும் அறிய மலர்சூட்டினான். இச்செயலுக்குக் காரணமான களவுக் காதலை ஏற்றுக் கொண்ட தாய்தந்தையர் நீடுவாழ்க என்று கூறுவதனை,

*“இனிது செய்தனையால் நுந்தை வாழியர்!*
*நல்மனை வதுவை அயர இவள்*
*பின் இருங் கூந்தல் மலர் அணிந்தோயே”– (ஐங்.294:3-5)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. இங்கு பூச்சூடுதல் என்பது வதுவைச் சடங்காக நிகழ்த்தப்பட்டுள்ளமை புலனாகும்.

துறைவன், நாடன், வெற்பன் (குன்ற நாடன்) ஆகியோர் தம் காதல், பெண்ணின் பெற்றோரால் ஏற்கப்பட்டுத் திருமணத்தில் நிறைவுற்றதை மேற்காட்டிய பாடல்கள் காட்டுகின்றன. இவ்வாறு களவு மணம் ஏற்கப்பட்ட நிலையில், சில களவுக்காதல் ஏற்கப்படாமல் இருந்ததை,

*''சாந்த மரத்த பூழில் எழு புகை*
*கூட்டு விரை கமழும் நாடன்*
*அறவற்கு எவனோ நாம் அகல்வு? – அன்னாய்''– (ஐங்.212)*

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு களவிற்கு மறுப்புத் தெரிவிக்கும் பொழுது காதலர்கள் மேற்கொள்வது உடன்போக்கு.

*''நனைவிளை நறவின் தேறல் மாந்திப்*
*புனைவினை நல்லிற் றருமணல் குவைஇப்*
*பொம்ம லோதி யெம்மகள் மணனென*
*வதுவை யயர்ந்தனர் நமரே யதனாற்*
*புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்*
*மதியுடம் பட்ட மையணற் காளை*
*வாங்குசினை மலிந்த திரளரை மராஅத்துத்*
*தேம்பாய் மெல்லிணர் தளிரொடு கொண்டுநின்*
*தண்ணறு முச்சி புனைய அவனொடு*
*...............................................*
*அருஞ்சுரற் சேற லயர்ந்தனென் யானே''– (அகநா.221:1-9,14)*

என வேறு ஒருவருக்குத் திருமண ஏற்பாட்டைச் செய்த தம் சுற்றத்தாரின் செயற்பாட்டை மீறித் தலைவனுடன் உடன் போக்கை மேற்கொண்ட தலைவியது நிலை தோழியால் குறிப்பிடப்பட்டுள்ளது. செல்வநிலையில் ஒத்தவனாகத் தலைவன் இல்லாத காரணத்தால் களவுக்காதலுக்கு உடன்பட மறுத்த தாய் தந்தையரை மீறி உடன்போக்கில் சென்றதை,

*''................................ உறந்தையன்ன*
*நிதியுடைய நல்நகர் புதுவது புனைந்து*
*தமர்மணன் அயரவும் ஒல்லாள்''– (அகநா.369:14-16)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். தலைவியின் செல்வநிலை கூறும் செவிலி, கொடியவளாகிய தலைவி எண்ணியதை உணராமல் இருந்து விட்டேனே எனத் தன்னை நொந்து கொள்வதோடு பொருளாதாரப் பின்னடைவுடைய தலைவனுடன் உடன்போக்கில் சென்ற தலைவியின் எதிர்கால நிலையை எண்ணி,

*''சிறியோற் கொத்தவென் பெருமடத் தகுவி*

*சிறப்புஞ் சீறு மின்றிச் சீறூர்*
*நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை*
*ஓரா யாத்த வொருதூண் முன்றில்*
*ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ*
*மேயினள் கொல்லென நோவல் யானே''– (அகநா.369:21-26)*

எனக் கூறிச் செல்வச் செழிப்புடன் வாழ வேண்டிய தலைவி ஒரு பசு மட்டுமே கட்டப்பட்டுள்ள புல்வேய்ந்த குடிசையில் சிலம்பு கழிதலாகிய நோன்பை மேற்கொள்ளும் நிலைக்கு ஆளாகி விட்டாளே என்று வருந்துகின்றாள்.

உடன்போக்கில் தலைவி சென்றபின் வெறுமனையின் நிலைகண்டு வருந்தும் மனைமருட்சிக் கூற்றில் அமைந்த நற்றிணையின் 110-ஆம் பாடலும் பொருளாதார ஏற்றத்தாழ்வுடைய நிலையில் தலைவி செல்வச் செழிப்பையும் மறந்து பொருளாதாரப் பின்னடைவுடைய தலைவனைத் திருமணம் செய்து கொண்டு வாழ்வதைக் காட்டுகின்றது. இப்பாடலடிகள் தாய் பொற்கிண்ணத்தில் தேன்கலந்த பாலை ஏந்திப் பின்னே ஓடிச்சென்று ஊட்டவும்; தலைவி அதை உண்ண மறுத்தாள். இன்று கணவன் வீட்டில் பொழுது மறுத்து உண்ணும் நிலையில் அதை வெளிப்படுத்தாது அறிவும் ஒழுக்கமும் உடையவளாக மாறிப் போனதை எண்ணி வருந்தும் தாய் கூற்றைக் காட்டுகின்றன.

அறத்தொடு நிற்றல் பற்றிய கூற்றில் அமைந்த கலித்தொகையின் 39-ஆம் பாடல் தலைவியின் வதுவையுள் களவுக்காதல் வெளிப்படாதவாறு நடந்துகொள்வாயா எனத் தலைவியைத் தோழி வினவும் நிலையில் அமைந்துள்ளது. தலைவி மாயப்புணர்ச்சியாகிய களவுப் புணர்ச்சியில் ஈடுபட்ட நிலையையும் குறிப்பாக இந்தப் பாடல் வெளிப்படுத்தியுள்ளது. நீரில் அடித்து செல்லப்பட்டு மூழ்கிய தலைவியை நீரில் பாய்ந்து தழுவிக் காப்பாற்றினான் தலைவன். இதனால் தலைவி ஐயப்பாட்டிற்குரியவள் அல்லள். அவள் மழையைத் தருவிக்கும் கற்புடையவள் எனக் கூறுமளவிற்கு அறம் புரிந்து ஒழுகும் மலைவாழ்நரின் குறமகளிர் தாம் பிழைசெய்யாது ஒழுகுபவர். அதனால் குறவரும் தாம் விடும் அம்பின் குறி தப்பாத இயல்புடையவர்களாக உள்ளனர் எனக் கூறி இத்தலைவியும் இம்மரபு வழிப்பட்டவள் என்பதைத் தோழி வற்புறுத்தியுள்ளாள். இந்தப் பாடலில்

*''அவனுந்தான் ஏனலிதணத் தகிற்புகை யுண்டியங்கும்*
*.......................................................................................*
*கானக னாடன் மகன்''– (கலித்.39:7-10)*

எனத் தலைவனின் குறிஞ்சிநிலப் பிறப்பும் குறவரினப் பிறப்பும் சுட்டப்பட்டுள்ளது. இவ்வாறு தலைவன் தலைவி இருவரின் ஒத்த குடிப்பிறப்பு பற்றிய செய்தியும் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

*''அறத்தொடு நின்றேனைக் கண்டு திறம்பட*
*என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்*
*அவரும் தெரிகணை நோக்கி சிலை நோக்கி கண்சேந்து*
*ஒருபக லெல்லா முருத்தெழுந் தாறி*
*இருவர்கட் குற்றமு மில்லையா லென்று*
*தெருமந்து சாய்த்தார் தலை''– (கலித்.39:20-25)*

என வரும் அடிகள் தலைவியின் களவுக்காதல் தாயர்களால் அல்லாமல் தமையன்மார்களால் ஒரு பகல் பொழுது முழுவதும் நடத்திய ஆலோசனைக்குப் பின்னர் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளதைக் காட்டுகின்றது. இந்தப் பாடல் தலைவன் காலக்கணியருடனும் இனத்துடனும் வந்து பெண் கேட்டான். அதனால் களவுப் புணர்ச்சி ஆகிய மாயப்புணர்ச்சி உடன் நீங்கியது என முடிகின்றது. குறிஞ்சிக் களவு கற்பான விதம் இவ்வாறு காட்டப்பட்டுள்ளது. குலத்துள் என்ற வரையறையில் களவு இங்கே கற்பாக நிறைவுறுத்தப்பட்டுள்ளது. இவ்வாறே குறுந்தொகையின் 374-ஆம் பாடலிலும் களவு அறத்தொடு நிற்றல் வழி கற்பாக்கப்பட்டுள்ளது.

*''இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி*
*நீனிறப் பெருங்கடல் கலங்க வுள்புக்கு*
*மீனெறி பரதவர் மகளே*
*நீயே நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்*
*கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே*
*நிணச்சுறா அறுத்த உணங்கல் வேண்டி*
*இனப்புள் ளோப்பும் எமக்குநலன் எவனோ*
*புலவு நாறுதும் செலநின் றீமோ*
*பெருநீர் விளையுளெம் சிறுநல் வாழ்க்கை*
*நும்மொடு புரைவதோ அன்றே*
*எம்ம னோரிற் செம்மலு முடைத்தே''– (கலித்.45)*

எனும் பாடல் கடைத்தெருக்களையுடைய பழமையான ஊரில் உள்ள செல்வரின் மகனுக்கும் மீன் விற்கும் பரதவர் மகளுக்கும் இடைப்பட்ட காதல் மறுத்துரைக்கப்பட்டதைக் காட்டுகின்றது. இது பொருளாதார ஏற்றத்தாழ்வு கருதி மறுத்துரைக்கப்பட்டுள்ளதை எடுத்துரைக்கிறது. அதுமட்டுமின்றி தொழில் வேறுபாடு கருதியும் களவுமணம் மறுக்கப்பட்டிருப்பதைக் காட்டுகிறது.

*''கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேற் றூங்கிச்*
*சிற்சில வித்திப் பற்பல விளைந்து*

*தினைகிளி கடியும் பெருங்கல் நாடன்*
*பிறப்போ ரன்மை யறிந்தனம்''– (நற்.328:1-4)*

எனும் பாடலில் தலைவன் பிறப்பு தம் குடிப்பிறப்போடு ஒத்தமையால் உயர்ந்த காதலாக ஏற்கப்பட்டுள்ளது. சங்ககாலத்தில் பிறப்பு ஒப்புமையும் குடி ஒப்புமையும் திருமணத்திற்கு அளவுகோலாக அமைந்துள்ளன.

இவ்வாறு பிறப்பு ஒப்புமை, குடி ஒப்புமை பார்ப்பதற்கு அவர்களின் நிலம் சார்ந்த தொழிலே காரணமாகும். குறிஞ்சி நிலமாக இருந்தால் வேட்டையாடுதல், தினைப்பயிர் விவசாயம் இத்தொழில் சார்ந்த தொழில் நுட்பத்தை அறிந்தவர்களாக இருக்கும் பொழுது களவு ஏற்கப்படுகிறது. இது போலவே ஆயர்கள், உழவர்கள், பரதவர்கள் தங்களின் தொழில்சார்ந்த குடியாக இருப்பின் களவு மணம் ஏற்கப்பட்டுள்ளது. மாறாக இருப்பின் களவு மறுக்கப்பட்டுள்ளது. அந்நிலையில் உடன்போக்கு மேற்கொண்டுள்ளனர்.

**பொருள் கொடுத்து மணத்தல்**

பொன், பொருள், உரிமை, உழைப்பு இவையனைத்தும் ஒருங்கிணையக் கூடிய திருமணத்தில் பெண் ஒரு குழுவிலிருந்து இன்னொரு குழுவிற்கு மாற்றப்படும் நிகழ்வானது இருஇனக்குழுக்களிடையே திருமணம் பொருளியலை உருவாக்குகிறது. பெண் வீட்டாருக்கு மணமகன் வீட்டார் பொருள் கொடுத்துப் பெண் எடுக்கும் முறையைப் பரிசத்திருமணம் என்பர். இப்பரிசம் என்பது இற்றைய நாளில் திருமணத்திறகு முன் நிகழும் பரிசச் சடங்காக நிகழ்கிறது. பரிசம் என்பதை நிச்சயதார்த்தம் என்ற சொல்லாலும் குறிப்பிடுகின்றனர். இப்பெண் தான் என் வீட்டுமருமகள் எனப் பலர் அறிய மணம்பேசி அதற்கு அடையாளமாகத் தங்கள் வசதிக்கேற்ப பொன்னால் ஆன ஆபரணத்தை மணமகன் வீட்டார் மணமகளுக்கு அணிவிக்கின்றனர். இப்பரிசத்திற்குரிய செலவுகள் மணமகள் வீட்டாருக்குரியது. பின் நடைபெறும் திருமணத்திற்கு அனைத்துச் செலவுகளையும் பெண்ணுக்குக் கொடுக்க வேண்டிய சீர்பொருட்கள் அனைத்திற்கும் உரிய செலவினைப் பெண்வீட்டார் ஏற்கவேண்டும் என்ற நிலையில் திருமணங்கள் பெரும்பாலான இனகுழுவினரிடம் நடைமுறையில் உள்ளன. சங்க காலத்திய பரிசத்திருமணம் என்ற நிலை மாறிப்போய் பின்னாளில் பெண் வீட்டாரே பொருளையும் கொடுத்துப் பெண்ணையும் கொடுக்கும் வரதட்சணைத் திருமணம் முறை ஏற்பட்டிருக்கிறது. திருமண

முறையில் பெண்வீட்டாருக்குப் பொருளைக் கொடுத்து மணக்கும் வழக்கம் இருந்ததற்கான சான்றுகள் சங்க இலக்கிங்களில் இடம் பெற்றுள்ளன.

*"................................................. குறுமகள்*
*நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்*
*பெற லருங்குரையள்"– (அகநா.280:4-6)*

எனும் இப்பாடலடி பெண்ணை விரும்பியவன் சிறந்த பொருள்களையும் அணிகலன்களையும் கொடுத்தாலும் பெறுவதற்கு அரியவள் எனத் தலைவியைக் குறிப்பிடுகின்றது. இது பெண்ணை விரும்பியவன் பொருள் கொடுத்து மணக்க விரும்புவதையும் தந்தை தர மறுப்பதையும் காட்டுகின்றது. பாசிழைவிலை, பெண்ணுக்குரிய விலை கொடுத்தல் என்ற முறையும் இருந்ததை,

*"கடுங்கட் கோசர் நியம மாயினும்*
*உறுமெனக் கொள்குந ரல்லர்*
*நறுநுத லரிவை பாசிழை விலையே"– (அகநா.90:12-14)*
*"தழையணி யல்குற் செல்வத் தங்கையர்*
*விழவயர் மருங்கின் விலையெனப் பகரும்"– (அகநா.320:3-4)*
*"ஒண்டழை யயருந் துறைவன்*
*தண்டழை விலையென நல்கின னாடே"– (ஐங்.147:2-3)*
*"விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்*
*கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்*
*முலையிடைப் போலப் புகின்..........."– (கலித்.103:71:73)*

எனும் பாடலடிகள் காட்டுகின்றன. தலைவனின் (ஆணின்) உறவினர் தலைவி (பெண்ணின்) இல்லத்தார்க்கு வேண்டியன கொடுத்துத் தலைவியை மணக்க முன்வந்த செய்தியை வெளிப்படுத்துகிறது. இவற்றால் பொருள் கொடுத்து மணப்பது சங்கச் சமுதாயத் திருமணமுறைகளுள் நடவடிக்கைகளுள் ஒன்றாக இருந்துள்ளமை தெளிவாகும்.

'முலைப்பாற் கூலி' என்பது பெண்ணைப் பெற்று வளர்த்த பெண்ணின் தாயாருக்குக் கொடுப்பது ஆகும். இவ்வழக்கம் இன்றைய நரிக்குறவர் இனக்குழு மக்களிடம் உள்ளது. திருமணத்தின் போது மணமகன் வீட்டார் மணமகள் வீட்டாருக்குப் பொருள் கொடுக்கும் சடங்கு முறை பின்பற்றப்படுகிறது. முலைப்பால் கூலி அப்பெண்ணிற்கு (மணமகளுக்கு) பால்கொடுத்து வளர்த்தற்கான இணையாகக் கொடுக்கப்பட்டதே அப்பொருள். இது பணமாகவோ பொருளாகவோ பெண்ணின் தாயாருக்குக் கொடுக்கப்படுகிறது. சங்கப் பனுவல்களில் நெய்தல், முல்லைத் திணைப் பாடல்களில் பெண்ணிற்கு விலைக் கொடுத்துப் பெறுதல் செய்தி பதிவாகியுள்ளது. அன்று சங்கத் தமிழரிடம்

இருந்த வழக்கம் பிற்காலத்தில் குறிப்பிட்ட சில இனக்குழுவினரிடம் மட்டும் நடைமுறையில் உள்ளது.

**தேர்வுத் திருமணம்**

பெண்ணின் பெற்றோர் தம் மகளுக்குரிய மணமகனைத் தேர்வு செய்வதற்குப் போட்டிகள் வைப்பர். அதில் யார் வெற்றி பெறுகிறார்களோ அவர்களுக்குத் தம் மகளைக் கொடுப்பர். வாழ்க்கைத் துணையைப் போட்டி மூலம் தேர்வு செய்வதால் இது தேர்வுத் திருமணம் ஆகும். இவ்வகையான தேர்வுத் திருமணம் முல்லைநில மக்களிடம் சங்க காலத்தில் வழக்கில் இருந்துள்ளது. முல்லைநில ஆயர்கள் இவ்வேற்றினைத் தழுவி அடக்கியவனுக்கு இவள் உரியவள் என்னுங் குறிக்கோளுடன் ஏறு வளர்த்துள்ளனர். அவ்வேறுகளைத் தழுவி அவற்றிற்குப் பரிசுப் பொருளாகிய ஆயர் மகளிரை மணத்தற்குத் துணிந்த இளைஞராகிய ஆயர்களும் இருந்தனர் என்பதை கலித்தொகையில் முல்லைக்கலிப் பாடல்கள் எடுத்துரைக்கும்.(4)

சங்கத்தொகை நூல்களுள் ஒன்றான கலித்தொகையில் முல்லைக்கலி முல்லைநில மக்களின் வீரவிளையாட்டைக் கூறுகிறது. அவர்களது வீர விளையாட்டு ‘ஏறுதழுவல்’ ஆகும். ஏறுதழுவல் என்பதை, ஜல்லிக்கட்டு, காளை விரட்டு, மஞ்சு விரட்டு என்றும் அழைப்பர். முல்லை நிலத்தில் வாழ்ந்த செல்வப் பெருங்குடி மக்கள் தங்கள் வீட்டில் பெண் குழந்தை பிறந்தால் தங்கள் மந்தையில் உள்ள காளைக்கன்று ஒன்றைத் தனியே பிரித்து செல்லமாக வளர்க்கத் தொடங்குவார்கள்.

ஏறுதழுவலுக்காக வீட்டிலே அருமையாக வளர்வாள் பெண். மந்தையிலே காளை செல்லமாக வளரும். மங்கைக்குப் பருவம் வரும். காளைக்கும் பருவம் வரும். இந்தக் காளையை அடக்கி வெற்றி கொண்டவன் எவனோ அவனுக்கு இவளை மணம் செய்து கொடுப்பேன் என்று அப்பெண்ணின் தந்தை பறையறைந்து செய்தி தெரிவிப்பான். அது கேட்ட அப்பெண்ணின் காதலனும் முன் வருவான்.

காளையைத் தழுவி அடக்கி வெற்றிக்கொள்வான். காதலியைப் பரிசாகப் பெற்று மணமுடிப்பான். இங்குக் காதலும் வீரமும் இணைந்து காணப்படுகின்றன. இந்த இணைப்பை முல்லை நிலத்தில் காண முடியும். முல்லைநில மக்களின் வாழ்க்கையை அதன் உண்மை வடிவில் வடித்திருப்பதை முல்லைக்கலிப்பாடல்,

*“ஓஒ இவள் பொருபுகல் நல்லேறு கொள்பவரல்லால்*
*திருமாமெய் தீண்டல ரென்று கருமமா*
*எல்லாருங் கேட்ப அறைந்தறைந் தெப்பொழுதும்*
*சொல்லால் தரப்பட்டவள்”– (கலித்.102:9-11)*

என உரைக்கும். இதனால் ஏறுதழுவலுக்குரிய ஏற்பாட்டைச் செய்து அதைப் பலருக்கும் அறிவித்து ஏறுதழுவியவனுக்கே மணம் முடிக்கும் மரபு விளங்கும்.

*“நளிவாய் மருப்பஞ்சும் நெஞ்சினார் தோய்தற்கு*
*எளியவோ ஆயமகள் தோள்?*
*விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்*
*கொலையேற்றுக் கோட்டிடைத் தாம் வீழ்வார் மார்பின்*
*முலையிடைப் போலப் புகின்”– (கலித்.103:69-73)*

*“ஆங்கு போரேற் றருந்தலை யஞ்சலும் ஆய்ச்சியர்*
*காரிகைத் தோள்கா முறுதலும் இவ்விரண்டும்*
*ஓராங்குச் சேற லிலவோவெங் கேளே”– (கலித்.106:40-42)*

எனும் பாடலடிகளும் அஞ்சாமல் ஏறுதழுவி வென்றவருக்குத் தலைவியை மணம் முடித்துத் தரும் முல்லை நிலச் சமுதாய மரபை வெளிப்படுத்தும்.

*“கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்*
*புல்லாளே ஆயமகள்*
*அஞ்சார் கொலையேறு கொள்பவர் அல்லதை*
*நெஞ்சிலார் தோய்தற் கரிய உயிர்துறந்து*
*நைவாரா ஆயமகள் தோள்”– (கலித்.103:63-67)*

என அச்சப்படும் கோழைகளை ஆயமகளிர் மறுமையிலும் மணவார் என்பது முல்லை நிலச் சமுதாயத்தின் வரையறுத்த திருமண முறையாக இருந்துள்ளது.

முல்லை நில ஆயர்கள் ஆடு, மாடு போன்ற விலங்கினங்களைப் பாதுகாக்கும் தொழிலுடையராதலால் அவற்றிற்கு புலி முதலிய வனவிலங்குகளால் துன்பம் நேராமல் காத்தற் பொருட்டும், கள்வரால் அவை கவர்ந்து கொள்ளாமைப் பொருட்டும் இவர்கள் வீரமறவராக இருத்தல் இன்றியமையாததாயிற்று. இக்காரணத்தால் ஆயர்கள் தம் மகளிரைத் திருமணஞ் செய்யுமுன் வருவாரின் ஆற்றலை அறிந்தே மகட்கொடை நேரும் வழக்கத்தை உடையராகவும் இருந்தனர். இக்குல மகளிரும் காதல் வயப்பட்டாலும் அத்தகைய வலிமை உடையவனைக் கணவனாக ஏற்கும் ஒரு கோட்பாடு உடையவராகவும் இருந்தனர்.

**திணைக் கலப்பு மணம்**

குறிஞ்சி நிலத்தை அடுத்த பகுதி முல்லை நிலமாகும். இந்த இருநில மக்களும் அருகருகே வாழ்ந்ததால் இவர்களுக்குள் களவு ஏற்படுவதற்கு வாய்ப்பு உண்டு. அவ்வாறு மணம் புரிந்த செய்தியை,

*''உவக்காண் தோன்றும் - குறும்பொறை நாடன்*
*கறங்குஇசை விழவின் உறந்தைக் குணாது*
*நெடும் பெருங் குன்றத்து அமன்ற காந்தட்*
*போது அவிழ் அலரின் நாறும்....''– (அகநா.4:13-16)*

என்ற முல்லைத் திணைப் பாடலடிகள் உணர்த்தும். இதில் குறிஞ்சி நிலப்பரப்பிற்குரிய மலைத்தலைவனை முல்லைநிலத் தலைவி மணம் செய்தாள் என்பது சுட்டப்பட்டுள்ளது.

**வலிய மணம்**

ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் விரும்பிய பிறகு அவன் அவளை மணக்க மறுத்தோ அவளை அடையத் தடைகள் ஏற்படுத்தியோ காலந்தாழ்த்தினால் மணமகளோ, மணமகனோ வலியச் சென்று திருமணத்திற்கு வற்புறுத்துவது வலிய மணமாகும். 'மடலேறுதல்' என்னும் வழக்கம் இவ்வலிய மணமுறையைப் பறைசாற்றுகிறது.

தான் விரும்பிய பெண் தனக்குக் கிடைக்காத சூழலில் ஆண், பனங்கருக்கால் செய்த குதிரை உருவின் மீதமர்ந்து கருக்குகள் உடலை அறுக்க ஊர்வலமாக வரும் மடலேறுதல் என்பது விரும்பிய பெண்ணை மணப்பதற்கான ஒரு வழியாக இருந்துள்ளதே அன்றி அது தனிப்பட்டதொரு மணமாக இல்லை. ''இரந்து பின்னின்ற தலைவன் மடலேறிய வழி அவள் தமர் அஞ்சித் தலைவியைக் கொண்டு வந்து கொடுத்தலைக் கண்டோர் கூறியது'' எனும் கூற்றில் அமைந்ததாகக் குறிக்கப்பட்டுள்ள கலித்தொகையின் 141-ஆம் பாடல் இதற்குச் சான்றாகவுள்ளது. இதில்,

*''வருந்தா மாவூர்ந்து மருகின்கண் பாடத்*
*திருந்திழைக்கு ஒத்த கிளவி கேட்டு ஆங்கே*
*பொருந்தாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை*
*போலக் கொடுத்தார் தமர்''– (கலித்.141:22-25)*

எனும் அடிகள் மடலூர்ந்தவனுக்குப் பெற்றோர் தாமாகவே முன்வந்து தம் பெண்ணைக் கொடுத்த நிலையை வெளிப்படுத்துகின்றன. எனவே இது பெண்ணை அடைவதற்கான வழியே அன்றி ஒரு மணமுறையாகக்

கொள்ளத்தகுந்ததா என்பது ஆய்வுக்குரியது. தான் காதலித்தவளைப் பெற விரும்பும் தன் விருப்பத்தைக் கூறிக் கொண்டு தெருவில் வருவது கேட்டுப் பெற்றோர் பெண்ணை அவனுக்கே கொடுக்கும் பழக்கமும் சங்ககாலச் சமுதாயத்தில் இருந்துள்ளமைக்கு இந்தப் பாடல் சான்றாயுள்ளது.

மடலேறுபவன் சான்றோர் முன்னர்த் தோன்றி தன் உளக்கருத்தினை அஃதாவது தான் விரும்பிய பெண்ணை மணந்துகொள்ள விரும்பும் தன் வேட்கையை வெளிப்படுத்தும் சூழலை,

*''அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்தவம்*
*ஓரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோர்*
*உள்ளிடப் பட்ட அரசனைப் பெயர்த்தவர்*
*உயர்நிலை யுலகமு முறீஇ யாங்கென்*
*துயர்நிலை தீர்த்தல் நுந்தலைக் கடனே''– (கலித்.139:33-37)*
*''மருளுறு நோயொடு மம்ம ரகல*
*இருளுறு கூந்தலா ளென்னை*
*அருளுறச் செயின் நுமக் கறனுமா ரதுவே''– (கலித்.140:32-34)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். தலைவன் கண்டோரிடம் கூறுவனவாக அமைந்த இக்கூற்றுகள் ஊரவர் முன் தலைவன் தான் விரும்பும் பெண்ணைக்கூறி அவளை மணம் முடித்துத் தர வேண்டும் என வேண்டிக் கொள்ளும் இயல்பை வெளிப்படுத்துகின்றன.

**மணம் நிகழ்விடம்**

சங்க காலத் திருமணங்கள் பெண் வீட்டிலேயே நடைபெற்றுள்ளன. இதனை,

*''வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்*
*கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுந்து*
*பேரிற் கிழத்தி யாகவெனத் தமர்தர*
*ஓரிற் கூடிய உடன்புணர் கங்குல்''– (அகநா.86:17-20)*

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கும். இதில் தமர் தந்த இடமாகவும் முதல்நாள் கூட்டம் வைக்கப்பட்ட இடமாகவும் தாய் இல்லமே காட்டப்பட்டுள்ளது.

*''தமர்நமக் கீத்த தலைநாள் இரவின்*
*உவர்நீங்கு கற்பினெம் உயிருடம்படுவி''– (அகநா.136:118-19)*

எனத் தமர் தந்த முதல்நாள் இரவின் சூழல் காட்டப்பட்டுள்ளது.

*''நனைவிளை நறவின் தேறல் மாந்தி*
*புனைவினை நல்லிற் றருமணல் குவைஇப்*
*பொம்ம லோதி யெம்மகள் மணனென*
*வதுவை யயர்ந்தனர் நமரே''– (அகநா.221:1-4)*

எனும் அகப்பாடலும் பெண்ணில்லத் திருமண ஏற்பாட்டையே காட்டுகின்றது. “எருமைப் பெடையொடு எமர் ஈங்கு அயரும் பெருமணம்”– (கலித்.114:13-14) எனக் கலித்தொகைத் தலைவி சுட்டுவதும் தாய்வீட்டில் நடந்த திருமண ஏற்பாட்டை வெளிப்படுத்துகின்றது. உடன்போக்கில் சென்ற தலைவி திரும்பிவந்து தன் இல்லத்திலேயே திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்பதை,

*“நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்*
*எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச்*
*சொல்லி னெவனோ மற்றே வெள்வேல்*
*மையற விளங்கிய கழலடிப்*
*பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே”– (ஐங்.399)*

எனும் ஐங்குறுநூற்றுப்பாடலடிகளும் தெரிவிக்கின்றன. உடன்போக்கில் சென்ற தலைவிக்கான சிலம்பைக் கழற்றுவதாகிய சடங்கைத் தலைவனின் தாய் தன் வீட்டில் நடத்திக் கொண்டாலும் வதுவையாகிய நல்ல மணத்தைத் தம் இல்லத்திலேயே நடத்தட்டும் எனக் கூறும் நற்றாய் கூற்று பெண் இல்லத்தில் திருமணம் நடப்பது சங்கச் சமுதாய நடைமுறையாக இருந்துள்ளதை வெளிப்படுத்துகிறது.

*“சிலம்பு கழீஇய செல்வம்*
*பிறருணக் கழிந்தவென் னாயிழை”– (நற்.279:10-11)*

எனும் நற்றாய் கூற்றில் சிலம்பைக் கழற்றுதலாகிய சடங்கும் தாய் இல்லத்தில் தான் நடைபெறும் அதைப் பிறர் இல்லத்திலே நடைபெறும்படி நடந்து கொண்டாளே எனும் செய்தி பெறப்படுகிறது. தாய் இல்லத்தில் சிலம்பைக் கழற்றுதலாகிய சடங்குடன் திருமணம் நடைபெறும் என்பதை,

*“அரும்சுரம் இறந்தஎன் பெருந்தோட் குறுமகள்*
*திருந்துவேல் விடலையொடு வரும்எனத் தாயே*
*புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி*
*மனைமணல் அடுத்து மாலை நாற்றி*
*உவந்து இனிது அயரும் என்ப யானும்*
*.............................................................*
*எம்மனை முந்துறத் தருமோ*
*தன்மனை உய்க்குமோ யாது அவன் குறிப்பே”*
*–(அகநா.195:1-5,18,19)*

எனும் பாடல் உடன்போக்கில் தலைவியை அழைத்துச் சென்ற தலைவனின் வரவை எதிர்பார்த்து அவன்தாய் இல்லத்தை அலங்கரித்த சூழலைக்

காட்டுகின்றது. இல்ல அலங்கரிப்போடு கூடிய எதிர்பார்ப்பு சிலம்புகழி நோன்பை நடத்துவதற்காகவா? திருமணத்தை நடத்துவதற்காகவா என்பது பாடலடிகளால் தெளிவுபடவில்லை. இந்தப் பாடல் தன் மகள் தன் மனைக்குத் தான் வர வேண்டும்; தன் வீட்டில்தான் திருமணம் நடைபெற வேண்டும் என்ற நற்றாயின் விருப்பத்தையும் வெளிப்படுத்துவதாகவும் கொள்ள இயலும்.

**பெண்களுக்கு இருமணம் இயல்பன்று**

சங்க காலத்தில் இருதார மணங்கள் எங்கும் கண்டிக்கப்படவில்லை. தலைவன் தலைவியுடன் மட்டுமின்றிப் பரத்தையுடனும் தொடர்பு கொண்டிருந்த நிலை பல பாடல்களில் இடம் பெற்றுள்ளது. ஆனால் பெண்கள் இரு மணம் புரிந்ததாகச் சங்கப் பனுவல்களைப் படைத்த புலவர் பெருமக்கள் எவ்விடத்திலும் பாடவில்லை. பெண் ஒருத்தி மனதால் ஒருவனை நினைத்துவிட்டால் அவனையே கணவனாக அடைவாள். இது சங்க மரபு ஒழுக்கமாகப் பின்பற்றப்பெற்றது. காதல் ஒழுக்கத்தில் ஈடுபட்ட தலைவியை வேறு ஒருவனுக்கு மணம் முடிக்கப் பெற்றோர் ஏற்பாடு செய்ய அதனை ஏற்காத தலைவி தோழியிடம்

*“.................................. அலர்த்த*
*விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்*
*இருமணம் கூடுதல் இயல்பன்றே”–கலித்.114:19-21*

என்று கூறுகிறாள். தான் நினைத்தவனைத் தவிர பிறரை ஏற்றுக் கொள்ளாத தலைவியின் கூற்று பெண்களின் கற்புநெறியை இல்லற ஒழுக்கத்தை உணர்த்துகிறது. இது சங்ககாலத் தமிழ்ப் பெண்களின் விழுமியம்சார்ந்த ஒழுக்கநெறியாகும்.

**குடும்ப வாழ்க்கை**

திருமணத்திற்குப் பின் ஆணும் பெண்ணும் மக்கட்பேறு பெற்றுக் குடும்பப் பிணைப்பை வலுப்படுத்துகின்றனர். மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை அவனோடு தொடர்ச்சியாகத் தொடர்புடையது குடும்பமேயாகும். இது மக்களின் உயிரியல், உளவியல், வாழ்வியல் சார்ந்த அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்கிறது. அதனாலேயே குடும்பம் என்னும் அமைப்பு இடம், காலம் அனைத்தையும் கடந்து எல்லாப் பண்பாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகளாவிய பண்பாகத் திகழ்கிறது. இக்குடும்பம் குடிவழியைப் பின்பற்றும் வழிமுறையைப் பொறுத்து உறைவிட அமைப்பு அமைகிறது. திருமணத்திற்குப்

பின் மணமக்கள் எங்கு உறைவிடத்தை ஏற்படுத்திக் கொள்கிறார்கள் என்பதைப் பொறுத்தும் குடும்ப வகைகள் அமையும். ‘‘மர்டாக் அவரது இனக் குழுவியல் வரைபட (Ethnographic Atlas) ஆய்விற்குத் தொகுத்த தரவுகளைக் கொண்டு பொதுவாகக் காணக்கூடிய உறைவிட முறைகளை ஐந்து வகைகளாகப் பிரிக்கின்றார்.’’(4)

| வரிசை எண் | உறைவிட வகை | தங்கும் இடத்தின் விவரம் |
|---|---|---|
| 1. | தந்தையகக் குடும்பம் | மணமானோர் கணவனின் தந்தையின் வீட்டில் அல்லது அவருக்கு அருகில் தங்குவர். |
| 2. | தாயகக் குடும்பம் | மணமானோர் மனைவியின் தாயின் வீட்டில் அல்லது தாயின் அருகில் தங்குவர். |
| 3. | ஈரகக் குடும்பம் | மணமானோர் கணவன் அல்லது மனைவி ஆகியோருள் யாரேனுமொருவரின் பெற்றோருடன் அல்லது அவர்களுக்கு அருகில் தங்குவர். |
| 4. | புது உறைவிடக் குடும்பம் | மணமானோர் இருவரும் தத்தம் பெற்றோருடனோ அருகிலோ தங்காமல் தனியிடம் அமைத்து வாழ்வர். |
| 5. | மாமனகக் குடும்பம் | மணமானோர், கணவனின் அம்மாவின் உடன் பிறந்தாருடன் அல்லது அவருக்கு அருகில் தங்குவர். |

என வகைப்படுத்தியுள்ளார்.'' இவற்றில் சங்கத்தமிழரிடம் காணப்படுவது தந்தையகக் குடும்ப முறையாகும். ''குடும்பத்தின் தலைமைப் பொறுப்பானது பெரும்பாலும் குடிவழி (Descent) மரபுவழி (Inheritance) போன்ற இன்றியமையாத கூறுகளால் நிர்ணயிக்கப்படுகிறது. அவை தந்தை வழியில் அமையும் குடும்பம் தந்தைவழிக் குடும்பம் (Patrilineal Family) என்றும் தாய்வழியில் அமையும் குடும்பம் தாய்வழிக் குடும்பம் (Matrilineal Family) என்றும் கூறப்படும்.''(5)

சங்கத் தமிழரிடம் காணப்பட்ட குடும்பத்தின் உறைவிட அமைப்பு தொழில் முறைப் பங்களிப்பைப் பொறுத்து அமைகிறது. வேட்டையாடி உணவு சேகரிக்கும் குறிஞ்சி நில மக்களிடம் தந்தையக முறை பெருவழக்காக உள்ளது. வேட்டையிலும் காட்டுப் பொருள்களைச் சேகரிப்பதிலும் ஆண்கள் பெரிதும் ஈடுபடுகின்றனர். அவர்களுக்கு உதவியாகத்தான் பெண்கள் செயல்படுகின்றனர். இந்நிலையினை ஒவ்வொரு குறிஞ்சிநிலத் தொழில் முறைப் பாடல்கள் காட்டுகின்றன. இந்நிலையில் ஒவ்வொரு குறிஞ்சிநில இளைஞர்களும் திருமணத்திற்கு முன்னரும் பின்னரும் அவர்களின் பெற்றோர்களுடனோ, முதிய ஆடவர்களுடனோ வாழும்போது தான் வேட்டை நுணுக்கங்களையும் அவ்விடத்தின் வள ஆதாரங்கள் பற்றிய அறிவையும் பெற முடியும். அதனோடு காட்டு விலங்குகளின் கொடூரத் தாக்குதலிலிருந்து காப்பாற்றிக் கொள்ள ஒரு குடும்பத்தைச் சேர்ந்த ஆண்கள் அனைவரும் ஓரிடத்தில் தங்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இவ்வகைக் காரணங்களால் வேட்டையாடி உணவு சேகரிக்கும் இனக்குழு மக்களிடம் தந்தையக முறை வழக்கில் இருந்தன.

உற்பத்தி முறையே உறைவிட முறைகளுக்கு இன்றியமையாத காரணமாக அமைகின்றது. ஆண்களின் கூட்டு உழைப்பை முதன்மையாகக் கொண்ட முல்லைநில மக்களிடமும் தந்தையக உறைவிட அமைப்பு காணப்பட்டது. ஆயர்களில் ஆண்கள் கால்நடை வளர்ப்பின் ஒவ்வொரு செயலையும் கவனிக்க வேண்டியுள்ளது. தந்தையகக் குடிவழியில் ஆண்கள் ஓரிடத்தில் தங்கிப் பொருளாதாரச் செயற்பாடுகளில் ஈடுபடும்போது தான் வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி காண இயலுகிறது. அதனால் இவர்கள் தந்தையக உறைவிடம் கொண்டவர்களாகவும் பெண்களைக் காட்டிலும் ஆண்கள்

மிகுதியான தகுதியைப் பெற்றவர்களாகவும் உள்ளனர். புலவர்கள் இயற்றிய முல்லைநிலப் பாடல்கள் பெண்கள் ஆண்களைச் சார்ந்து வாழும் தன்மையுடையவர்கள் என்னும் கருத்தினை வெளிப்படுத்துகின்றன.ஆயர்குடிப் பொருளாதாரத்தினை நோக்க முல்லைநிலங்களில் தந்தையகக் குடிமுறை பின்பற்றப்பட்டிருப்பது விளங்கும்.

சங்க அக இலக்கியத்தில் காணப்படும் மருத நிலப்பாடல்கள் ஆண்கள் பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்டதையும் அதனை மனைவியானவள் கண்டித்து ஊடல் கொண்டதையும் பதிவு செய்யதுள்ளன. தந்தையகக் குடி முறையில் சொத்துரிமை, நில உரிமை ஆண்களைச் சார்ந்து வரும். அவ்வாறு இருக்க, குடும்பத்தின் தலைவனாகக் கருதப்படுபவன் பலபெண்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளும் பொழுது வாரிசுரிமைப் போராட்டம் ஏற்பட வாய்ப்புள்ளது. இதனால் தலைவனின் சொத்தில் பிளவு ஏற்படும். இக்காரணம் கருதித் தலைவி தன் புதல்வனுக்குத் தம் கணவனின் சொத்துரிமை முழுவதும் கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்தில் ஊடல் கொண்டிருக்க வேண்டும். இதனால் கணவனின் பரத்தமை ஒழுக்கம் மனைவியால் கண்டிக்கப்பட்டிருக்கலாம். பரத்தைக்குக் குழந்தை பெற்றுக் கொள்ளும் உரிமையில்லை என்று கூறும் சில அறிஞர்களின் கருத்தும் சிந்தனைக்குரியது. தலைவனின் விருப்பத்திற்கேற்ப பரத்தையாக வரித்துக் கொள்ளப்பட்டவள், பிற்காலத்தில் தலைவனின் சொத்துரிமையில் எந்தவிதப் பங்கும் கேட்கக் கூடாது என்னும் காரணம் கருதித் தடை விதிக்கப்பட்டிருந்தது. இவற்றிலிருந்து சங்ககால மருதநிலச் சமுதாயம் சொத்துரிமை, நிலவுடைமையை நோக்கி, ஆண்களுக்கு முன்னுரிமை கொடுக்கும் தந்தையக உறைவிட முறையைப் பின்பற்றியமை புலனாகும்.

நெய்தல் நிலப் பாடல்கள் தலைவனைச் சார்ந்து வாழ்கின்ற பெண்களின் நிலையை எடுத்தியம்புகின்றன. பாலைநிலப்பாடல்கள் சுரவழிச் செல்கின்ற ஆடவர்களின் பொருளாதார ஈட்டல் நாட்டத்தையும் அவர்களைப் பிரிந்து எண்ணி வாடும் மகளிரின் நிலையையும் எடுத்துரைக்கின்றன. இவைகளை நோக்க சங்ககாலத்தில் பெண்களை விட ஆண்களுக்கே முன்னுரிமைக் கொடுக்கப்பட்டதும் தந்தைவழிக் குடும்ப உறைவிட அமைப்பை எடுத்துரைப்பதும் விளங்கும்.

**குடும்பத்தில் குழந்தை வளர்ப்பு**

திருமணத்திற்குப் பிறகு ஆணும் பெண்ணும் குடும்பத்தின் அனைத்துப் பொறுப்புகளையும் ஏற்கத் தலைப்படுகிறார்கள். இன்பதுன்பங்களைப் பகிர்ந்து கொள்கிறார்கள். தங்கள் கால்வழித் தொடர்ச்சிக்காகக் குழந்தைப்பேற்றைப் பெற விரும்புகிறார்கள். அவ்வாறு குழந்தை பிறந்தால் தான் இவர்தம் கணவன்- மனைவி என்னும் பிணைப்பு தந்தை – தாய் என்னும் புதிய தகுதியையும் அடைகிறது.

தந்தை – தாய் உறவுமுறைக்குப் பெண்கள் கருவுற்றிருக்கும் காலம் குறிப்பிடத் தகுந்த காலமாகும். மகளிர் கருவுற்றிருக்கும் போது புளிப்புச்சுவையுடைய பொருட்களை விரும்புவர். இதனை,

*“முந்நாட் டிங்கள் ணிறைபொறுத் தசைஇ*
*ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்*
*கடுஞ்சூல் மகளிர் போல................”– (குறுந்.287:3-5)*

என்ற பாடலடி கடுஞ்சூல் உற்ற மகளிர் குறித்துக் குறிப்பிடுகிறது. கன்னியாய் இருந்து பின் கொண்ட முதற்சூல் ஆதலில் ‘கடுஞ்சூல்’ என்று கூறப்பட்டிருப்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

“குடநாட்டு வீரக்குடி மகளிர் கருக்கொண்டால் அவர்க்கு கரைத்த பசும்புளியை ஒரு வாளியின் வழியாக வாயில் வார்ப்பதுஒரு சடங்காகப் பண்டுதொட்டு நடைபெற்று வருகின்றது. இதுவே பசும்புளி வேட்கைக்கு ஏதுவாகும்”[(6)] என்று இரா.இராகவையங்கார் சான்று காட்டுவார்.

இவ்வாறு குழந்தைப்பேறு அடைந்த பிறகு அக்குழந்தைக்குத் தாய்ப்பால் புகட்டி வளர்த்தனர். அவ்வாறு குழந்தைக்குத் தாய்ப்பால் புகட்டும் போது தலைவன் தலைவியைத் தழுவி மகிழ்ந்ததை,

*“வாள் நுதல் அரிவை மகன் முலை ஊட்டியத்*
*தானவள்..........................................................*
*நறும் பூந்தண்புற வணிந்த*
*குறும்பல் பொறைய நாடு”– (கலித்.85:20-36)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. பிள்ளைப்பேறு என்பது நடைமுறையில் ஆண்குழந்தை, பெண்குழந்தை எனப் பிறப்பது இயற்கை. அவ்வாறு இருக்க சங்க இலக்கியத்தில் ஆண்வழிச் சமுதாய அமைப்பை முன்னிலைப்படுத்தும் நோக்கில் பாடல்கள் பதிவாகியுள்ளன. தலைவன் தலைவி இருவரை மட்டுமே மையப்படுத்தியதாக அமைந்திருக்கும் கற்புப் பாடல்களில் பிள்ளைப்பேறு பற்றிக்

குறிப்பிடும்போது ஆண்பிள்ளைப் பேறே பேசப்பட்டுள்ளது. பரத்தையர் கூட ‘எம்மொடு புலக்கும் புதல்வன் தாய் (ஐங்.90:4),‘‘மேவன செய்யும் புதல்வன் தாய்க்கே (குறுந்.8:6)’’ எனப் புதல்வனை முன்னிலைப்படுத்தியே தாயை விளிக்கின்றனர். ‘‘புறவணி நாடன் புதல்வன் தாயே (ஐங்.405:4) எனச் செவிலியும் ‘‘அருந்ததி அனைய கற்பின், குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே (ஐங்.442:4-5),‘‘ஆகவனமுலை யரும்பிய சுணங்கின், மாசில் கற்பின் புதல்வன் தாய்’’ (அகநா.6:12-12) எனத் தலைவன் தலைவியையும் மகனை முன்னிலைப்படுத்தி அழைத்துள்ளனர். குறிஞ்சி நிலத்திலுள்ள குடும்பச்சூழலைக் குறிப்பிடும் போது புதல்வனுக்குப் பாலூட்டும் தாயையே புலவர் காட்டுகின்றார். இதனை,

*‘‘புதல்வனீன்ற பூங்கண் மடந்தை*
*முலைவா யுறுக்குங் கைபோற் காந்தட்*
*குலைவாய் தோயுங் கொழுமடல் வாழை’’– (நற்.355:1-3)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். பெண் குழந்தைக்குத் தாய் பால் புகட்டிய குறிப்பு இடம்பெறாதது ஆராயத்தக்கதாகும். குறிஞ்சி நிலத்தின் அமைப்பைப் பொருந்திய தொழிலின் பொருளாதாரம் ஆணைச் சார்ந்து இருந்ததால் ஆண்மகனுக்கு முன்னிலை அளிக்கப்பட்ட பாடல்களைப் புலவர்கள் பதிவு செய்துள்ளனர். முல்லைத்திணையில் புதல்வன் நிலை குறித்து,

*‘‘மறியிடைப் படுத்த மான்பிணை போலப்*
*புதல்வன் நடுவண னாக நன்றும்*
*இனிது மன்றவவர் கிடக்கை’’– (ஐங்.401:1-3)*

*‘‘மாத ருண்கண் மகன்விளை யாடக்*
*காதலித் தழீஇ யினிதிருந் தனனே’’– (ஐங்.406:1-2)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதில் கணவன் மனைவி இருவரும் மகனுடன் இருந்ததைப் புலவர் பதிவுசெய்துள்ளார். தலைவி தன் புதல்வனையும், தலைவனையும் தழுவிக் கிடந்ததை,

*‘‘புதல்வற் கவைஇயினன் தந்தை, மென்மொழிப்*
*புதல்வன் தாயோ இருவரும் கவைஇயினள்*
*இனிதுமன்ற அவர் கிடக்கை*
*நளி இரும் பரப்பின் இவ்வுலகுடன் உறுமே’’– (ஐங்.409:2-5)*

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கும். மருதநிலத்தினைச் சார்ந்த குடும்பச்சூழலைக் கூறும் இடத்தும்,

*‘‘புதல்வற் றழீஇயினன் விறலவன்*

*புதல்வன் தாயவன் புறம்கவைஇ யினளே''– (குறுந்.359:5-6)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. சங்க காலச் சமுதாயம் ஆண்வழிப்பட்ட சமூகமாதலின் ஆண்மக்கட்பேறு விழையப்பட்டது. பெண்பிள்ளை திருமணத்திற்குப் பிறகு கணவன் வீட்டிற்குச் செல்லக்கூடியவள் என்பதனை,

*''பலஉறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை,*
*மலையுளே பிறப்பினும் மலைக்கு அவைதாம் என் செய்யும்?*
*நினையுங்கால், நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே*
*சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை*
*நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதாம் என் செய்யும்?*
*தேருங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே*
*ஏழ்புணர் இன்இசை முரல்பவர்க்கு அல்லதை,*
*யாழுளே பிறப்பினும் யாழ்க்கு அவைதாம் என் செய்யும்?*
*சூழுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அனையளே*
*என ஆங்கு*
*இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்''– (கலித்.9:12-22)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும். இதில் பெண்கள் பிறந்தகத்துக்குச் சொந்தமில்லை. அவர்களால் பிறந்த வீட்டிற்குப் பயனில்லை என்ற கருத்து பதிவு செய்யப்பட்டுள்ளது. சங்க காலச் சமுதாயம் தந்தைவழிக் குடும்பமுறையைப் பின்பற்றியதால் ஆண்மக்கட் பேற்றிற்கு முக்கியத்துவம் அளித்துள்ளது. மங்கல மகளிரைப் பற்றிப் பேசும் சூழலில் அவர்கள் ''புதல்வற் பயந்த திதலை இவ்வயிற்று, வாலிழை மகளிர் நால்வர்''– (அகநா.86:11-12) என மகனை முன்னிலைப்படுத்திப் புகழப்பட்டுள்ளனர். பரத்தையிற் பிரிந்து சென்ற தலைவனுக்கு வாயில் நேரும் சூழலிலும்,

*''உடன்றனள் போலும்நின் காதலி எம்போற்*
*புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து*
*நெல்லுடை நெடுநகர் நின்னின் றுறைய*
*என்ன கடத்தளோ....................''– (அகநா.176:18-21)*

என மகனைப் பெற்ற தாயாகவே மனைவி காட்டப்பட்டுள்ளாள்.

*''கடவுட் கற்பொடு குடிக்கு விளக் காகிய*
*புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்*
*நன்னராட்டி ............................''– (அகநா.184:1-3)*

எனக் கற்புடைப் பெண்டிர் குலத்திற்கு விளக்காகிய மகனைப் பெற்றமையை முன்னிலைப்படுத்தியே காட்டப்பட்டுள்ளனர்.

**பரத்தமையும் கற்புக் கோட்பாடும்**

சங்ககாலம் என்பது இனக்குழு மக்களிடத்து நிலவுடைமை மாற்றம் தோற்றம் பெற்றகாலம் என்பது அறிஞர் பலரின் கருத்து. மானிடவியலாளர்கள் குறிப்பிடும் மனிதனின் இனக்குழு அமைப்பானது ஆரம்ப காலக்கட்டத்தில் எந்தவிதக் கட்டுப்பாடுமின்றி யாரும் யாருடனும் பாலியல் உறவுக் கொள்ளலாம் என்ற நிலையிலிருந்தது என்பர். பின் பண்பட்ட சமுதாயமாக வளர்ச்சிப் பெற்ற பிறகு ஓவ்வொரு இனக்குழுவினரும் அவர்களுக்குள் பாலியல் குறித்த தடைக்காரணிகளை வகுத்தனர். இது ஒருகாலக்கட்டம். சங்ககாலம் என்பது பண்பட்ட வளர்ச்சி நிலைச் சூழலைக் கொண்ட சமுதாயமாகும். சங்க இலக்கியங்களில் செம்மைப்படுத்தப்பட்ட கணவன் மனைவி பாலியல் முறை ஒருபுறம் காட்டப்பட்டுள்ளது. அதே சமயத்தில் மறுபுறம் பரத்தமை ஒழுக்கமும் காட்டப்பட்டது. இ∴து ஆரம்பக்கால மனிதர்களிடம் இருந்த பாலியல் தொடர்பான எச்சத்தைக் காட்டுகிறது. சங்க காலம் நிலவுடைமைச் சமுதாயமாக இருந்து ஆண்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளது. ஆகையால் ஆண்கள் பரத்தமை ஒழுக்கம் உடையவர்களாக இருந்துள்ளனர்.

ஒரு புறம் குடும்பப் பெண்களுக்குக் கற்பு நெறிக் கோட்பாடு வாரிசுரிமைக்காக வகுக்கப்பட்டிருக்கிறது. மறுபுறம் பெண்கள் பரத்தமை வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளனர். இவர்களுக்குக் குழந்தைப்பேறும் மறுக்கப்பட்டுள்ளது. பரத்தையர் சேர்க்கை ஊரார் பேசும் அலரைத் தோற்றுவிப்பதை,

*“................................ பொரி எனப்*
*புன்கு அவிழ் அகன்துறைப் பொலிய ஒன்றுதல்*
*நறுமலர்க்கு அணவரும் குறும்பல் கூந்தல்*
*மாழை நோக்கின் காழ் இயல் வன முலை*
*எ∴குடை எழில் நலத்து ஒருத்தியொடு நெருநை*
*வைகுபுனல் அயர்ந்தனை என்ப அதுவே*
*பொய்புறம் பொதிந்து, யாம் கரப்பவும் கையிகந்து*
*அலர் ஆகின்றால் தானே ..........”– (அகநா.116:5-12)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதனால் பரத்தையர் ஒழுக்கம் ஆண்களால் மேற்கொள்ளப்பட்டதையும், அது ஊர் மக்களால் இகழப்பட்டதையும் நோக்க இருவேறு கருத்துக்களும் செயற்பாடுகளும் நிலவிய சமுதாயத்தைக் காண முடிகிறது. தலைவன் பரத்தையை விட்டுப் பிரிந்து செல்லும் நிலையில் பரத்தை,

*"நின்*
*மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ*
*.....................................................................*
*வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்*
*வஞ்சி யன்னவென் நலந்தந்து சென்மே"– (அகநா.396:14-19)*

எனத் தன் இளமை நலத்தை மீளத் தந்துவிட்டுச் செல்லுமாறு தலைவனிடம் கேட்கின்றாள். இது ஆண்கள் பரத்தையிடம் நெடுங்காலம் நலம் துய்த்து, பின் அவளைவிடுத்து மனைவியை நாடும் நிலையைப் புலப்படுத்துகிறது. ஆண்கள் தம் பாலியல் தேவைக்காகப் பரத்தையிடம் தொடர்பு கொண்டனர். அதற்காகவே பரத்தையர் உருவாக்கப்பட்டனர். பரத்தையின் குழந்தைப்பேறு உரிமை மறுக்கப்பட்டுள்ளது. பரத்தையர் அடிப்படைத் தேவைக்களுக்காக ஆணைச் சார்ந்து வாழ்ந்துள்ள பரத்தையர் பெண்கள் பிறகு கைவிடப்படும் சூழலைச் சங்கப் பனுவல்கள் காட்சிப்படுத்துகின்றன. குடும்பத்தில் மனைவியாக இருப்பவளுக்குக் கற்பு என்ற கோட்பாடு வகுக்கப்பட்டிருந்தது.

*"கடவுட் கற்பின் மடவோள்"– (அகநா.314:15)*
*"கடவுட் கற்பொடு குடிக்கு விளக் காகிய*
*புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின் நன்னராட்டி"–(அகநா.184:1-3)*
*"முல்லை சான்ற கற்பின் மெல்லியல்"– (அகநா.274:13)*

என்ற பாடலடிகள் மூலம் குடும்பத்தில் உள்ள மனைவியாகப்பட்டவளின் வாரிசை இனம் காண்பதற்காகக் கற்பு கோட்பாடு வகுக்கப்பட்டுக் கட்டுப்படுத்தியமை புலனாகும். அவ்வாறு கற்புநெறி விதிமுறைகளைக் கடைப்பிடிப்பவர் கடவுளுக்கு நிகராகப் போற்றப்படுவாள் என்னும் கருத்தைத் தோற்றுவித்தது.

ஆண் உடைமைக்கு உரியவனாக ஆகும் போது தமக்குரிய சொத்தினைத் தனக்குப் பிறகு தன் வாரிசுக்குக் கொடுக்கவேண்டும் என்னும் எண்ணத்தின் விளைவே ஒரு தார மணமுறை. இதனால் தனக்குரிய வாரிசையும் இனங்காண முடியும். சொத்தும் பாதுகாக்கப்படும். வாரிசை இனங்காண வேண்டுமெனில் பெண்களைக் கட்டுக்குள் வைத்திருக்க வேண்டும். இவ்வாறான சூழலில் தான் பெண்ணிற்குப் பல சமூகக் கட்டுக்களை ஆண்கள் கொணர்ந்தனர். கற்பு வலுவான கோட்பாடாகத் தமிழ்ச் சமூகத்தில் கால் கொண்டது.

வாரிசை இனங்கான மனைவிக்குக் கற்பு நெறியும், காமக்கிழத்தி (குறுந்.370) பரத்தையரைத் தம் ஆசைக்குப் பயன்படுத்திக் கொண்டு மக்கட்பேறு மறுக்கப்பட்டதையும் நோக்க சங்க காலக் குடும்பச்சூழல் ஆணின்

கட்டுப்பாட்டிற்குள் அடங்கிய தந்தைவழி குடும்ப அமைப்பாகத் திகழ்ந்திருப்பது விளங்கும்.

**உறவுமுறை**

சமுதாயக்குழு அமைப்பிற்கு உறவுமுறை அடிப்படையாக அமைகின்றது. உறவுமுறை அமைப்பு உயிரியல் கூறுகளை அடிப்படையாகக் கொண்டது. உறவுமுறைச் சொற்கள் சமுதாயப் பண்பாட்டு முறைகளைத் தெளிவாக வெளிப்படுத்துவன ஆகும். அவை சமுதாயத்தின் அமைப்பினைப் படம் பிடித்துக்காட்டுவதாக அமைகின்றன. ‘‘உறவு முறைச் சொல்வழக்கு மக்களின் உறவு நிலை, திருமண முறை, உறைவிட முறை, அதிகார முறை, நடத்தை முறை, மரபுரிமை, குடிவழி போன்ற பல சமுதாயக் கூறுகளின் தன்மைகளை உள்ளடக்கி நிற்கிறது.’’[7] குடும்பத்தில் குழந்தைகள் பிறக்கும்போது ஒரு புதுவகையான உறவு தோன்றுகிறது. பெற்றோருக்குப் பிள்ளைகளும், அப்பிள்ளைகளுக்குப் பிள்ளைகளும் தோன்றும் போது இவ்வனைத்து உறுப்பினர்களும் குடும்பம் என்னும் நிறுவனத்தில் இரத்த உறவால் பிணைக்கப்பட்டவர்கள் ஆகின்றனர். இவ்வகையில் ‘‘இவர்களிடம் அமையும் உறவு இரத்த உறவு (consanginity) எனப்படும். திருமண நிகழ்வால் ஏற்படும் உறவு மணஉறவு (Affinity) எனப்படும்.’’[8] தனிக்குடும்பம் என்னும் நிலையில் தொடங்கும் இரத்த உறவு குடும்பத்தின் அளவு பெருகப் பெருக அதன் எல்லையும் விரிகிறது. இரத்தவழி உறவும் நேர்வழி உறவு, கிளைவழி உறவு என இருவகைப்படும். ஆண்தலைமை உறவுமுறை,



மகன்



பேரன்

என அமையும். இரத்த உறவு நேர்வழி உறவு முறையாகும். இந்நேர் வழி உறவினர்களோடு உடன்பிறந்தார் வழி உறவு தழைப்பது கிளைவழி உறவு முறையாகும். ஒரு நபருக்கு உள்ள சிற்றப்பா, பெரியப்பா, அத்தை, அண்ணன், அக்காள், தங்கை, தம்பி, பேரன், பெயர்த்தி போன்றன இவ்வகையில் அடங்கும். நேர்வழி உறவானது முப்பாட்டன், பாட்டன், தந்தை, மகன், பேரன், பேத்தி, கொள்ளுப் பேரன், கொள்ளுப் பேத்தி என இன்னும் மேலும் கீழும் விரிந்து செல்லும். அவ்வாறே நேர்வழி இரத்த உறவினர்களோடு பிறந்த கிளைவழி உறவினர்களும் இரத்தவழிப் பிணைப்பைக் கொண்டவர்களாக விரிந்து நிற்பதால் தலைமுறை தோறும் இந்த உறவு கிளைவிட்டுப் பெருகுகின்றது. இக்கிளைவழி உறவினர்களுக்குள் நிலவும் தொடர்பைக் கொண்டு உறவினர்கள் முதல்நிலை உறவினர்கள், இரண்டாம் நிலை உறவினர்கள், மூன்றாம் நிலை உறவினர்கள் என்று அதன் பின்னரும் விரிந்து நிற்பவர்கள் நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என தூரத்து உறவினர்கள் என்று வகைப்படுத்திச் சொல்ல முடியும். இவ்வுறவினர்கள் அவர்களுக்குள் நேரடியாகவும், மறைமுகமாகவும் தொடர்புக் கொண்டிருப்பர். “உறவினர்களின் நெருக்கத்தைப் பொறுத்து உறவுமுறை நேரடி உறவு (Direct Relation) மறை உறவு (Indirect Relation) எனும் இரண்டு நிலைகளில் காணப்படுவதாக சித்திரபுத்திரன் கூறுவார்.”(9) இவ்விரண்டு உறவுகளும் வம்சவழி அல்லது மரபின் தூரத்தைப் பொறுத்து அமைகின்றன. மனிதர்களின் சமுதாயத்தில் காணப்பட்ட உறவுநிலையை இந்திய அளவில் 1) முதல்நிலை (Primary Kinship), 2) இரண்டாம் நிலை (Secondary Kinship),3) மூன்றாம் நிலை (Teritary Kinship),(10) என மூன்றாக வகைப்படுத்துவர் கே.சிங். மானிடவியல் அறிஞரான மர்டாக்கும் உறவுமுறையை,

“1. முதல் நிலை உறவு - அடிப்படை உறவு (Primary Relation)
2. இரண்டாம் நிலை உறவு (Secondary Relation)
3. மூன்றாம் நிலை உறவு (Tertiary relation)
4. தூரத்து உறவு (Distant Relation)”(11)

என நான்காகப் பாகுபடுத்துவர். அவரவர் பார்வையில் மானிடவிலாளர்கள் உறவுநிலைப் படிநிலைகளை அடுக்கிக் கொண்டே செல்வர். சங்க இலக்கியம் கூறும் உறவுச்சொற்களை மேற்கண்ட உறவுநிலைப் படிநிலைகளோடு ஒப்பிட்டு அறிதல் அவசியம்.

**முதல்நிலை உறவினர்கள்**

“பேசுநருக்கு எவரொருவர் எவ்வித இடைத்தொடர்பும் இல்லாமல் நேடியாக உறவு பெற்றுள்ளார்களோ அவர்கள் முதல்நிலை உறவினர்கள் எனக் கூறப்படுவர். இவ்வகை உறவினர்கள் மணவழி உறவாலும் இரத்தவழி உறவாலும் அமைவர். (உ.ம்) : ஒருவரின் தந்தை, தாய், சகோதரர்கள், சகோதரிகள், மனைவி, மகன், மகள் ஆகியோர் முதனிலை உறவினர்களாவர். இவ்வுறவு இரத்தவழியில் அமைவதால் இவர்கள் இரத்தவழி முதல்நிலை உறவினர்கள் (Primary Consanguiness) எனப்படுவர். ஒருவரின் மனைவியும் அவருக்கு முதனிலை உறவினரே. இவ்வுறவு மணவழியில் அமைவதால் இவர் மணவழி முதல்நிலை உறவினர் (Primary Affinal) எனப்படுவர். ஒருவருக்கு முதனிலை உறவினர்கள் எழுவராக அமைவர் என மர்டாக் கூறுகிறார்.”(12)

அவ்வெழு வகை முதனிலை உறவினர்களுள் அடங்கும். தந்தை, தாய், அண்ணன், தம்பி, அக்காள், தங்கை, மனைவி, மகன், மகள் குறித்து சங்க அகத்திணைப்பாடல்கள் சுட்டுகின்றன. தந்தை குறித்து எந்தை[13], நுந்தை[14], தந்தை[15] என்ற சொற்கள் இடம்பெறுகின்றன. தாய் என்னும் பொருளை உணர்த்தும் ஞாய்[16], யாய்[17] என்னும் முன்னொட்டு உறவுமுறைச் சொற்கள் சங்க அகத்திணைப்பாடல்களில் பதிவாகியுள்ளன. தாய்[18] எனும் சொல் பெரும்பாலும் படர்க்கைப் பொருளில் பதிவாகியுள்ளது. அன்னை என்ற பொருளில் ‘அஞ்ஞை’ என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

*“மென்றோள் அஞ்ஞை சென்ற ஆறே”– (அகநா.15:19)*

*“அமர்க்கண் அஞ்ஞையை யலைத்த கையே”– (அகநா.145:22)*

என்பன உணர்த்தும். இப்பாடல் அடிகளுக்கு உரையாசிரியர்கள் அன்பு மிகுதியால் தம் மகளை ‘அஞ்ஞை’ என்று அழைப்பர் என்று பொருள் தந்துள்ளனர்.

அண்ணன் எனும் பொருளில் சங்க இலக்கியத்தில் முன், ஐ, ஐயன்மார் என்னும் சொற்கள் பதிவாகியுள்ளன.(19)அண்ணன் குறித்து என்னையர்,

நின்னையர், தன்னையர் என முறையே பதிவாகியுள்ளன.[(20)]இவற்றால் சங்க நூல்களில் அண்ணனைக் குறிக்கத் தனி உறவுமுறைச் சொற்கள் வழக்கிலில்லை என்பதும் 'ஐ' எனும் சொல்லும் அதன் அடியாகத் தோன்றிய சொற்களுமே அண்ணன் உறவைக் குறிக்கும் உறவுமுறைச் சொற்களாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில் அக்காள் உறவுமுறையைக் குறிக்கும் சூழல்கள் அதிகம் இல்லை. எவ்வை எனும் சொல் மட்டும் அக்காள் உறவுமுறையில் வழங்கப்பெற்றுள்ளது.[21]

தங்கை என்னும் சொல் 'நும் தங்கை' எனும் பொருளில் நுங்கை எனப் பயின்று வந்தள்ளது.[22]

கணவன் என்பவன் தலைவியை மணந்தவன் ஆவான்.[23] கணவன் என்னும் பொருள்பட கொழுநன் என்ற சொல்லும் பயின்று வந்துள்ளது.[24]

மனைவி உறவுமுறை குறித்து மனை,[25] மனைவி,[26] மனை முதல்,[27]மனையோள்,[28] மனையுறைமகளிர்,[29] பெண்டிர்,[30] பெண்டு,[31] இற்கிழத்தி,[32] போன்ற சொற்கள் பயின்று வந்தள்ளன. மனையின் ஆட்சிக்குரியவள் தலைவி என்னும் பொருள்பட மனை, மனைமுதல், மனையோள், மனைவி என்ற சொற்கள் பயின்று வந்துள்ளன.

சங்க அகத்திணைப்பாடல்களில் மகன் உறவைக் குறிக்கப் புதல்வன்,[33] மகன்[34] எனும் இரண்டு சொற்கள் மிகுதியாக வழங்கப்பெற்றுள்ளன.சங்க அகநூல்களில் மகள் உறவுமுறையைக் குறிக்க மகள்[35] எனும் சொல் பரவலாகக் கையாளப் பெற்றுள்ளது. இளையோள்[36] எனும் பொதுச் சொல்லும் பதிவாகியுள்ளது.

**இரண்டாம் நிலை உறவினர்கள்**

பேசுநரின் முதல்நிலை உறவினர்களுக்கு எவர் எல்லாம் முதல்நிலை உறவினர்களோ அவர்கள் எல்லாரும் பேசுநருக்கு இரண்டாம் நிலை உறவினர்கள் ஆவர். "மர்டாக் 32 உறவினர்களை வகைப்படுத்துவார்."[37]

மகளின் புகுந்த வீட்டிற்குச் சென்று திரும்பிய செவிலியின் கூற்றில் மருமகன் வீட்டாரின் உடன் பிறப்புகள் பற்றிப் பேசமால் விடுப்பதும் சிந்தனைக்கு உரியது. மர்டாக் கூறும் இரண்டாம் நிலை உறவுப் பெயர் வகைப்பாட்டில் இருபத்து நான்காவது உறவுமுறையான கணவனின் மனைவியைக் குறிக்கும்

காதற்பரத்தை, காம க்கிழத்தி என்ற பெயர்ச்சொல் சங்க அக இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கிறது. இதனை,''காமக்கிழத்தி இரண்டாம் மனைவி போல்வாள். இவளைப் பின்முறைவதுவைப் பெருமனைக் கிழத்தி என்பர். அதனால் மனைவி போல் சிறிது கூடுதலாய்ப் பேசுவாள். ஆயினும் மனைவியின் உரிமை இவளுக்கில்லை. அதனால் மனைவிமீது பொறாமைப்படுவாள்''[38]எனக் காமக்கிழத்தியின் உரிமை குறிப்பிடப்பட்டுள்ளது.

காமக்கிழத்தியாரிடத்துப் பரத்தமை வெறுப்பு இருந்ததைக் கலித்தொகைப் பாடல்கள் காட்டுகின்றன.

*''ஒருநீ பிறரில்லை யவன்பெண்டி ரெனவுரைத்துத்*
*தேரொடுந் தேற்றிய பாகன்வந் தீயான்கொல்*
*ஓரிற்றான் கொணர்ந்துய்த்தார் புலவியுட் பொறித்த புண்*
*பாரித்துப் புணர்ந்தநின் பரத்தமை காணிய'' - (கலித்.71:9-12)*

என்ற தலைவனின் பரத்தமையைத் தலைவியைப் போலவே இகழ்ந்துரைத்துள்ளாள் காமக்கிழத்தி. கலித்தொகையின 78-ஆம் பாடலும் பரத்தையர் சேரியில் சென்றுவந்த தலைவனோடு ஊடிய காமக்கிழத்தி ஊடல் தீர்கின்றாள் என்று கூறிய கூற்றில் காமக்கிழத்தியின் உறவுமுறை நெருக்கம் வெளிப்படுகிறது.

**கணவனுக்கு இரண்டாம் திருமணஉரிமை**

முதல் மனைவிக்குக் குழந்தைப்பேறு இல்லாத பொழுது கணவன் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளும் உரிமை உண்டு. அந்த இரண்டாம் தாரத்தை முதல் தாரம் மனகிழ்வோடு ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதை,

*''நின்னினும் சிறந்தனள் எமக்கே நீநயந்து*
*நன்மனை அருங்கடி அயர*
*எம் நலம் சிறப்பயாம் இனிப்பெற் றோளே''– (ஐங்.292:3-5)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதில் மகற்பேற்றுக்காகக் கணவன் மறுமணம் செய்து அழைத்து வந்தவளை முதல் மனைவி தன் தங்கையாக ஏற்று விளக்கு முதலிய மங்கலப் பொருள்களுடன் எதிர்சென்று வரவேற்றமை குறிப்பிடப்பட்டுள்ளது.

**மூன்றாம் நிலை உறவினர்கள்**

பேசுநரின் இரண்டாம் நிலை உறவினர்களுக்கு யார் எல்லாம் முதல்நிலை உறவினர்களோ அவர்கள் எல்லாம் பேசுநருக்கு மூன்றாம் நிலை உறவினர்கள் ஆவர். பேசுநருக்கு மூன்றாம் நிலை உறவினர்களைத் தொடர்புபடுத்த இடையில்

இரண்டு உறவுநிலைகள் தேவைப்படுகின்றன. (எ.கா.) பேசுநரின் கொள்ளுப் பாட்டன், கொள்ளுப்பேரன், மனைவியின் தந்தையின் தந்தை, தந்தையின் சகோதரரின் மனைவி எனப் பொதுவாக ஒருவனுக்கு 151 வகையான மூன்றாம் நிலை உறவினர்கள் அமைவர் என மர்டாக் கூறுகிறார். உறவுமுறைச் சொற்கள் குறித்து சங்கத் தமிழரிடம் பார்க்கும் பொழுது முதல்நிலை உறவுகள் குறித்து மட்டும் பேசப்படுகின்றன. இதனை கருத்தில் கொண்டு நோக்கின் சங்ககாலச் சமுதாய மக்களிடம் தனிக்குடும்ப அமைப்பு காணப்பட்டது என எண்ணத் தோன்றும். ஆனால் உள்நோக்கி ஆராயும் பொழுதுதான் தெள்ள தெளிவான தெரிவது இனக்குழு அடிப்படையில் அமைந்த வாழ்க்கை முறை. இவர்கள் தாங்கள் சார்ந்த நிலத்தின் அடிப்படையில் அமைந்த தொழில் முறையால் கூட்டுக்குடும்பமாக வாழ்ந்த முறை வெளிப்படும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என எந்நிலமாக இருந்தாலும் இவர்கள் தொழில் அடிப்படையில் கூட்டாகச் சேர்ந்து வாழ்ந்துள்ளனர்.

சங்ககாலப் புலவர்கள் தாங்கள் கூறக்கருதிய கருத்துக்கேற்ற களத்தையும் கதை மாந்தர்களையும் மட்டும் பாடலில் பதிவுச் செய்துள்ளனர். ஆகையால் அக்கதைக்கேற்ற கதை மாந்தர்களின் உறவுமுறை சொற்கள் மட்டும் சங்கப்பனுவல்களில் இடம் பெற்றுள்ளன. இக்கதை மாந்தர்களின் உறவுமுறைச் சொற்களை மட்டும் வைத்துக் கொண்டு சங்ககால தமிழரிடம் காணப்பட்டது தனிக்குடும்பம் என்று எண்ணுவது சரியான முறை அன்று.

இன்றைய சமுதாய சூழலில் கிராமம் சார்ந்த பகுதியில் பல உறவுமுறைச் சொற்கள் வழக்கத்திலும் பழக்கத்திலும் உள்ளன. முதல்நிலை உறவினர்களை உடன்பங்காளி என்பர். இரண்டாம்நிலை உறவினர்களை இரண்டாம் பங்காளி என்பர். மூன்றாம் நிலை உறவினர்களை மூன்றாம் பங்காளி என்றும் குறிப்பிடுவர். இவ்வாறாக இன்றைய தமிழ்ச் சமுதாயத்தினர் ஐந்து, ஆறு, ஏழு என ஏழாம் பங்காளி வரை வரையறுத்துக் கூறும் மரபு வழக்கில் உள்ளது. சங்க அகத்திணைப்பாடல்களில் காணப்படும் முதல்நிலை உறவுப்பெயர்ப் பதிவுகளைக்கொண்டு சங்ககாலத்தில் நிலவியது சிறுகுடும்ப அமைப்பே என்று முடிவுரைக்க முடியாது. ஏனெனில் அப்பாடல்கள் எழுந்த சமுதாயச் சூழலையும் உற்றுநோக்க வேண்டும். அகத்திணைப் பாடல்கள் பாடுவதற்குச் சங்கப்புலவர்கள் விதித்த விதிமுறையும் பொருள் கட்டமைப்பு கருதியும் இரண்டாம் மூன்றாம் உறவுமுறைப் பெயர்களின் பதிவுகள்

விடுபட்டிருக்க வாய்ப்புண்டு. சங்க இலக்கியப் பனுவல்கள் தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கண முறைப்படி அமைக்கப்பட்டுள்ளது என்பது அறிஞர் பலரின் கருத்து. தொல்காப்பியர் குறிப்பிடும் களவியல், கற்பியல், பொருளியல் நூற்பாக்களை இங்கு ஒப்பு நோக்குவது சாலச் சிறந்தது. இன்னார் இன்னாரோடுதான் இந்த வகையில், இந்த முறையில், இலைமறைகாயாகவும் நேரடியாகவும் கருத்தைக் கூற வேண்டும் என்ற இலக்கண அமைப்பு வகுக்கப்பட்டுள்ளது. அந்த இலக்கண அமைப்பில், தலைவன், தலைவி, பாங்கன், பாங்கி(தோழி) செவிலித்தாய், நற்றாய்,கண்டோர் எனக் கூற்று நிகழ்த்தும் இடங்களையும் கூற்று நிகழ்த்தும் முறையினையும் வரையறுத்து வைத்துள்ளார். இதன் அடிப்படையில் எழுந்த இலக்கியங்களிலும் இவர்கள் பற்றிய உறவுமுறைச் சொற்களே காணப்படுகின்றன.

**உறவுமுறைப் பெயர்களும் பண்பாட்டு விழுமியங்களும்**

ஒரு மனிதனின் பெயரினைக் கொண்டு ஒரு சமூகத்தின் இயங்குநிலையை அச்சமூகத்தில் வாழும் மனிதனின் இயங்குநிலையை உய்த்தறிய முடியும். மக்கள் பெரும்பாலும் பெயரிடும் போது இடுகுறிப் பெயராகவும் காரணப்பெயராகவும் பெயரிட்டுக் கொள்கின்றனர்.அவ்வாறு பெயரிடும்போது வழிபடும் தெய்வத்தின் பெயரினையும் தந்தை பாட்டன் பெயரினையும் இயற்கைப் பொருள்களை ஒட்டிய (மலை,நதி,செடி,மலர்கள்) பெயரினையும் தம் பிள்ளைகளுக்கு இட்டு வழங்குகின்றனர். தந்தையின் பெயரை மகனுக்கும் தாயின் பெயரை மகளுக்கும் இடுவது தொன்மையான தமிழ் மரபாகும். பாட்டன், பாட்டி பெயரைத் தலைமுறைக்குப் பெயர்த்து தன் மகனுக்கு சங்கத்தமிழர் இட்டு வழங்கினர். இதனாலேயே பெயரன், பெயர்த்தி என்னும் உறவுச் சொற்கள் உருவாயின என்று எண்ணத் தகும். இன்று தமிழர் இம்மரபினை மிக விரைவாக நெகிழ விட்டு வருகின்றனர்.

*''புணர்ந்த காதலியின் புதல்வன் தலையும்*
*அமைந்த உள்ளம் பெரிது ஆகின்றே*
*அகன் பெரும் சிறப்பின் தந்தை பெயரன்''– (ஐங்.403:2-4)*

என்ற பாடலடிகளில் உள்ள 'தந்தை பெயரன்' என்னும் சொல்லாட்சி தலைவனின் தந்தையின் பெயரினை தன் மகனுக்கு இட்டு வழங்கிய மரபினை விளக்கும். நற்றிணையின் 40–வது பாடலில் 'சிறந்தோன் பெயரன்'(9-12) என்பது தம் மூதாதையரின் பெயரையே குறிக்கிறது.

*"............................. தான் தன்*
*முதல்வன் பெரும் பெயர் முறையுளிப்பெற்ற*
*புதல்வன் புல்லிப் பொய்த்துயில் கொள்ளும்"– (கலித்.75:24-25)*

என்ற அடிகளில் தான் தன் தந்தையின் பெருமை மிக்க பெயரை முறையாகச் சூட்டியுள்ள தன் புதல்வனை அணைத்தவனாகப் பொய்த்துயில் கொண்டு துஞ்சுவன் என்ற பொருள் பெறப்படுகிறது. இங்கு தன் தந்தையின் பெயரைத் தம் புதல்வனுக்கு இட்டு வழங்குதல் பெருமைக்குரியதாகக் கருதப்படுகிறது. இங்கு தந்தையின் பெயர் இட்டு வழங்குதல் என்பது ஏறுமுகத் தலைமுறையால் வாழ்ந்தவரின் பெயரினை இறங்குமுறையில் வாழப்போகும் ஒருவருக்கு இட்டு வழங்கியமை நோக்குதற்குரியது. ஒரு தலைமுறை இடைவெளியில் வழங்கப்படுகிறது. முன்னோர் பெயரிடல் வழி இன்னார் இந்தக் கால்வழியினைச் சேர்ந்தவர் என்பதை அடையாளம் காணமுடியும். இம் முறை திருமண ஒப்பந்தத்திற்கும் வழி கோலுகிறது.

**தந்தை பெயரிடல்**

அனைத்துச் சமுதாயங்களிலும் நிலவும் மரபுமுறையை நான்கு வகைகளாக மானிடவியலாளர் பாகுபடுத்துவர். அவை,

1. இரு வழி மரபு (Bilateral or Double descent)
2. ஒருவழிமரபு (Unilineal descent)
3. ஈரியல்பு மரபு (Ambilineal or Cognatic descent)
4. இணைமரபு (Parallel descent)(39)

இந்நான்கில் தமிழரிடம் காணப்பட்டது ஒரு வழிமரபு. இவ்வொரு வழி மரபானது தந்தை வழி மரபாகவும் அமையலாம். தாய்வழி மரபாகவும் அமையலாம். ஒருவழிமரபு என்பது கால்வழியைப் பின்பற்றக்கூடியது."கால்வழி (Lineage) என்பது நன்றாக நினைவுபடுத்திப் பார்க்கக்கூடிய மூதாதையர் வழி குடிவழியைத் தொடர்புபடுத்திக் கூறும் உறவுக்குழுவைக் குறிக்கும். அக்குழுவில் உள்ளோர் அவர்களின் மூத்த மூதாதையரையும் அவருக்கடுத்து வந்த மூதாதையர்களையும் தெளிவாகச் சுட்டிக்காட்டுவர். தமிழ்ச் சமுதாயத்தில் கால்வழி என்னும் சொல் பரம்பரை, வம்சம், வகையறா போன்ற சொற்களாலும் குறிக்கப்படுகின்றன. ஒருகால்வழியைச் சேர்ந்த அனைவரும் ஒரு மூதாதையர் வழித் தோன்றியவர்கள் என்பதால் அவர்கள் அனைவரும் தம் கால்வழியைச் சேர்ந்தோரை மணந்து கொள்ளவியலாது. இதனால் கால்வழி என்பது ஒரு புறமணக்குழு (Exogamoua

group) என்று மானிடவியல் அறிஞரான பக்தவத்சல பாரதி கூறுவது ஒப்பு நோக்கத்தக்கது.''[40]

தந்தையின் பெயரினை வைத்தல் என்பது தந்தைவழிச் சமூக மரபினையும் தாங்கள் இந்த குலமரபினைச் சார்ந்தோர் என்பதனையும் வெளிப்படுத்துவதாகும். தந்தைவழிப் பெயரிடல் என்பது இக்குடியினர் இக்குடியினரோடு மணத்தொடர்பு கொள்ள முடியும். இக்குடியினரோடு மணத்தொடர்பு கொள்ளவியலாது என்னும் மணஉறவுமுறையினை வெளிக்காட்டப் பயன்படுத்தப்பட்ட உத்தி முறையாகும். மணஉறவுக் காரணம் கருதித் தம் தந்தையின் பெயரினை மகனுக்கு வைக்கும் முறையைப் பின்பற்றினர். மகள் வழித் தந்தையை அழைத்தல் என்பதும் இதன் காரணம் கருதியே ஆகும். இதனை,

*''.......................................... ஐயை தந்தை*
*மழை வளம் தரூஉம் மாவன்தித்தன்'' - (அகநா.6:3-4)*
*''தேன் நாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை''-(அகநா.58:5)*
*''அம்கலுழ் மாமை அ்.தை தந்தை''–(அகநா.96:12)*
*''நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்''– (நற்.323:6)*

என்ற பாடலடிகள் மகள் வழி அழைத்தல் முறையால் புறமணத்தை எடுத்துரைக்கிறது.

பெயரனுக்குத் தந்தையின் பெயரினை வைத்தலும் மகள்வழித் தந்தையை அழைத்தலும் தந்தைவழிச் சமூக மரபை விளக்குவதாய் உள்ளது.. ஒருகுடும்பத்தில் ஒரு மனிதனுக்குப் பல்வேறு பண்பாட்டுக் கூறுகள் கற்பிக்கப்படுகின்றன. அவ்வகையில் வழிபாட்டு முறையை முதன் முதலில் ஒரு மனிதனுக்குக் கற்பிப்பது குடும்பமாகும்.

**சங்கத்தமிழரின் வழிபாட்டு நம்பிக்கைகள்**

சங்ககாலத் தமிழ்மக்கள் வழிபாடு சார்ந்த நம்பிக்கைகள் கொண்டிருந்தனர். அவர்கள், அவர்களுக்கு முன் வாழ்ந்த முன்னோர்கள் கற்பித்த (வழிகாட்டிய) பண்பட்ட வழிபாட்டு நம்பிக்கைகளைப் பின்பற்றியவர்கள். சங்கத் தமிழரிடம் உள்ள வழிபாட்டு நம்பிக்கை மானிடவியல் சார்ந்த கோட்பாட்டின் வழிப் பொருத்திப்பார்க்கத் தக்கதாகும். அவ்வகையில் உயிரியம் என்னும் மனாக்கோட்பாடு, முன்னோர் வழிபாடு, குலக்குறியம் ஆகியவை அடங்கும்.

**உயிரியம் கோட்பாட்டின் தோற்றம்**

'ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக மானிடவியலறிஞரான ஆர்.ஆர்.மாரட் உயிர்ப்புச் சக்தியின் அடிப்படையில் நிலவும் நம்பிக்கையைக் கண்டறிந்தார். இதையே 'உயிரியம்' (Animatism) எனக் குறிப்பிட்டார். இது தொன்மைச் சமயத்தின் தோற்றத்தை விளக்க முற்பட்ட இரண்டாவது மானிடவியல் கோட்பாடாகும். மாரட் மெலனீசிய மக்களிடம் ஆய்வு செய்த போது அவர்கள் கொண்டிருந்த 'மனா'(mana) நம்பிக்கை அடிப்படையில் இக்கோட்பாட்டை உருவாக்கினார். மனா நம்பிக்கைகளின் அடிப்படையில் இக்கோட்பாடு உருவானதால் இது 'மனா நம்பிக்கை' (Manaism) என்றும் கூறப்படும். [41]

**மனா விளக்கம்**

'மனா' என்னும் மெலனீசியச் சொல்லிற்கு 'உயிர்ப்புத் தன்மையுடைய ஆற்றல் என்பது பொருள். இயற்கையாய் அமைந்துள்ள திறனைப் பெருமளவு மிகுதிப்படுத்தி அதன்மூலம் சாதாரண மனிதர்கள் சாதிக்க இயலாததைச் செய்ய வைக்கும் எந்த ஓர் ஆற்றலையும் 'மனா' என்று கருதுகின்றனர். மனித சக்திக்கு அப்பாற்பட்ட அனைத்துச் செயல்களையும் இயக்க வல்லது. இதன் தோற்றம் மனித உணர்வுகளுக்குப்பால் காணப்பட்டாலும் செயல்திறனாகவோ அசாதாரணமான மனிதன் செயல்களின் வழியாகவோ வெளிப்படும் இயல்புடையது. இந்த ஆற்றலை நம்பும் இம்மக்களின் கருத்துப்படி மனா, உலகம் முழுவதும் பரவலாக நிறைந்திருந்தாலும் சில மனிதர்களிடமும் பொருள்களிலும் மட்டுமே மிகுதியாகச் சேரவல்லது." [42]

**சங்கத்தமிழரிடம் மனா**

சங்கத் தமிழரிடம் உயிரியம் சார்ந்த அணங்கு, சூர், கடவுள் போன்ற வழிபாட்டு நம்பிக்கை காணப்பட்டது. இந்நம்பிக்கை மாரட் குறிப்பிடும் மனாக் கோட்பாட்டோடு பொருத்திப் பார்க்க வேண்டும். சங்க இலக்கியத்தில் அணங்கு,[43] சூர்[44] என்னும் சொல் அச்சம் என்ற பொருள் அடிப்படையில் பிறந்தது. அதன் வாயிலாக வருந்துதல் (அ) துன்புறுத்தல் என்ற பொருளில் கிளைத்துத் தெய்வத்தொடர்பு கொண்டு பலபடப்பயின்று வருகிறது. பொதுவாகத் தெய்வம் என்ற பொருளிலும் வருத்துதல் (அ) துன்புறுத்தல் என்ற பொருளிலும் பெருகி வருகிறது. தெய்வமகளிர், தீண்டி வருத்தும் தெய்வம், முருகன், தேவி, பேய், அச்சம் என்ற பொருள்களில் அருகி வருகிறது.

‘கடவுள்’(45) என்ற சொல்லாட்சி தெய்வ நம்பிக்கையுடன் பதிவாகியுள்ளது. கடவுள் என்ற பொதுச்சொல் இங்கு சிவன், முருகன், திருமால், தேவர், முனிவர், வெற்றித்திரு, கொற்றவை என்ற பலபொருள்களில் வருகிறது. “மனா ஆற்றல் உலகின் பிற சமுதாயங்களிலும் வெவ்வேறு பெயர்களில் குறிப்பிடப்படுகிறது. அமெரிக்கச் சமவெளிப் பழங்குடிகளும் வடஅமெரிக்காவில் அல்கான்குயின் மொழி பேசுவோரும் மனா ஆற்றலை ‘வாக்கன்’‘மனிட்டாவ்’என்று குறிப்பிடுகின்றனர். வடஅமெரிக்க இந்தியர்கள் சிலர் இதனை ஒரண்டா, ஆரன், வக்குவா எனவும் குறிப்பிடுகின்றனர்.”(46)

இந்திய மானிடவியலறிஞர் டி.என்.மஜூம்தார் மனா நம்பிக்கைக்கு ஒத்த வகையில் ‘போங்கா’ (Bonga) என்னும் ஆற்றலைக் குறிப்பிடுகிறார். போங்கா உயிர்ப்புச் சக்தி கொண்டதும் வடிவமற்றதுமாக வெளிப்படும் தன்மையுடையது. தாவரங்களுக்கும் விலங்குகளுக்கும் உயிர் கொடுக்கக் கூடியது. வளர்ச்சியைத் தூண்டக் கூடியது. மழை, புயல், வெள்ளம், கடுங்குளிர் தனிமனிதர்களுக்கிடையே காணப்படும் ஆற்றல் முதலானவற்றிற்குக் காரணமாக அமைவது. “ஹோ, முண்டர் போன்ற பழங்குடிகளிடையேயும் சோட்டா நாக்பூர் பகுதிப் பழங்குடிகளிடையேயும் போங்கா நம்பிக்கை உள்ளதாக மஜூம்தார் குறிப்பிடுகிறார். இவர் போங்காவை மெலனீசியரின் மனா கோட்பாட்டிற்கு இணையானது எனக் கூறுகிறார்”(47)

மனா ஆற்றல் ஒரேயிடத்தில் இருக்கக்கூடியதன்று. பல்வேறு பழங்குடி மக்களிடையே கிடைக்கப்பெற்ற இனக்குழுவியல் தரவுகளின்படி இந்த ஆற்றல் ஒருவரிடமிருந்து விடுபட்டு மற்றவருக்குச் செல்லும் தன்மை பெற்றது. இவ்வாற்றல் மனிதர்களிடமிருந்து எந்த நேரத்திலும் வெளியேறலாம். ஒரு மனிதனிடம் உள்ள மனா மற்றொரு மனிதனுக்கே செல்ல வேண்டும் என்பதில்லை. மனிதனிடமிருந்து பொருள்களுக்கும் பொருள்களிலிருந்து மனிதர்களுக்கும் இடம் பெயரும். இதனால் பொருள் மனா (Object Mana) என்றோ “மனிதர் மனா”(personal Mana) என்றோ தனித்தனி ஆற்றல் இல்லை.”(48)

போங்கா, மனா இவ்விருமுறையும் குறிப்பிடும் நம்பிக்கை சார்ந்த எண்ணம் சங்கத் தமிழரிடம் இருந்தது. பொருளுக்கும் உயிருக்கும் வளர்ச்சியைத் தூண்டக்கூடியது. ஓரிடத்தில் நிலைத்து நில்லாதது.

**அணங்கு சூர் மலைகளில் உறைதல்**

சங்க அகத்திணை இலக்கியத் தரவுகளின்படி பெரும்பான்மை பழந்தமிழரின் அணங்கு, சூர் சார்ந்த நம்பிக்கை அவை மலையில் உறைவதாகக் கொண்டிருந்தனர். அம்மலையில் உற்பத்தியாகும் அருவி, சுனை போன்ற நீர்நிலைகளில் உயிர்ப்புச் சக்திகள் உறைவதாக நம்பிக்கை கொண்டிருந்தனர். அணங்கு குறித்து,

*''அணங்குடை நெடுவரை உச்சியன் இழிதரும்*
*கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்''– (அகநா.22:1-2)*
*''ஆடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்''– (அகநா.72:11)*
*''அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு*
*அஞ்சுவரு விடர் முகை............''– (அகநா.272:3-4)*
*''அணங்குடை வரைப்பிற் பாழி ஆங்கண்''– (அகநா.372:3)*
*''கடந்திறல் அணங்கின் நெடும்பெருங் குன்றம்''– (அகநா.378:22)*
*''.......மஞ்சு இவர் அடுக்கம் போழ்ந்து*
*அணங்குடை ஆரிடை ஈங்குநீ வருவதை''– (கலித்.49:17)*

என்ற பாடலடிகளும் சூர்/வரையர மகளிர் குறித்து,

*''சூர்மலை நாடனை அறியா தோனே''– (ஐங்.249:4)*
*''சூர்மலை நாடன் கேண்மை''– (குறுந்.105:5)*
*''சூருடை அடுக்கத்த கொயற்கருந் தழையே''– (நற்.359:9)*
*''சூர்உறை வெற்பன் மார்புஉறத் தணிதல்''– (அகநா.98:5)*
*''நேர்கொள் நெடுவரைக் கவாஅன்*
*சூரர மகளிரிற் பெறற்குஅரி யோளே''– (அகநா.162:24-25)*
*''சூர்புகல் அடுக்கத்து மழைமாறு முழங்கும்''– (அகநா.359:11)*
*''வரையர மகளிரின் நிரையுடன் குழீஇ''– (ஐங்.204:2)*
*''குன்றக் குறவன் காதல் மடமகள்*
*வரையர மகளிர்ப் புரையும் சாயலள்''–(ஐங்.255:1---2)*
*''வரையர மகளிரின் அரியள்''– (அகநா.342:12)*

என்ற பாடலடிகளும் உணர்த்தும். இவற்றை ஆய்ந்து நோக்கின் பக்கமலை அடுக்கத்து உயர்ச்சியையுடைய சிகரம் போன்ற இடங்களில் உயிரியம் சார்ந்த மனா உறைவதாக நம்பினர். அடர்ந்த காடுகள், கடத்தற்கு அரியதான பாறைப் பகுதிகள், திடீரென இயற்கை சுற்றுப்புறச்சூழலில் ஏற்படும் காலநிலை மாற்றங்கள் அவர்களை மிரளச் செய்திருக்கலாம். எங்கெல்லாம் தங்கள் குரலின் எதிரொலி கேட்டதோ அவ்விடங்களில் தெய்வம் உறைவதாக எண்ணினர். பாறைகள் சூழ்ந்த அடர்ந்த மலைக்காட்டுப்பகுதியில் எதிரொலி என்பது நிகழக்கூடியது. இதற்கான காரணத்தை அறியாத மக்கள் அங்கெல்லாம் அணங்கு,சூர் என்ற கட்டமைப்பிலான நம்பிக்கையைக் கொண்டிருந்தனர்.

**அணங்கு, சூர் நீர்நிலைகளில் உறைதல்**

இயற்கையாக நீர் சுரந்து பெருகும் இடங்களில் தெய்வம் உறைவதாக எண்ணினர். இதனை,

*''உண்துறை அணங்கு இவள் உறைநோய் ஆயின்''-(ஐங்.8:1)*
*''துறைஎவன் அணங்கும் யாம்உற்ற நோயே''– (ஐங்.53:1)*
*''சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க''– (நற்.7:1)*
*''சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க''– (நற்.268:1)*
*''சூருடைச் சிலம்பின் அருவி ஆடி''- (நற்.373:5)*
*''சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயம் காணாது*
*பாசி தின்ற பைங்கண் யானை...........'' (அகநா.91:4-5)*
*''.............................. சூர்மகள்*
*அருவி இன்னியத்து ஆடும் நாடன்''– (நற்.34:4-5)*

என்ற பாடலடிகள் அணங்கு, சூர் உறையும் பகுதியைக் குறிப்பிட்டுள்ளன. நீர் ஒன்றே மனிதன் உயிர்வாழ ஆதாரம். வறட்சியால் வறண்ட தொண்டைக்கு நீர் அமிர்தமாக விளங்கியது. உயிர் காக்கும் உன்னதப் பொருளாக விளங்கியது. தாய் ஆனவள் தன் குழந்தைக்குப் பாலைப்புகட்டி உயிர்க்காப்பது போன்று இயற்கை அன்னை ஊட்டும் தாய்ப்பால் மலைகளிலும், நிலங்களிலும் சுரக்கும் நீர் ஆகும். ஆகவே தான் இத்தகைய சக்திபெற்ற நீர் சுரக்கும், கிடைக்கும் பகுதிகளில் அணங்கு, சூர் என்னும் உயிர்ப்பு சக்திகள் உறைவதாகக் கருதினர். இன்றளவும் நீர்நிலைகளில் தெய்வம் உறைவதாக மக்கள் மத்தியில் நம்பிக்கை உள்ளது.

**அணங்கு கடல்துறைப் பரப்பில் உறைதல்**

அணங்கானது பரந்துபட்ட கடற் பகுதியில் உறைவதாக எண்ணியதற்கு,

''அணங்குடைப்பனித்துறைத் தொண்டிஅன்ன''- (ஐங்.174:1)
''அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி
யாயும் ஆயமோ டயரும்................................''– (அகநா.240:7-9)
''தொன்றுமுது வேளிர் குன்றூர்க் குணாது
தண்பெரும் பவ்வம் அணங்குக.............''– (குறுந்.164:3-4)
''பெருங்கடல் பரப்பில் அமர்ந்துறை அணங்கோ''- (நற்.155:6)
''அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்''– (அகநா.207:1)

என்ற பாடலடிகள் சான்றாகும். கடல் ஆழம் மிக்கது. பல் உயிரினங்கள் வாழக்கூடியது. உப்பு விளையும் பகுதி. கடலின் மேற்பரப்பில் எழும் காற்றின் மாறுதல்கள் மக்களுக்கு ஐயத்தையும் அச்சத்தையும் ஏற்படுத்தியது. உயிர் வாழக் கைகொடுக்கும் கடல் மறுபக்கத்தில் உயிர்களின் அழிவிற்கும்

காரணமாகிறது. இதனால் கடல் அன்னையின் சீற்றத்தைக் குறைக்க அவர்கள் வழிபடலாயினர். அணங்கு என்னும் உயிர்ப்புசக்தி தம்மை வாழவைப்பதாகக் கருதினர்.

**விரும்பிய உருவம் எடுத்தல்**

அணங்கானது தான் வேண்டிய உருவம் எடுக்கும் தன்மையுடையது என்று நம்பினர்.

*''சூருடைச் சிலம்பில் சுடர்ப்பூ வேய்ந்து*
*தாம் வேண் டுருவின் அணங்குமார் வருமே''– (அகநா.158:8-9)*

என்ற பாடலடிகளில் தெய்வங்கள் உறையும் பக்கமலையினையடுத்த தோட்டத்தில் அணங்கானது ஒளிபொருந்திய மலர்களைச் சூடிக்கொண்டு தான் விரும்பிய உருவத்தை எடுத்துக்கொண்டு வருவதுண்டு என்ற கருத்து இடம் பெற்றுள்ளது.

*''.......................... பொதியில்*
*கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து'– (அகநா.307:11)*

என்ற பாடலடிகளில் வழிபடுவார் இல்லாமையால் தெய்வம் போய்விட்ட வலிய அடிப்பகுதியினைக் கொண்ட தூண் என்ற பொருள் பெறப்படுகிறது.இவ்விரு சான்றாதரங்களும் உயிர்ப்பு சக்தியானது ஓரிடத்தில் நிலைத்திருப்பதில்லை என்ற கருத்தை உணர்த்தும்.

**மரங்களில் உறைதல்**

இயற்கையாய் முளைத்து வளரும் மரங்களில் கடவுள் உறைவதாகக் கருதினர். அதுவும் முதுமரம் என்பது சிறப்பு. முதுமரம் என்றால் பல ஆண்டுகளாக நிலைத்து உயிர் வாழ்கின்ற பழமைத்தன்மை வாய்ந்த மரம் ஆகும்.

*''கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய'' - (நற்.83:2)*
*''கடவுள் மரத்த முண்மிடை குடம்பை''– (அகநா.70:12)*

ஆகிய பாடலடிகள் முதுமையான மரங்களில் கடவுள் உறைவதாக எண்ணியதைப் புலப்படுத்தும்.

*''சூர் முதல் இருந்த ஓமையம் புறவின்'' (அகநா.297:11)*

என்ற அடியில் சூர் ஓமை மரங்களையுடைய காட்டில் உறைவதாக உரைக்கிறது.

*''மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள் யாவதும்*

*கொடியோர்த் தெறூஉம் என்ப'' (குறுந்.87:1-2)*

என்ற அடிகளில் கடவுள் மராமரத்தில் உறைந்த கருத்து பதிவு செய்யப்பட்டுள்ளது.

*''தாதெரு மறுகின் ஆபுறந் தீண்டும்*
*நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து'' (நற்.343:3-4)*

என்ற பாடலடிகள் கடவுள் ஆலமரத்தில் உறைவதாகக் கூறுகின்றன.

*''தொன்றுஉறை கடவுள் சேர்ந்தபராரை*
*மன்றப் பெண்ணை ................................''(நற்.303:3-4)*

என்ற பாடலடிகள் கடவுள் பனைமரத்தில் உறைந்ததை உணர்த்துகின்றன.

*''எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்*
*குறுகார்...........................''(நற்.216:6-7)*

என்ற பாடலடிகள் கடவுள் வேங்கைமரத்தில் உறைந்து காப்பதை எடுத்துரைக்கின்றன.

தெய்வம், மரத்தில் உறைந்து தங்களுக்கு நன்மை தீமைகளை விளைவிக்கின்றது என்று எண்ணியதற்கு, உயர்ந்த நெடிய நிழல் தரும் மரங்களின் சிறப்பே காரணமாகும். மானுட சமுதாயத்தின் ஆதிகால முன்னோர்கள் வாழ்ந்த குடியிருப்பு அகன்ற பரந்த நிழலையுடைய மரங்களின் கீழ் ஆகும். இது சங்கத்தமிழர் வழிபாட்டு நம்பிக்கைவழி எச்சமாகத் தெரிகின்றது. சங்க இலக்கியத்தில் அத்தகைய மரங்களாக வேங்கை மரம், ஆலமரம், மராமரம், பனை மரம் ஆகியன திகழ்கின்றன. இவ்வகை மரங்கள் இளமை பொருந்திய இளங்கன்றாக இருந்த மரங்கள் என்று குறிப்பிடப்படவில்லை. முதுமரம், வயதான மரம், பழமை வாய்ந்த மரம், நெடுங்காலம் நிழல்பரப்பி ஆண்டாண்டாக நிலைத்து உயிர் வாழ்கின்ற மரம் என்று பதிவாகியுள்ளன. பல உயிரினங்கள் வாழ்வதற்கு இடம் கொடுத்த மரங்களை மக்கள் வழிபட்டனர். அம்மரங்களில் தெய்வம் உறைந்து தம்மைக் காப்பதாகவும் எண்ணினர்.

**யானை மத்தகத்தில் அணங்கு உறைதல்**

விலங்குகளில் மிகப்பெரிய உருவம் உடையதாகக் கருதப்படுவது யானை. அதன் உருவம் செயல் கண்டு வியந்த மக்கள் அதன் மத்தகத்தில் தெய்வம் உறைந்து செயல்படுவதாக எண்ணினர். யானைக்கு மதம் பிடித்தால் அதிக சேதத்தை ஏற்படுத்தும். அதனைக் கட்டுபடுத்த மத்தகத்தில் அங்குசத்தைப்

பாய்ச்சி யானையின் மதத்தை அடக்குவர். இக்காரணம் கருதியும் அணங்கானது யானையின் மத்தகத்தில் உறைவதாகக் கருதியிருக்க வாய்ப்புண்டு. இதனை,

*"அணங்குடை இருந்தலை நீவலின் மதனழிந்து*
*மயங்குதுயர் உற்ற மையல் வேழம்"–(குறுந்.308:2-3)*

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கும்.

**மகளிர் மார்பில் உறைதல்**

அணங்கானது மகளிர் மார்பில் உறைவதாகக் கருதினர். பெண்கள் குழந்தையைப் பெற்றெடுத்து அக்குழந்தை உயிர்வாழத் தம் மார்பில் சுரக்கும் பாலைப்புகட்டுதலால் அவ்வாறு எண்ணினர். உயிர் வாழ்வதற்குச் சக்தியைக் கொடுக்கும் பாலைப் பெண்கள் தம் முலைகளால் தருவதால் அவ்விடத்தில் தெய்வம் உறைந்து நன்மை செய்வதாகக் கருதினர். இதனை,

*"......................................................முலைய*
*சுணங்கென நினைதி நீயே*
*அணங்கென நினையுமென் அணங்குறுநெஞ்சே"–(ஐங்.363:2-3)*

*"சுணங்கணி வனமுலை அணங்கு கொளத் திமிரி"–(நற்.9:6)*

*"சுணங்குசூழ் ஆகத்து அணங்கென உருத்த*
*நல்வரவு இளமுலை நனைய..............................."–(அகநா.161:12-13)*

என்ற பாடலடிகள் முலைப்பாலில் (முலையின்கண்) தங்கிய அணங்கினைக் குறிப்பிடுகின்றன.

**அணங்கு, சூர், தீண்டி வருந்தும் தெய்வம்**

அணங்கு, சூர் என்ற சொற்கள் 'அச்சம்' என்ற பொருளின் அடிப்படையில் அச்சுறுத்தித் தீண்டி வருத்தும் தெய்வப்பெண்ணை உணர்த்துகின்றன.

*"தாக்கணங்கு ஆவது எவன்கொல் அன்னாய்"–(ஐங்.23:4)*

*"மூப்புடை முதுபதி தாக்கணங்குஉடைய*
*காப்பும் பூண்டிசின் கடையும் போகலை"–(அகநா.7:4-5)*

*"சூர்நசைந் தனையையாய் நடுங்கல் கண்டே"–(குறுந்.52:2)*

*"சூர்பனிப்பு அன்ன தண்வரல் ஆலியொடு"-(அகநா.304:3)*

என்ற பாடலடிகள் அணங்கு, சூர் என்பன மக்களைத் தாக்கி நடுங்கச் செய்யும் இயல்புடையது என்பதை எடுத்துரைக்கும்.

**முன்னோர் வழிபாடு**

“பத்தொன்பதாம் நூற்றாண்டு மானிடவியல் கொள்கையாளரான டைலர் சமுதாயவியலாளரான ஹெர்ப்ட் ஸ்பென்சர் போன்றோர் முன்னோர் வழிபாட்டு முறையை முதிர்ச்சியடையாத மனப்பக்குவமுடையோரின் சமய நம்பிக்கை என மதிப்பிட்டனர்”[(49)] இறந்தோரின் ஆற்றல் வாழ்வோரின் நலனில் பெரும் பங்கு வகிக்கிறது என்னும் கருத்தாக்கத்தால் ஏற்பட்டதே முன்னோர் வழிபாடாகும் (Ancestor Worship). முன்னோர் வழிபாட்டிற்கு மிகவும் தொடர்புடைய நம்பிக்கைகளாவன,

1) இறந்த மூதாதையர்களின் ஆற்றலும் அனுபவமும் வாழ்வோரைச் செழுமைப்படுத்தும்.
2) இறந்தோரின் ஆசி என்றென்றும் வாழ்வோருக்கு உண்டு.
3) இறந்தவர்களின் விருப்பங்களையும் அவருக்குப் பிடித்தமானவற்றையும் நிறைவேற்றி அவரை வழிபடுதல் மூலம் தீய ஆற்றல்களிலிருந்து முன்னோர்கள் தப்ப வைப்பார்கள்; அருள் குணத்துடன் ஆதரிப்பார்கள்

இம்முன்னோர் வழிபாட்டு முறை சங்ககாலத் தமிழரிடம் நடுகல் வழிபாடு என்ற முறையில் அமைந்திருந்தது.

**நடுகல் வழிபாடு**

நிரை மீட்டலில் ஈடுபட்டுப் போரில் உயிர்நீத்த கரந்தை வீரர்களுக்கு நடுகல் நாட்டப்பட்டது. அந்நடுகல்லில் அக்கரந்தை வீரர்களின் ‘ஆன்மா’ உறைந்து நன்மைச் செய்வதாக எண்ணினர். அக்கல்லில் மயிற்றோகை சூட்டினர். துடியை முழக்கினர். நெல்லால் ஆக்கிய கள்ளொடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுத்தனர். இவ்வாறாக நடுகல்லிற்கு வழிபாடு நடத்தினர் என்பதை,

*“வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்*
*வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்*
*நடுகல் பீலி சூட்டித் துடிப்படுத்துத்*
*தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்”–(அகநா.35:6-9)*
*“நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்*
*சுரனிடை......................................”- (அகநா.289:3-4)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். குளத்தில் இறந்துபட்ட வீரனின் உடம்பைப் புதைத்தவிடத்து, கல்லில் அவ்வீரனின் பெயரும் பீடும் எழுதி நடுதல் மரபு.

இறந்தவிடத்தன்றி, அவனை நினைவுபடுத்தும் வகையில் பிறவிடத்தே நடப்படும் கல்லும் நடுகல்லாகும். அது வீரக்கல் என்று கூறப்படும். அக்கற்களின் முன் வேலினை ஊன்றியும் கேடயத்தைச் சார்த்தியும் வைத்ததை,

*''பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்*
*பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்*
*வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்''–(அகநா.67:9-11)*
*''............................................ கன்றின்*
*கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்*
*பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்*
*பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்''–(அகநா.131:8-11)*

என்னும் பாடவடிகள் எடுத்துரைக்கும். இவற்றால் அவர்கள் பயன்படுத்திய பொருள்களை இறந்த பின்னரும் அவ்வான்மா பயன்படுத்திக் காக்கும் என்ற நம்பிக்கையை அறிய முடிகிறது.

**நடுகல்லில் பெருமை பொறித்தல்**

இறந்துபட்ட வீரனின் நடுகல்லில் அவனுடைய பெயர்,போரில் அவன் ஏற்படுத்திய பெருமை ஆகியவை பொறிக்கப்பட்டதை,

*''விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்*
*எழுத்துடை நடுகல் அன்ன........................''–(ஐங்.352:1-2)*
*''விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்*
*எழுத்துடை நடுகல் இன்னிழல் வதியும்*
*அருஞ்சுரக் கவலை நீந்தி........''– (அகநா.53:10-12)*

*''கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென*
*மருங்கல் நுணுகிய பேஎமுதிர் நடுகல்*
*பெயர்பயம் படரத் தோன்றும் குயிலெழுத்து*
*இயைபுடன் நோக்கல் செல்லாது அசைவுடன்*
*ஆறுசெல் வம்பலர்...........................''– (அகநா.297:6-10)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இறந்துபட்ட மறவர்க்குத் தமர் பெருமை செய்யும் முகமாக, அவர் பெயரும் பெருமையும் பொறித்துக் கல்நட்டு வழிபடுவது பண்டை மரபு. அக்காலத்துத் தமிழ் எழுத்து பற்றிய வரலாறு இதனாற்புலப்படும். தனித்தமிழ் எழுத்திலும் கிரந்தமும் தமிழ் எழுத்தும் கலந்தும் வட்டெழுத்தும் தமிழ் எழுத்தும் கலந்தும் தனி வட்டெழுத்திலும் பொறிக்கப்பட்ட நடுகற்கள் பல தமிழ் நாடெங்கும் தொல்பொருள் ஆய்வுத் துறையினராலும் தனிப்பட்ட ஆராய்ச்சியாளர்களாலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இத்தகு நடுகற்கள் செங்கம் முதலான இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

பட்டோர் பெயரும் ஆற்றலும் எழுதி நட்டக்கல் , நடுகல் என்று கூறப்பட்டாலும் தமிழகத்தில் கிடைத்துள்ள நடுகற்கள் சிலவற்றில் எழுத்துப் பொறிப்பு ஏதுமின்றி இறந்துபட்ட வீரனின் உருவும் அவன் செய்த வீரச் செயலும் சிற்பமாக வடிக்கப்பட்டும் காணப்படுகின்றன.

**நடுகல் கூறும் பல்லிநிமித்தம்**

நடுகல்லில் முன்னோர்களின் ஆன்மா உறைந்து நன்மை செய்வதாக எண்ணிச் சங்கத்தமிழர் வணங்கினர். அரசராக இருந்தாலும் அந்நடுகல்லிற்கு மதிப்புக் கொடுத்தனர். அந்நடுகல்லில் நன்னிமித்தம் பார்த்துச் செயல்பட்டனர். இதனை,

*“நல்இசை நிறுத்த நாணுடை மறவர்*
*நிரைநிலை நடுகல் பொருந்தி இமையாது*
*இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி*
*சிறிய தெற்றுவது ஆயின் பெரிய*
*ஓடை யானை உயர்ந்தோர் ஆயினும்*
*நின்றாங்குப் பெயரும் கானம்*
*சென்றோர் மன்என இருக்கிற் போர்க்கே”– (அகநா.387:13-20)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். விற்படை கொண்ட போரினை வஞ்சியாது வென்று நல்ல புகழை நிலை நாட்டி இறந்துபட்ட நாணத்தையுடைய வீரரது நடுகல்லைப் பொருந்தியிருந்து கண்ணிமைக்காது உணவிலே கருத்தூன்றிக்கிடந்த முதிய பல்லியானது சிறிது தடை செய்யினும் பெரிய முகபடாம் அணிந்த யானை மீது செல்லும் அரசராயினும் அவ்விடத்தினின்றும் மேலும் செல்ல நினைக்காது திரும்பிச் செல்வர் என்பது முன்னோர் வழிபாடான நடுகல் வழிபாட்டின் மீது சங்கத்தமிழருக்கு இருந்த அசைக்க முடியாத நம்பிக்கையைப் புலப்படுத்துகிறது.

தொல்காப்பியர் காலத்திற்கும் பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றிய இந்நடுகல் வழிபாடு, தமிழகத்தில் பண்பாட்டுத் தொடர்ச்சியையும், வீரச்செயல்களையும்இறந்துபட்ட மறவர்களின் புகழையும் வெளிப்படுத்தும் ஆதரமாக விளங்குகின்றது. இறந்துபட்ட முன்னோர்களை வழிபடும் வழக்கம் மிகத் தொன்மை வாய்ந்தது. சங்கத் தமிழ்களிடம் மட்டுமின்றி உலகம் முழுவதும் இவ்வழக்கம் நடைமுறையில் இருந்துள்ளது. நடுகல்லில் பொறிக்கப்பட்ட வீரனின் உருவம் பிற்காலத்தில் சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய கடவுளர் திருவுருவமாகத் தோற்றம் பெற்றன.

“தமிழகத்தில் நடுகல் வழிபாடு பற்றி ஆய்வு செய்யப் புகுந்த பேராசிரியர் வெ.கேசவராஜ் நிரை மீட்டோர் கல், வடக்கிருந்தோர் கல், பத்தினிப் படிமக்கல், கடலுள் மாய்ந்தோர் கல், ஊர்காத்தான் கல், பெண் மீட்டான் கல், அறம் காத்த நடுதல் கல், கழி பேராண்மைக் கல், சாவாரப் பலிக்கல் அடியார் சமாதி, அரசர் பள்ளிப்படை, புலிக்குத்திக் கல், பன்றிக் குத்திக்கல், குதிரைக் குத்திக்கல், எருது பொருதார் கல், மாடு பொறித்த கல், யானைப் போர் நடுகல், நாய்க்கு நடுகல் என அவற்றை வகைப்படுத்தியுள்ளார்”.[50]

**குலக்குறியம் வழிபாடு**

இனக்குழுவினர் தங்கள் குழுவின் தோற்றம் குறித்தும் பாதுகாவல் குறித்தும் கூறும் போது தாங்கள் குறிப்பிட்ட குலக்குறியைச் சார்ந்தவர்கள் என்ற கருத்தியலை முன்வைக்கின்றனர். அந்தக் குலக்குறி இயற்கைப் பொருளாகவும் செயற்கைக் கருத்தாக்கமாகவும் அமைகிறது. குலக்குறியம் பற்றி கே.சிங்,“குலக்குறி பொதுவாக விலங்காகவோ, தாவரமாகவோ, இயற்கைப்பொருளாகவோ இருக்கும். ஒத்த குலக்குறியுடையோர் அனைவரும் ஒருவழி மரபுடையவராக (Unilineal) இருப்பர். குலக்குறியைக் கொண்டுள்ள குழுவினர் அதைத் துணைவன், உறவினன், பாதுகாப்பவன், மூதாதையர் என நம்புவர். ஒவ்வொரு குலத்தவரும் (குழுவினரும்) குலக்குறிக்குத் தனிப்பட்ட பெயரையோ தனிக்குறியோ வழக்கில் கொண்டிருப்பர். பெரும்பாலும் குலக்குறியின் பெயரையே அக்குழுவினரும் கொண்டிருப்பர். தனி ஒருவருக்கென்று குலக்குறியும் அல்லது குழுவினர் அனைவருக்கும் பொதுவான குலக்குறியும் காணப்படுவதுண்டு. சில சமூகங்களில் முதன்மைக் குலக்குறிகளும் இடம் பெறுவதுண்டு. குலக்குறியைச் சில நிகழ்ச்சிகள் தவிர பொதுவாக உண்ணவோ கொல்லவோ மறுப்பர். குலக்குறிக்கு முறைப்படியான வழிபாடுகள் செய்வர் என்கிறார்.”[51]

இக்கருத்தாக்கத்தின் படி நன்னன் மாமரத்தின் பிஞ்சுக்காகப் பெண்ணிற்குக் கொலைத் தண்டனை கொடுத்தது அமைகிறது. இதனை,

*“மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை*
*புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு*
*கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை*
*பொன்செய் பாவை கொடுப்பினும் கொள்ளான்*
*பெண்கொலை புரிந்த நன்னன் போல”– (குறுந்.292:1-5)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இவ்வாறு நன்னன் நடந்து கொண்டதற்குக் காரணம் அவன் இம்மரத்தைத் தம் குலக்குறியமாக எண்ணியதேயாகும். கோசர் இம்மரத்தை வெட்டி, நன்னனை வஞ்சித்துக் கொண்டதை,

*“............................................... நன்னன்*
*நறுமா கொன்று ஞாட்பில் போக்கிய*
*ஒன்றுமொழிக் கோசர் போல*
*வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே”– (குறுந்.73:2-5)*

என்ற பாடலடி புலப்படுத்தும். அன்னி என்பான் போரில் புன்னை மரத்தை வெட்டிப் பகை முடித்ததை,

*“அன்னியும் பெரியன் அவனினும் விழுமிய*
*இரு பெரு வேந்தர் பொரு களத்து ஒழித்த*
*புன்னை விழுமம் போல*
*என்னொடு கழியும் - இவ் இருவரது இகலே”– (அகநா.180:6-7)*

என்ற பாடலடிகளும் இயம்பும். இங்கு நன்னன் மாமரத்திற்காகப் பெண்ணைத் தண்டித்ததும், அன்னி என்பான் புன்னை மரத்தை வெட்டி வீழ்த்தியதும் குலத்தை அழிக்கும் குறியீடாகச் செயல்படுகிறது. குலக்குறியாக நினைக்கும் உயிரினத்தை உண்ணக் கூடாது என்ற நோக்கத்துடன மாம்பிஞ்சு உண்ட பெண்ணிற்குக் கடுந்தண்டனை தரப்பட்டது. புனிதமாக எண்ணும் பொருளை உண்ணுதல் என்பது கண்டிக்கத்தக்க குற்றமாகக் கருதப்பட்டுள்ளது.

**பிற தெய்வ வழிபாடுகள்**

இந்திர வழிபாடு, முருக வழிபாடு, திருமால் வழிபாடு, தாய்த்தெய்வ வழிபாடு ஆகிய வழிபாடுகளும் சங்க அகத்திணைப்பாடல்களில இடம்பெற்றுள்ளன.

**மருதநிலத்தில் இந்திரன் வழிபாடு**

இந்திரனை மருதநிலத் தெய்வமாகத்தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. மருதநிலத்தலைவனான வேந்தன் (அரசன்) இந்திரனாகத் தெய்வநிலையில் வைத்து வணங்கப்பட்டான். அவ்விந்திரனுக்கு விழாவும் நடத்தி மகிழ்ச்சியை வெளிப்படுத்தியுள்ளனர். ஐங்குநூறு,

*“இந்திர விழாவிற் பூவின் அன்ன”– (ஐங்.62:1)*

எனக் குறிப்பிடும். மருத நிலத்தில் நடைபெற்ற இந்திர விழாவானது பூக்களின் அலங்காரத்தால் நடைபெற்றது என்ற குறிப்பு கிடைக்கிறது. தற்காலத்தில் நாகபட்டினம் மாவட்டத்தைச் சேர்ந்த திருவெண்காடு என்னும் ஊரில் கோயில் கொண்டுள்ள ‘அகோரன்’ என்னும் சைவசமயத்தைச் சார்ந்த சிவனுக்கு

நடைபெறும் பத்து நாட்கள் விழா ‘இந்திர விழா’ என்ற பெயரில் இன்றும் அழைக்கப்பட்டு நடைபெற்று வருகிறது.

**குறிஞ்சி நிலத்தில் வேலன் வெறியாடல்**

தமிழருடைய வழிபாட்டில் முக்கிய இடத்தைப் பெற்றிருப்பது வெறியாட்டு ஆகும். இத்தகைய வழிபாட்டு முறைகளில் பூசாரிகள் யாகம் தொடங்கும் முறை இல்லை. இறைவன் தம்மில் வெளிப்படுவான் என்பதை நம்பினர். ஐங்குறுநூற்றில் ‘வெறிபத்து’ என்ற ஒரு பகுதி உள்ளது. அப்பகுதியில் தலைமக்களின் பொலிவற்ற மேனிக்கு முருகனே காரணமெனக் கொண்டு நோயின் காரணத்தை அறிவதற்கு வேலன் முருகனைப் பேணுவான் என்ற செய்தி உள்ளது. வெறியாடும் போது கழற்காயை மெய்யில் அணிந்து படிமக் கலத்தைத் தூக்கிக் கொண்டு முருகணங்கின் குறையென வேலன் கூறுவான். புதிதாக இடப்பட்ட மணல் முற்றத்திலே வெறியாட்டு நிகழும். செந்நெல்லின் வெள்ளியபொறி அவ்விடம் முழுவதும் சிதறி இருக்கும். வெறியாட்டின் போது ஆட்டின் கழுத்தை அறுத்து, தினையையுடைய பிரப்புக்கூடையில் வைத்து வழிபடுவர். இப்பிரப்புக் கூடையில் சிறிய தினை அரிசியைப் பூக்களோடும் கலந்து வைத்திருப்பர். சங்க இலக்கியத்தில் குறுந்தொகை, அகநானூறு போன்ற நூல்களில் வெறியாட்டு பற்றிய குறிப்புகள் உள்ளன. பிரப்பங்கூடை என்பது புதியதாக பின்னப்பெற்றதாகவும் சில இடங்களில் முறமாகவும் (சொளகு) பயன்படுத்தப்பட்டுள்ளன.

சங்க இலக்கியங்கள் சுட்டும் வெறியாடல் தமிழ்ப்பண்பாட்டுத் தளத்தில் நிகழ்த்தப் பெற்ற முருக வழிபாடாகும். சங்க கால இறுதியிலிருந்தே இம்முருக வழிபாட்டில் வைதீக ஆரிய மரபுகள் சேர்ந்தன. சிவசக்தி மகனாதல் (கலித்.83:14-15) வள்ளிதிருமணம் (நற்.82:3-4), சூரசம்காரம் (அகநா.59:10-12) (கலித்.27:15-16), (கலித்.93:25-26, 104:13-14) முதலான புராணச்செய்திகள் முருகனைச் சுப்பிரமணியனாகவும் கந்தனாகவும் முன்னிலைப்படுத்தி வைதீக ஆரியக் கடவுளாக்கியுள்ளன.

**முல்லை நிலத்தில் திருமால் வழிபாடு**

சங்க காலத்தில் முருக வழிபாட்டிற்கு அடுத்த நிலையில் திருமால் வழிபாடு காணப்படுகின்றது. மாயோன் எனப்படும் திருமால் முல்லைநிலத்து ஆயர்களால் வணங்கப்பட்டான். அத்தெய்வத்திற்கு ஒப்பீடாக முல்லைநிலத்தைச்

செழிக்க வைக்கும் கார்முகிலும், ஆயர்களை வளர்ந்தெடுத்து வாழ்வித்துக் கொண்டிருக்கும் சுற்றுச்சூழலில் உள்ள கருப்பொருட்களும் நிறமாகவும், உருவாகவும் கண்டெடுத்தனர்.

இத்திருமால் வழிபாடு பலபுனைவுகளையும் கற்பனைக் கதைகளையும் தமக்கு வலுவூட்டியாகக் கொண்டு நிலைத்த தெய்வ வழிபாடாக மாறியுள்ளது. இம்முல்லை நிலமக்களின் எச்சமாக தற்பொழுது வாழ்ந்து கொண்டிருக்கும் இடையர் என்னும் சமூகத்தினர் தங்கள் குலத்தெய்வமாகத் திருமாலை வணங்குகின்றனர். இது திருமால் வழிபாட்டில் தொன்மக் கூறுகளில் ஏற்பட்ட காலப்பரிணாம வளர்ச்சியைக் காட்டுகிறது.

முருகன் குறித்து அகத்திணைப் பாடலில் வெறியாடல் நிகழ்வுப் பனுவல்கள் எடுத்துரைக்கின்றன. திருமால் குறித்து தொன்மக்கதைப் புனைவுகளுடன் வாலியோன் (நற்.32:1-3) வாமன அவதாரம் (கலித்.29:30) பரசுராம அவதாரம் (அகநா.226:5-8) இராம அவதாரம் (அகநா.70:13-16) பலராம அவதாரம் (நற்.32:1-2) (கலித்.124:2) கிருஷ்ண அவதாரம் (அகநா.59:3-6) எனப் பதிவாகியுள்ளன.

**பாலைநிலத்தில் தாய்த் தெய்வ வழிபாடு**

ஒரு குழந்தை பிறந்தவுடன் புற உலக உறவுமுறைகளை அறிவதற்கு முன் தன்னை இவ்வுலகுக்கு அறிமுகம் செய்த தாயை முதலில் அடையாளம் கண்டு கொள்கிறது. ஆதிகாலச் சமூக வாழ்க்கையில் இக்கருத்து ஒப்புநோக்கத்தக்கது. அக்குழந்தை வளர்ந்து வரும் சூழலில் காட்டுமிருகங்களின் பிடியிலும் மழை, இடி, வெயில் போன்ற இயற்கைச் சீற்றப் பாதிப்பில் இருந்தும் பாதுகாத்து உணவிட்டு பசியைப்போக்கி வளர்த்தெடுப்பவர் தாய். தாய் அன்பினை மனிதனிடம் மட்டுமல்லாது பறவை, மிருகத்திடமும் காண முடியும். குறிப்பிட்ட வயது (பருவம்) வந்தவுடன் தானே தம் உணவு தேடத் தயாராகிய போதும் எதிரியிடமிருந்து தம்மை பாதுகாத்துக் கொள்ளும் ஆளுமைப்பண்பு உருவாகும் போதும் தாய்த் தகுதியில் இருக்கும் பறவை, மிருகம் விலகிவிடும். ஆனால் தாய் ஆனவள் (மனிதஇனம்) அவளின் கடைசி மூச்சு உள்ளவரை தாம் ஈன்று எடுத்த உயிரைக் காப்பாள். தாம் ஈன்று எடுத்த சேய்களைப் பாதுகாக்கும் தாய் ஆளுமைப்பண்பு நிறைந்தவளாக விளங்கினாள். இத்தகைய போக்கு அக்காட்டு வாழ்க்கையில் தாய்வழிச் சமூக அமைப்பை நிலைப்படுத்தியது. இத்தாய்குறித்து அகநானூற்றுப் பாடலில் ஓங்கு புகழ்க் கான் அமர் செல்வி

(அகநா.345:4) என்றும் கலித்தொகை மருதக்கலிப் பாடலில் 'பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு' (கலித்.9:8) என்றும் பதிவுகள் கிடைக்கின்றன. இவ்விரண்டு அடிகளையும் நோக்க, பெரியகாட்டிடத்து வாழும் பெண் தெய்வம் என உணர முடியும். சங்க மக்களிடத்து தாய்த்தெய்வ வழிபாடு இருந்தமை புலப்படுகிறது. இங்கு அத்தெய்வத்திடம் 'பேய்' பேசியதாகக் கூறப்படுவதால் பேய், அணங்கு, சூர் இவற்றிற்கு எல்லாம் தலைமையுடையவள் எனத் தோற்றமளிக்கிறது. இங்கு சங்க மக்களிடம் முன்னோர்களிடம் வழக்கில் இருந்து தாய்வழிச் சமூக அமைப்பின் எச்சமாகப் பதிவாகியுள்ளதை உணர இயலும். சங்க காலம் ஆண்வழி நிலவுடைமைச் சமுதாயக் காலக்கட்டம் என்று அறிஞர் பெருமக்களால் கூறுமிடத்து கானமர் செல்வி, பெருங்காட்டுக் கொற்றி ஆகியவை தாய்த் தெய்வ வழிபாடாக தாய்வழிச் சமூக அமைப்பை வெளிக்காட்டி மிளிர்கிறது.

**நிமித்த நம்பிக்கைகள்**

நிமித்தம் பார்த்தல் என்ற பழக்கம் சங்கத்தமிழரிடம் இருந்தது. எதிர்காலத்தில் என்ன நடக்கப்போகிறது என்பதனை யாராலும் உறுதியாகக் கூற முடியாது. சங்கத்தமிழர் இயற்கையிலும் செயற்கையிலும் நிகழும் நிகழ்விற்குக் காரணம் கற்பித்து நல்நிமித்தம்,தீநமித்தம் எனப் பகுத்துக் கொண்டனர். சங்க மக்கள் அவர்களைச் சுற்றி இருக்கும் உயர்திணை, அஃறிணை உயிர்களிடத்து நிகழும் நிகழ்வுகளைக் கொண்டு நிமித்தம் பார்த்தனர். ஓதி, பல்லி, கண்துடித்தல்,புள்நிமித்தம் பார்த்தல், விரிச்சி கேட்டல் முதலியவை வாயிலாக நிமித்தம் கணித்தனர்.

**ஓதி நிமித்தம்**

ஓதியில் ஆண் ஓந்தி வழிப்பயணத்தின் போது வலமாகச் செல்லின் அதனை நல்நிமித்தமாகக் கொண்டனர். இதனை,

*'வேதின வெரிநின் ஓதி முதுபோத்து*
*ஆறுசெல் மாக்கள் புட்கொளப் போகும்*
*சுரனே.........................''– (குறுந்.140:1-3)*

என்ற அடிகள் உணர்த்தும்.

**பல்லி சொல் நிமித்தம்**

பல்லி சத்தமிடும் திசையை வைத்து நன்மை தீமையைப் பற்றிய நம்பிக்கையைச் சங்கத்தமிழர் கொண்டிருந்தனர். பல்லி சத்தமிடுதலைப் பல்லி

சொல்லுதல் என்றனர். பல்லி சொல்லுதல் குறித்துச் சங்கப் பாடல்கள் சுட்டும். (நற்.98:2-7) (அகநா.88:3-4) (நற்9:19) (அகநா.151:12-15) (அகநா.289:15-17) (அகநா.351:15-16) (அகநா.387:15-19) (கலித்.11:20-21).

**புள் நிமித்தம் பார்த்தல்**

புள் என்பது பறவையைக் குறிக்கும். பறவைகளைக் கொண்டு நன்மை, தீமை குறித்து நிமித்தம் பார்த்துள்ளனர். இன்ன பறவை கொண்டு நிமித்தம் பார்த்தனர் என்று பதிவாகவில்லை. தலைவனைப் பிரிந்தவிடத்து, பிரிவிடை ஆற்றாத தலைவி புள் நிமித்தம் குறித்து 'புள்ளும் ஓராம்'– (குறுந்218:3) என்று குறிப்பிடுகின்றாள். திருமணத்திற்கு நாள் குறிக்கும் இடத்து புள்நிமித்தம் பார்த்ததை 'புள்ளும் புணர்ந்து இனியவாக'' (அகநா.136:3) என்ற பாடலடி குறிப்பிடுகின்றது. உமணர்கள் உப்பு விற்பதற்கு உப்பு மூட்டைகளை வண்டியில் ஏற்றிச் செல்லும் முன் புள் நிமித்தம் பார்த்து 'குடபுல மருங்கில் உய்ம்மார் புள்ளோர்த்தும்' (அகநா.207:3) என்று பதிவாகியுள்ளது. இவைகளை நோக்க புள்ளின் மூலம் காலச்சூழ்நிலையை அறிதற்பொருட்டே புள் நிமித்தம் பார்த்தல் நடைபெற்றது என்பதனை அறிய முடியும்.

ஊதாரணமாக, காக்கைகள் மரத்தில் கூடு கட்டும் முறையையும் மரத்தையும் பொருத்து அவ்வாண்டின் பருவ மழை அளவு கணக்கிடப்படும். காகம் அடர்ந்த மரத்தின் ஊடே தம் கூட்டினைக் கட்டினால் அவ்வாண்டு அதிக மழைப் பொழிவு இருக்கும். அதுவே மரத்திற்கு வெளியே வெளிப்புறக்கிளைகளில் கூட்டினைக் கட்டினால் அவ்வாண்டு மழைப்பொழிவு குறைவாக இருக்கும். வெப்பம் அதிகமாக இருக்கும் என்பது அனுபவம் வாய்ந்த முதியவராகிய முன்னோர்களின் கணிப்பு. இங்கு திருமணம், உமணர் உப்பு விற்க செல்லுதல் தலைவன் வருகை போன்ற காரியத்திற்குப் புள் நிமித்தம் பார்த்தல் என்பது பருவகாலச் சூழ்நிலையை அறிதல் பொருட்டு என்பதும் எண்ணத்தக்கது.

**விரிச்சி கேட்டல்**

இதனை நற்சொல் கேட்டல் என்பர். கலங்கிக் குழம்பி வருத்தத்துடன் இருக்கும் மனிதனுக்கு ஆறுதல் கூறும் மொழிகளே விரிச்சி. விரிச்சிச் சொல் அம்மனிதனுக்கு தைரியத்தை அளிப்பதாக அமையும். விரிச்சி குறித்துச் சங்க

பாடல்கள் பல இடங்களில் (குறுந்.213:3) (நற்.40:4) (குறுந்.223:3) (நற்.65:9) (நற்246:1) (அகநா.34:14:15) பதிவுசெய்துள்ளன.

**சடங்குகள்**

சங்க காலச் சமுதாயத்தில் நடைபெற்ற சடங்குகள் வாழ்வியல் நம்பிக்கைகளாகும். அவ்வகையில் மகப்பேறு காலச் சடங்குகள், கைம்மைச் சடங்கு,ஈமச் சடங்கு என்பன குறிப்பிடத்தக்கனவாகும்.

**மகப்பேறு காலச் சடங்குகள்**

சூல் கொண்ட பெண், மகவு ஈன்ற போது பெண்ணிடத்து வீசும் 'புனிறு' என்ற நாற்றம் பற்றிச் சங்கப்புலவர்கள் குறிப்பிடுகின்றனர். மகப்பேறு ஆன பெண்ணையும் பிறந்த குழந்தையையும் பராமரித்த செவிலியை 'புனிறு நாறு செவிலி' (நற்.40:6) என்று குறிப்பிடுவர். 'புனிறு' என்பது தீட்டாகக் கருதப்பட்டது. பிரசவத் தீட்டால் கவர்ந்திழுக்கப்படும் பேய் தீயசக்திகளை நெருங்கவிடாதபடி தடுத்துக் காக்கும் 'மாந்தீரீக' ஆற்றல் படைத்த இயற்கைப் பொருள்களை அவள் இருக்கும் இடத்தில் தூவினார்கள். ஐயவி (வெண்கடுகு) நறும்புகை ஆகியவற்றைத் தீயசக்திகளை விரட்டும் பண்பு கொண்டவையாகச் சங்க காலத்தில் நம்பினார்கள். பெண் பிரசவித்துக் கிடந்த வீட்டில் நெய்யோடு ஐயவி என்ற வெண்கடுகைக் கலந்து பரப்பிய தகவலை,

*"ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்*
*பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்*
*சீர்கெழு மடந்தை ஈரிமை பொருந்த"– (நற்.40)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இன்றும் தமிழ் பேசும் மக்களிடம் இப்பழக்கம் ஒரு சிலரிடம் காணப்படுகின்றது. மருதாணியின் விதை, வெண்கடுகு இவற்றைக் கொண்டு காலை, மாலை வேளைகளில் தூபம் போட்டு, புகை உண்டாக்கி வீடுகளில் பரவ விட்டால் பேய் போன்ற தீயசக்திகள் விலகி ஓடிப் போகும் என்று நம்புகின்றனர்.

**கைம்மைச் சடங்கு**

போர்க்களத்தில் இறந்துவிட்ட வீரனின் மனைவிக்கு அக்காலச் சமூகத்தால் நடத்தப்பட்ட கைம்மைச் சடங்குகள் பற்றிய பதிவுகள் கிடைக்கின்றன. அவ்வீரனின் மனைவிக்கு மட்டுமல்லாது கணவனை இழந்த பெண்களுக்குப் பொதுவாக நிகழ்த்தப்பட்ட சடங்காகக் கருத வாய்ப்புண்டு. இச்சடங்கு அவளது பாலியல் சார்ந்த வாழ்க்கைக்குத் தடைவிதிக்கும் வகையில் செய்யப்பட்டது.

கூந்தல் களைதல் என்பது ஒரு சடங்காகும். கைம்மையில் ஒரு வழக்கமாகப் பெண்ணின் கூந்தல் மழிக்கப்பட்ட செயலானது வெற்றி பெற்ற அரசன், தோற்ற வேந்தனது மகளிரைத் தண்டித்து அதன் வழியே தோற்ற வேந்தன் குடியை அவமானப்படுத்தும் அடையாளச் செயலாகச் சங்க காலத்தில் வழக்கில் இருந்தது. இதனை,

*"விரி உளைப் பொலிந்த பரியுடை நன்மான்*
*வேந்தர் ஓட்டிய ஏந்துவேல் நன்னன்*
*கூந்தல் முரற்சியின் கொடிதே"– (நற்270:8-10)*

என்ற பாடலின் வழியாக வேந்தனை வென்ற நன்னன் என்ற மன்னன் வேந்தனது உரிமை மகளிர் கூந்தலை மழித்துக் கயிறு திரித்ததை அறிய முடிகிறது. கூந்தலைக் களைவது சங்க காலத்தில் ஆணுக்குக் கூறப்படவில்லை.

**ஈமச்சடங்கு**

சங்க அகஇலக்கியங்களில் இறந்தவர்களை அடக்கம் செய்த முறைகளைப் பற்றிய குறிப்புகள் அகநானூறு, குறுந்தொகை ஆகிய அகஇலக்கியங்களில் காணப்படுகின்றன. வீரர்களின் அம்பு விசையால் உயிர் நீத்தவர்களைக் கற்பதுக்கைகளில் இட்டும் கற்குவியல்களையும் இலைச் சருகுகளையும் இட்டும் மூடினர். எண்ண முடியாத அளவுள்ள கற்பதுக்கைகளைக் கொண்ட காட்டு வழியை,

*"வெண்ணு னையம்பின் விசையிட வீழ்ந்தோர்*
*எண்ணுவரம்பு அறியா உவல் இடு பதுக்கை"– (அகநா.109:7-8)*

என்ற பாடலடிகள் காட்டும். வீரனின் வில்லால் மாய்ந்தவரின் பதுக்கையை 'வில்லிட வீழ்ந்தோர் பதுக்கை' (அகநா.157:5, 35:7) என்றும் கூறுகின்றது. ஆட்களைக் கொன்று அவர்களை மூடிய அச்சம் தரவல்ல கற்குவியல்களை உடைய காடு என்றும் (அகநா.215:11) கொடிய வில்லையுடைய வேடர் தம் அம்பை விடுவதால் தொலைந்தோர் நிலையில் உள்ள மூடியைப் போன்று உயர்ந்து காணப்படும் கற்குவியல்களை உடைய காடு என்றும் (அகநா.231:5-8) பதிவாகியுள்ளன. பாலை நிலத்தில் செல்பவரை அங்குள்ள ஆறலை கள்வர்கள் கொன்று அவர்களுடைய உடலைத் தழைக்குவியலால் மூடுவது வழக்கம் என்று பேசுகின்றது. இத்தகைய பதுக்கையைக் கூறும் பொழுது 'வம்பலர் பதுக்கை' என்றும் 'உவலிடு பதுக்கை' என்றும் கூறுகின்றன. வம்பலர் பதுக்கை என்பது

வழிப்போவார் பதுக்கை என்றும் உவல் இட்ட பதுக்கை என்பது இலைச்சருகால் மூடப்பட்ட பதுக்கை என்றும் (குறுந்.77:2-3) அறியப்படுகிறது.

பிணத்தை அடக்கம் செய்வதற்கு இரும்புக் கருவிகளின் பயன்பாடு உள்ளகாலக்கட்டத்தில் பள்ளம் பறித்து அடக்கம் செய்திருக்கவும் வாய்ப்புண்டு. ஆனால் சங்க அக இலக்கியம் பிணங்களின் மேல் அடுக்கி வைத்த கற்களையும் இலைகளையும் பற்றி மட்டும் குறிப்பிடுகின்றது. ஈமத்தாழியில் அடைக்கம் செய்ததைப் புறநானூறு பகர்கின்றது. அகால மரணம், எதிர்பாராத மரணம், ஆகியவற்றால் அடையாளம் அறியாதவரின் இறந்த உடல்களைக் கற்கள், இலைகள் கொண்டு மூடி அடக்கம் செய்துள்ளனர். உறவினர்களின் உடல்களையும் மரணம் நேரும் என்று ஆயத்தமாக இருந்த உடல்களையும் தாழியில் இட்டுப் புதைத்துள்ளனர். இறந்தவர்களின் உடல்களைச் சுற்றுச்சூழல், காலம் நோக்கி உடனடியாக அடக்கம் செய்யவேண்டிய உடல்களைக் கற்கள், தழைகள், மண் கொண்டு மூடி அடக்கம் செய்துள்ளனர். மரணத்தின் பிடியில் இருக்கும் இறக்கும் தருவாயில் இருக்கும் மனிதர்களுக்கு ஆயத்தமாக தாழி செய்து இறந்தவுடன் அடக்கம் செய்துள்ளனர்.

**தொகுப்புரை**

- ❖ குடும்பத்தில் திருமணம் என்பது சங்கத்தமிழரிடம் அகமணம், புறமணம் என்ற முறையில் அமைந்திருந்தது.
- ❖ சங்கத்தமிழர் நிலப்பரப்பு சார்ந்த அகமணத்தைப் பெரிதும் போற்றியுள்ளனர். சொத்துரிமை, தொழில் நுணுக்கம் கருதி அகமணம் மேற்கொள்ளப்பட்டுள்ளது.
- ❖ வேறொரு இனக்குழுவுடன் மணஉறவு கொள்வதைத் தவிர்க்கும் காலத்தில் உடன்போக்கு என்னும் நிலை ஏற்பட்டு சில இடங்களில் புறமணமும் ஆதரிக்கப்பட்டுள்ளது.
- ❖ திருமணம் பெண்ணின் தாய் வீட்டில் சிலம்புகழி நோன்புடன் நடைபெற்றுள்ளது. திருமணத்திற்குப் பிறகு மணமக்களின் உறைவிடம் தலைவனின் (ஆணின்) உறைவிடத்தில் அமைந்துள்ளது. சங்க காலச் சமூக அமைப்பு தந்தையக உறைவிட முறையைப் பின்பற்றியுள்ளது.

❖ குழந்தை வளர்ப்பில் புதல்வனுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டுள்ளது. புதல்வன் தாயே, கானவன் மகள் என்னும் சொற்கள் தந்தை வழிச் சமூக அமைப்பிற்கு முக்கியத்துவம் அளித்ததைப் பறை சாற்றுகின்றன.

❖ கற்புக் கோட்பாடு உருவாக்கம் சங்ககாலத்தில் வாரிசுரிமையை அடையாளம் காண வகுக்கப்பட்ட கோட்பாடாகும்.

❖ சங்க கால அகப்பாடல்களில் முதல்நிலை இரண்டாம் நிலை உறவுச்சொற்கள் மட்டும் பதிவாகியுள்ளன. இதனைக் கொண்டு சங்க மக்கள் தனிக்குடும்ப வாழ்க்கையைப் போற்றினர் எனக் கருத இயலாது. இனக்குழுவாக வாழ்ந்த மக்களிடம் பல்வேறு வகையால் உறவுச்சொற்கள் இருந்திருக்க வாய்ப்புண்டு. புலவர்கள் தம் பாடலின் கருத்து நோக்கி அப்பெயர்களைப் பதிவுச் செய்யாமல் இருந்திருக்க வேண்டும். சங்ககாலக் குடும்ப வாழ்வில் தலைவனும் தலைவியுமே சிறப்பிடம் பெறுகின்றனர். ஏனையோர் அவர்களைச் சார்ந்து வாழும் இயல்பினராகவே அமைவதால் அவர்களுக்குச் சங்க இலக்கியத்தில் சிறப்பிடம் தரப்படவில்லை.

❖ குடும்பம் போதிக்கும் பல பழக்கவழக்கங்களில் வழிபாடும் ஒன்று. அவ்வகையில் தமிழரிடம் அணங்கு, சூர் சார்ந்த உயிரியம் என்னும் மனா நம்பிக்கையும் நடுகல் சார்ந்த முன்னோர் வழிபாடும் தம் குலத்தோற்றம், பாதுகாப்பு குறித்த குலக்குறியம் வழிபாடும் வழக்கில் காணப்பட்டுள்ளன.

❖ குறிஞ்சி நிலத்தில் முருகன் வழிபாடு காணப்பட்டது. ‘முருகன்’ வேலன் என்ற பெயரில் வழிபாடு நடத்தியிருந்தனர். வேலனுக்கு ‘வெறியாடல்’ என்ற நம்பிக்கை சார்ந்த சடங்கும் நடைபெற்றது.

❖ முல்லை நிலத்தில் திருமால் வழிபாடு பின்பற்றப்பட்டது. மருதநிலத்தில் இந்திரன் வழிபாடு நடைபெற்றது. இந்திரனுக்கு விழா எடுத்தும் சிறப்பித்திருந்தனர்.

❖ பாலை நிலத்தில் தாய் தெய்வமாகக் கொற்றவை வழிபாடு நடைபெற்றது.

❖ சங்க கால மக்களிடம் ஓதி நிமித்தம், பல்லி சொல் நிமித்தம், புள் நிமித்தம், விரிச்சிகேட்டல், மகப்பேறு காலச் சடங்குகள் ஆகியவை நம்பிக்கைச் சார்ந்தவையாக விளங்குகின்றன.

❖ இறந்தவர்களின் உடல்களைச் சிறுகற்கள், இலைத்தழைகள், சருகுகள் கொண்டு மூடி அடக்கம் செய்துள்ளனர். தாழிகளில் இட்டுக் கவிழ்த்து

வைத்தும் அடக்கம் செய்துள்ளனர். இறந்தவர்களின் மனைவிக்குக் கூந்தலைக் களைந்து மழித்து கைம்மைச் சடங்குச் செய்து மைம்மை நோன்பு ஏற்கச் செய்துள்ளனர்.

**சான்றெண் விளக்கம்**

1. பக்தவத்சல பாரதி பண்பாட்டு மானிடவியல் ப.283
2. மேலது, ப.283
3. கலித்.101, 102, 103, 104.
4. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல் ப.369
5. மேலது, ப.369
6. இரா.இராகவையங்கார், குறுந்தொகை, ப.680
7. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல் ப.433
8. மேலது பக்.418-419
9. எச்.சித்திரபுத்திரன், சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள், ப.27
10. K.Singh, Social And Cultural Anthropology pp. 153-156.
11. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.419
12. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.420
13. அகநா.158:17-18, ஐங்.261:3,
14. கலித்.80:12, 80:16, 85:25-26
15. நற்.8:4, 162:7-8, 306:1
16. ஐங்.98:4, கலித்.107:24-26
17. நற்.72:6
18. நற்.8:10, குறுந்.132:4-5, ஐங்.399:5,
19. கலித்.107:33-34
20. எச்.சித்திரபுத்திரன், சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள், ப.32
21. ஐங்.88:2, 89:1
22. அகநா.386:11-12
23. குறுந்.49:3-5
24. நற்.110:10-11, குறுந்.293:7-8
25. அகநா.21:7
26. நற்.121:11
27. அகநா.51:13-14
28. நற்.100:7, 121:11
29. குறுந்.135:2

30. அகநா.276:8, ஐங்.40:3, குறுந்.91:3
31. அகநா.203:18
32. அகநா.40:9
33. குறுந்.8:6, நற்.40:6, 58:1, ஐங்.90:4
34. ஐங்.79:4, நற்.45:5, அகநா.16:19
35. அகநா.48:1,குறுந்.114:5, நற்.8:4, ஐங்.48:1, கலித்.9:6
36. நற்.143:5
37. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.419
38. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.129
39. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.425
40. மேலது, ப.425
41. மேலது, பக்.498-499
42. மேலது, ப.500
43. நற்.9:6, 39:11, 47:8, 155:6, 165:2-3, 288:10, 288:1, 376:10, 386:6, குறுந்.164:3-4, 362:5, 376:1-2, ஐங்.23:4, 28:1, 53:1, 174:1, 256:4, 259:6, 363:2-5, அகநா.7:4-5, 22:1-2, 72:11, 73:5, 99:8-9, 158:8-9, 161:12-13, 198:14, 207:1, 212:8, 240:7-9, 272:3-4, 319:6, 338:6, 366:15-16, 372:1-3, 378:22, 388:20 கலித்.24:2, 49:17, 52:10, 56:21, 57:4, 58:15, 71:20, 77:14, 88:20, 105:15, 109:22, 131:5, 132:22, 144:9, 148:15
44. நற்.7:1, 268:1, 359:9, 367:4, 373:5, குறுந்.52:2, 53:7, 105:5, ஐங்.191:4, 204:2, 249:4, 255:1-2, அகநா.32:7-8, 59:10, 98:5, 162:2-4, 303:5, 304:3, 342:12, 359:11, கலித்.93:26
45. நற்.34:10, 165:4, 251:8, 358:6, ஐங்.182:3, 243:1, அகநா.13:3, 14:16, 16:17-18, 35:7, 62:15, 90:9, 125:14-15, 136:6, 152:17-18, 156:15, 167:14-15, 184:1-3, 209:16, 282:18, 307:11-12, 314:15, 348:8, 372:1-2, 396:7, 282:18, 307:11-12, கலித்.46:16-17, 84:6-7, 93:6-7, 93:9, 93:10, 93:13, 93:20, 93:24, 93:28, 93:29, 93:35, 101:24,
46. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.503
47. மேலது, ப.503
48. மேலது, ப.501

49. மேலது, ப.515

50. இணையதளம். பழங்காசு ak.khah @greynium.com

51. K.Singh, Social And CulturalAnthropology, pp.153-156.

## இயல் நான்கு

## இனக்குழு ஒப்பாய்வியல் நோக்கில் சங்க அகத்திணைப்பாடல்கள்

உலகில் உள்ள அனைத்து இனக்குழு மக்களின் பண்பாட்டுக் கூறுகளும் மாற்றத்திற்கு உட்பட்டனவாகும். மாற்றத்திற்கு உட்படாத பண்பாடே இல்லை. அவ்வகையில் சங்ககாலத் தமிழரினத்தின் பண்பாட்டுக் கூறுகளும் விதிவிலக்கல்ல. தற்போது மக்களிடம் காணப்படும் பண்பாட்டைப் பார்த்தால் கூட கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த நிலை இன்று இல்லை. பண்பாட்டு மாற்றமென்பது தனியொரு செயலோடு மட்டும் தொடர்புடையது அல்ல. பல செயல்களின் மொத்தத் தொகுதியாகும்.இந்த நிகழ்வில் ஒரு பண்பாட்டின் கூறுகள் அயல் பண்பாட்டுக் கூறுகளால் மாற்றப்படுகின்றன அல்லது முற்றிலுமாக அகற்றப்படுகின்றன. சங்ககாலம் தொடங்கி இன்றைய காலம் வரை தமிழின மக்களின் மீது பல்வேறு பண்பாட்டுப் படையெடுப்புகள் நிகழ்ந்துள்ளன. இந்நிலையில் இவ்வியல் சங்ககால மக்களிடம் ஏற்பட்ட பண்பாட்டுத் தாக்கத்தை சங்க அகத்திணைப்பாடல்கள் கொண்டு ஆராய்ந்து இனக்குழு ஒப்பாய்வியல் செய்கிறது. மேலும் பண்பாட்டு தாக்கத்தால் ஐந்திணைக்கும் உரிய பண்பாட்டு மாற்றத்தில் காணப்பெறும் ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துரைக்க முயல்கிறது.

**இன ஒப்பாய்வியல் வரையறை**

இன ஒப்பாய்வியல் என்னும் சொல் இன்று மானிடவியலாளர், இனவரைவியலாளர் என அனைவராலும் பயன்படுத்தப்படுகிறது. ‘இன ஒப்பாய்வியல் ஆய்வுகள் ஒன்றுக்கும் மேற்பட்ட பண்பாடுகளை ஒப்பிட்டு ஆராய்வதால் அவை பண்பாட்டிடை ஆய்வுகள்(Cross Cultural Studies) எனச் சிறப்பாக வழங்கப்பெறும்.’(1)

- பல்வேறு இன மக்களைப் பற்றியும் அவர்களின் பண்பாட்டைப் பற்றியும் அவர்களின் வரலாற்றைப் பற்றியும் பண்பாட்டிடை நிலையில் அறியும் அறிவியலே இன ஒப்பாய்வியல் (Ethnology) என்பார் குரோபர்.(2)
- ஒன்றுக்கும் மேற்பட்ட பண்பாடுகளை ஒப்பீட்டு நோக்கிலும் வரலாற்று நோக்கிலும் ஆராயும் அறிவியலே இன ஒப்பாய்வியல் என்பது இனவரைவியலாளர்களின் வரையறை.(3)
- ஒரு சமூகத்தை அல்லது இனக்குழுவைப் பற்றி முழுமையாகத் தொகுக்கும் இனவரைவியல் செய்திகள் அச்சமூகத்தைப் பற்றி அறிய

மட்டுமே உதவுகிறது. அவ்வாறு தனித்தனிச் சமூகங்களைப் பற்றிய இனவரைவியல் ஆய்வுகள் ஏராளமாகச் செய்த பின்பு ஒவ்வொரு சமூகமும் மற்றவையோடு ஒன்றுபட்டோ வேறுபட்டோ நிற்கும் நிலையினைக் காண முடியும். இந்நிலையில் அனைத்துச் சமுதாயங்களின் ஒருமித்த அமைப்பையும் வேறுபட்ட தன்மையையும் கருத்தில் கொண்டு அனைத்துச் சமுதாயத்திற்குமான பொதுக் கொள்கைகள் விதிகள் ஆகியவற்றை வகுப்பதே இனக்குழு ஒப்பாய்வியல் ஆகும்.[(4)]

சங்க அகத்திணைப் பனுவல்களின் தரவுகள் படி, வேடர் இனம், கானக்குறவர் இனம், கோவலர், ஆயர், இடையர், மென்புல வன்புல உழவர், பரதவர், உமணர், பாணர் என்ற இனக்குழுக்கள் பற்றிய வாழ்வியல் செய்திகள் கிடைக்கப்பெற்றுள்ளன. இவ்வினக்குழுவினரிடையே உள்ள பண்பாடுகள் ஒப்பு நோக்கி ஆராயத்தக்கனவாகும்.

**வேடர் இனம்**

பழைய இனக்குழுச் சமூகத்தின் வாழ்க்கையை மீட்டுருவாக்கம் செய்வதற்குரிய சில ஆதாரமான கூறுகளைச் சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ள வேடர்கள் பற்றிய செய்திகளில் அடையாளம் காண முடியும். வேடர் முதல் வேந்தன் வரையிலான ஒரு சமூகத்தள வரிசை சங்க காலத்தில் இருந்ததிலிருந்து வேடர் குடியின் தொன்மையை ஊகித்து அறிய முடியும். வேடன், வேட்டுவன் என்று சுட்டப்படுகிற ஆண்மகன் வில், அம்பு என்ற கருவிகளைக் கொண்டு யாருக்கும் உடைமையாகாத இயற்கையின் கூறுகளுள் ஒன்றான விலங்குகளை வேட்டை நாய்களின் துணையோடு சென்று வேட்டையாடி உணவாகக் கொண்டான்.கால்நடைகள் நாகரிக நடவடிக்கைகளால் ஆள்பவர்களின் உடைமைகளாக ஆகிவிட்ட போதிலும் வேடர்களைப் பொறுத்தவரை அவை வேட்டைக்குரிய விலங்குகளாகவே நீடித்தன (ஆநிரை கவர்தல்). வேட்டை விலங்குகள் கிட்டாத போது காட்டு வழிச் செல்லும் வணிகரும், வழிப்போக்கரும் வேட்டைக்கு இலக்குகளாயினர். அவர்களது உடைமைகளும் வேட்டையாடப்பட்டன. இதனால், உடைமை நாகரிகத்திற்குள் வாழ்ந்தவர்களால் கள்வர், கொலைகாரர், வழிப்பறிக் கொள்ளையர், இரக்கமற்றவர், பச்சை இறைச்சி உண்பவர், உண்டபின் வாய் கை கழுவாதவர், ஆறலை கள்வர் என்று வேடர்கள் நோக்கப்பட்டார்கள். சங்க கால வேடர்கள் மலை, காட்டுப் பகுதிகளில் சிற்றூர்களில் வாழ்ந்தார்கள். ‘உலைக்கல்’ போன்ற

சூடான பாறைகள்(குறுந்.12),‘இன்னாக் கானம்’ (குறுந்.274),‘கல்உயர் நனந்தலை’ (குறுந்.297),‘வன்புலக் காடு’ (நற்.59),‘குன்றத்து உச்சிக் கவான்’ (நற்.92),‘முரம்பு’,‘மரம் புல்லென்ற முரம்புஉயர் நனந்தலை’(அகநா.67),‘வெஞ்சுரம்’ (அகநா.131),‘அருமுனைப்பாக்கம்’ (அகநா.245) என்ற சொற்றொடர்கள் வேடர்கள் வாழ்ந்த இடங்களைச் சுட்டி வந்துள்ளன. அகப்பாடல்களில், இலக்கண மரபு பாகுபடுத்திய பாலைத்திணைப் பாடல்கள் வேடர்கள் பற்றிய தகவல்களை விரிவாகத் தந்துள்ளன. ஏதோ ஒரு தொல்மரபுக்கு உட்பட்டு புலவர் மரபானது, பாலைப் பாடல்களில் பிரிவுத்துயரம், சுரம், கவலை, அத்தம், காடு, உச்சி வெயில், நீர் வறட்சி, ஆநிரை கவர்தல், போர், பிணம், குருதி, பறந்தலை, பதுக்கை, நடுகல், பருந்து, கழுகு, செந்நாய், வேடர்கள் வழிப்பறி, கொலை, பசுமை தீர்ந்த பாழ் ஆகியவற்றைப் புனைந்துரைத்துள்ளது. எனவே வேடர், கள்வர், மறவர், மழவர், வில் ஏர் உழவர் பற்றிய எடுத்துரைப்புக்கள் எல்லாம் ஓர் இலக்கியச் சம்பிரதாயத்தை முன்னிட்டே புனையப்பட்டன என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். இவ்வித சம்பிராதாயமான புனைந்துரைப்பிலிருந்து வேடர் குடி வாழ்க்கையின் இனக்குழு மரபு எச்சங்களைச் சலித்தெடுக்க வேண்டியுள்ளது.

வேட்டுவர் என்ற சொல் வேட்டையை வாழ்வாதாராமாகக் கொண்டோரைக் குறிக்கும் பொதுச் சொல். சங்கப்பாடல்களில் வேடன் தவிர்த்து, ‘கள்வர்’, ‘வன்கண் ஆடவர்’, ‘கொடுஞ்சிலை மறவர்’, ‘துவர்செய் ஆடைச் செந்தொடை மறவர்’(நற்.33), ‘வேட்டுவன்’ (நற்.59), வேட்டச் சீறூர்’ (நற்.92), ‘வயவர்’, ‘செயிர் நோக்கு ஆடவர்’ (நற்:298), ‘அத்தக் கள்வர்’, ‘மழவர்’, ‘மறவர்’, வேட்டக்கள்வர்’, கொடுவில் எயினர்’ (குறுந்.12,அகநா.79), ‘கொலைவில் ஆடவர்’ (அகநா.97), ‘கொள்ளையர்’ (அகநா.101),‘செங்கண் ஆடவர்’(அகநா.157), ‘கொடுவில் ஆடவர்’, ‘கொடுவில் கானவர்’ (அகநா.231), ‘கொடுநோக்கு ஆடவர்’ (குறுந்.12), ‘கடுங்கண் மறவர்’, ‘பழையர்’ (அகநா.331), ‘வலைவர்’ (கலித்.54) முதலிய சொற்களும் தொடர்களும் வந்துள்ளன. இவை பெரிதும் வேடரின் பண்பினை அடியொற்றியவை. வேடர் இனக்குழுவைக் குறிப்பாகச் சுட்டுகின்ற சொற்கள் வேட்டுவன், எயினர் ஆகியவை மட்டுமே. ‘பழையர்’ என்ற சொல் இவ்வினக்குழுவின் தொன்மையை ஒட்டி உருவான சொல். தமிழ்நாட்டின் வேடர் குடியாக எயினரும், வட வேங்கட மலைக்கு அப்பால், வேற்று மொழி பேசிய

தேயத்தைச் சேர்ந்த வேடர் குடியாக வடுகரும் காணப்படுகிறார்கள். இவ்வடுகர்கள் வாழ்ந்த பகுதி ‘வடுகர் தேயம்’ (அகநா.213) என்றும், ‘எருமை நல்நாடு’ (அகநா.253) என்றும், ‘மொழி பெயர் தேயம்’ என்றும் அழைக்கப்பட்டது. வேங்கடமலைப் பகுதியைக் ‘கள்வர் கோமான்’ என்றழைக்கப்பட்ட புல்லி என்பவன் ஆண்டான். வேடர்குடித் தலைவனான புல்லி, பிறரது ஆநிரைகளைக் கவர்ந்து வாழ்ந்தான். கட்டி என்ற மற்றொரு வேடுவர் தலைவனும் வேங்கடமலைப்பகுதியை ஆண்டுவந்தான். இவர்களது ஆட்சிக்கு அப்பால் வடக்கே வேற்று மொழி பேசிய வடுகர் வாழ்ந்ததாகப் பாடல்கள் குறித்துள்ளன. வடுகர்கள் பம்பை என்ற கருவியும் வேட்டை நாயும், வில் அம்பும் கொண்டு மலைப் பகுதிகளில் வேட்டையாடினார்கள். ஆநிரைகளை மலைப் பகுதிகளில் கொள்ளையிட்டார்கள்.

*‘கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்*
*நெடும்பெரும் குன்றம்…………’(நற்.212:5)*

*‘‘குல்லைக் கண்ணி வடுகர் முனையது*
*வல்வேற் கட்டி நன்னாட்டு உம்பர்*
*மொழி பெயர் தேஎத்தர்’’ (குறுந்.11:5-7)*

என்ற பாடல்களின் அடிகள் இவர்களைப் பற்றிக் கூறியுள்ளன. பொதுவாக அன்று வேங்கடம், கொல்லி, மேற்கு மலைத்தொடர், கொங்கு மலைப் பிரதேசம் ஆகிய இடங்களில் வேடர்களும் ஆயர்களும் வாழ்ந்து வந்தார்கள். வடுகர் தலைவன் எருமை நாட்டை ஆண்டதையும், அங்கே அயிரி ஆறு பாய்ந்ததையும் (அகநா.253) அறிய முடிகிறது. மைசூர் நாட்டை அன்று எருமை நாடு என்றனர். எருமை நாட்டில் வாழ்ந்த அன்றைய கர்நாடகர்களை அன்றைய புலவர் பெருமக்கள் வடுகர் என்ற சொல்லால் மக்களிடத்து எடுத்தியம்பினர். தமிழக வடக்கு, வடமேற்கு எல்லையோர மலைப் பகுதிகளில் வேட்டையாடி வாழ்ந்த தமிழ் மொழியல்லாத மொழிகள் பேசியவர்களை வடுகர், வடுக வேடர், வம்ப வடுகர்,‘கன்று உரிக் குடம்பை கதநாய் வடுகர்’ (அகநா:381),‘கல்லா நீள் மொழிக் கதநாய் வடுகர்’ (அகநா.107) என்று அடையாளப்படுத்தினர். புலவர்கள் வருணித்துள்ள வடுக வேடர்கள் மொழியால் மட்டுமே தமிழக வேடர்களிலிருந்து வேறுபட்டவர்களாக இருந்தார்கள். ஆநிரைகவர்தல், பசுக்கறி உண்ணுதல், கள் குடித்தல், குடிசையில் வாழ்தல், வேட்டைநாய் கொண்டு வேட்டையாடுதல் ஆகியவற்றில் இருவித வேடர்களும் ஒற்றுமை பூண்டிருந்தார்கள். தமிழக

வேட்டுவர்கள் எயினர் குடியைச் சேர்ந்த இனக் குழுமக்கள் ஆவர். இவ்வினக் குழுக்களைச் சாராத வேறு இனக்குழுக்களைச் சார்ந்த வேடர்களும் அன்று வாழ்ந்திருக்கக் கூடும். வேடுவர்கள் தனியாகவும் குழுக்களாகவும் வேட்டையில் ஈடுபட்டுள்ளனர். வேடுவன் ஒருவன் உடும்பு, நுணல்,ஈயல், முயல் ஆகிய சிறிய விலங்குகளைப் பிடித்தும் அகழ்ந்தும் கெண்டியும் எறிந்தும் தோளில் தூக்கி வந்த தகவல் உள்ளது (நற்.59). ஒரு வேடன் விரித்த வலையைக் கண்டு நீண்ட கால்களை உடைய கணந்துள் என்னும் பறவை வெருவிக் கத்தியதாக ஒரு பாடல் குறித்துள்ளது (நற்212). இந்தக் கணந்துள் பறவை மரக்கிளைகளில் ஒளிந்து கொண்டிருந்த வேடர்களாகிய கள்வர்களைக் கண்டு பெரும் சப்தமிட்டதால் அவ்வழிச் செல்வோர் அந்த இடத்தை விட்டு வேறு வழியாகச் சென்று விட்டதாக ஒரு பாடல் குறித்துள்ளது (குறுந்.350). வழிப்பறிக் கள்வர்களாகவும், ஆநிரைகளைக் கவர்வோராகவும் மாறிய வேடர்கள் காட்டு வழிகளில் ஒளிந்திருந்து தாக்கினார்கள். பசுக்கூட்டங்களைப் பெரும்பாலும் இரவு நேரங்களில் கவர்ந்து வந்து வேட்டைக் குடிகளுக்கு இடையே பங்கு போட்டார்கள். பசுக்களைக் கள்ளுக்கு விலையாகத் தந்து குடித்தார்கள். கொழுத்த மாட்டை அறுத்து உண்டார்கள். வழிப் போக்கர்களை மறித்துக் கொன்று கொள்ளையிட்ட பொருளைக் ‘கூட்டுண்டு பகிர்ந்தார்கள் (குறுந்.331). ‘கூட்டுண்ணும் புல்லென் மன்றம்’(நற்.33) என்று வேடர்கள் வாழ்ந்த சிறுகுடி பற்றிச் சங்க பனுவல்கள் குறிக்கின்றன. ஆநிரை கவர்தலாகிய வெட்சிப் போரில் மாண்ட வீரமறவராகிய வேடர்களுக்குப் பாதையோரங்களில் நடுகல் எடுப்பித்தார்கள் (அகநா.35,67). நடுகல்லில் அவ்வீரன் உறைவதாக எண்ணி வழிபாடு நடத்திப் பலி கொடுத்தார்கள். பசுக் கூட்டங்களைக் கவர்ந்து வேடர்கள் தமக்குள் பகுத்துக் கொண்டதற்குச் சான்றாக,

*“இரவுக் குறும்பு அலறநூறி நிரைபகுத்து*
*இருங்கல் முடுக்கர்த் திற்றி கெண்டும்*
*கொலைவில் ஆடவர்..........” (அகநா.97:4-6)*

என்னும் பாடலடிகள் அமையும். வேட்டையாடி வந்த விலங்கின் இறைச்சியை வேட்டைக் குடிகளுக்கிடையே கூறு போட்டுப் பகிர்ந்து உண்டார்கள். எயினக்குடி வேடர்கள் வேட்டையாடிக் கொணர்ந்த இறைச்சியை, அக்குடியைச் சேர்ந்த எயிற்றி காய வைத்தாள் (ஐங்.37:5), எயினரும் பிற வேடரும் செந்துவர் ஊட்டிய ஆடை அணிந்திருந்தார்கள் (ஐங்.37:3), (நற்.33). வணிகச் சாத்தினை மறித்துத்

தாக்கிக் கொள்ளையடித்து கொள்ளையைத் தங்கள் குடிகளுக்கு இடையே பகுத்துக் கொண்டார்கள் வேடர்கள். இதனை,

*“……………சாத்து எறிந்து*
*அதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழிக்*
*கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ” (அகநா.167:7-9)*

*“களரி பரந்த கல்நெடு மருங்கின்*
*விளர்ஊன் தின்ற வீங்குசிலை மறவர்*
*மைபடு திண்தோள் மலிர வாட்டி*
*பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய*
*திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த*
*படுபுலாக் கமழும் ஞாட்பில் துடிஇகுத்து*
*அருங்கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தர்*
*விலங்கெழு குறும்பில் கோள்முறை பகுக்கும்*
*கொல்லை இரும்புனம்..........” (அகநா.89:9-17)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். கள்வர் பகை மிகு கவலைச் செல் நெறி காண்மார் மிசை மரம் சேர்த்திய கவை முறியாஅத்து (அகநா:257) என்ற பாடல் அடிகளில் கள்வர்கள் வழிப்போக்கர்களைத் தூரத்திலிருந்தே காணும் பொருட்டு யா மரத்தில் சேர்த்திய கவைமுறி ஏறி மறைந்திருந்து காத்திருந்தார்கள் (அகநா.257) என்ற கருத்து உள்ளது.

*‘வெருவரு வியன்காட்டு*

*ஆறுசெல் வம்பலர் வருதிறம் காண்மார்*

*வில்வல் ஆடவர் மேலாள் ஒற்றி*

*நீடுநிலை மராஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம் (அகநா.263:5-8)*

என்னும் பாடலடிகள் வழிப்போக்கர் நடமாட்டத்தை ஆள்கொண்டு ஒற்றறிந்துள்ளனர் என்பதை உணர்த்துகின்றன. கண்ணியைத் தலையில் சூடிய ஆறலை கள்வரான வேடர்களின் தொல்லைக்கு அஞ்சிய வணிகச் சாத்துக்கள் அவ்வழிகளில் செல்வதைநிறுத்தியதாக ஒரு பாடல் கூறியுள்ளது (அகநா.291). வேடர்கள் ஆயர்களோடு போரிட்டு ஆநிரைகளைக் கவர்ந்த செயலைப் பல பாடல்கள் சுட்டும். (அகநா.35, 97, 101, 129, 131, 159, 249, 309) இவற்றுள்,

*“தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு சரிந்த*
*சுவல்மாய் பித்தைச் செங்கண் மழவர்*
*வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்*
*தீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி*
*நுரைதெரி மத்தம் கொளீஇ நிரைப் புறத்து*
*அடிபுதை தொடுதோல் பறைய ஏகிக்*

*கடிபுலம் கவர்ந்த கன்றுடைக் கொள்ளையர்*
*இனம்தலை பெயர்க்கும் நனந்தலைப் பெருங்காட்டு (அகநா.101:4-11)*

என்னும் பாடலடிகள் குறிப்பிடத்தக்கனவாகும். இதில் ஆட்டுக்கிடாயின் சுருண்ட கொம்பைப் போல தோள்வரை சுற்றிச் சுருண்ட தலைமுடியையுடைய வேடர்கள் ஆநிரை கவர்ந்த போராட்டத்தின் போது , ஆயர்களுடைய ஆநிரைகளோடு, அவர்களது தீக்கடை கோலையும், வில்லையும், மத்தையும் பறித்துக் கன்றுக்குட்டிகளையும் கவர்ந்து சென்றார்கள் என்னும் கருத்து இடம் பெற்றுள்ளது. வேடர்களின் உருவத் தோற்றம் பற்றிய குறிப்பு இதில் காணப்படுகிறது. அவர்களது தோற்றமே அச்சம் தரத்தக்கதாக இருந்துள்ளது.

இவர்களைப் பற்றி அன்றைய சமூகத்தில் உலவிய மதிப்பீட்டினைப் புலவர் மரபு பதிவு செய்துள்ளது. ‘செல்சாத்து எறியும் பண்பில் வாழ்க்கை’ (அகநா.245) இவர்களது வாழ்க்கை. வழிப்போக்கரிடம் கொள்ளையிடக் ‘கலன் இலர் ஆயினும் கொன்று புள் ஊட்டும் கல்லா இளையர்..’ (அகநா.375) என்று உயிரைக்கொல்லுவதில் ஊக்கமுடையவர்களாக வேடர்கள் நோக்கப்பட்டார்கள். மடியில் தூது ஓலை கட்டித் தூது போன பார்ப்பானிடம் பொன் இருக்கும் என எண்ணி அவனைக் கொன்று வீழ்த்திய வேடர்கள், கந்தல் ஆடை அணிந்திருந்த பார்ப்பானின் வறிய நிலையைக் கண்டு, ஏதும் கிடைக்காததால் கை நொடித்துவிட்டுச் சென்றதை,

*“தூதொய் பார்ப்பான் மடிவெள் ளோலைப்*
*படையுடைக் கையர் வருதொடர் நோக்கி*
*உண்ணா மருங்குல் இன்னோன் கையது*
*பொன் ஆகுதலும் உண்டென கொன்னே*
*தடிந்துஉடன் வீழ்த்த கடுங்கண் மழவர்*
*திறனில் சிதாஅர் வறுமை நோக்கிச்*
*செங்கோல் அம்பினர் கைந்நொடியாப் பெயர”– (அகநா.337:7-12)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். சங்கப் பாடல்களில் பிற்பகுதியைச் சேர்ந்த கலித்தொகையில் வேடர்களைப் பற்றிய எதிர் மறையான கருத்துகள் இடம் பெற்றுள்ளன. வேடர்களைத் திருடர், கொள்ளையர், கொலைக்காரர், வேறு எதற்காகவுமின்றி பிறர் துடிதுடித்துச் சாவதைக்கண்டு மகிழ்வதற்காகவே கொலை செய்பவர் என்று இவர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளன. இதற்கு,

*“வலிமுன்பின் வல்லென்ற யாக்கை புலிநோக்கின்*
*சுற்றமை வில்லர், சுரிவளர் பித்தையர்*
*அற்றம்பார்த்து அல்கும் கடுங்கண் மறவர்*
*தாம் கொள்ளும் பொருள் இலர் ஆயினும் வம்பலர்*

*துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து உயிர் வௌவலின்*
*புள்ளும் வழங்காப் புலம்புகொள் ஆரிடை"– (கலித்.4:1-6)*

என்ற பாடல் அடிகள் சான்றாகும்.

மரபான வேட்டையாடும் வாழ்க்கையிலேயே தொடர்ந்த இந்த வேடர்கள், உடைமை நாகரிக காலத்தில் பிறர் உடைமைகளைக் கவர்ந்து கொள்ளையிடும் நிலைக்குத் தள்ளப்பட்டதை மேற்படி பாடலடிகள் உணர்த்துகின்றன. இவர்களது நாகரிகமும், கலாச்சாரமும் அன்றைய வேளாண் நாகரிகத்தின் பார்வையில் 'பண்பு இல் வாழ்க்கையாகவே பட்டன. இவர்கள் வாழ்ந்த குடிசைகள், தேக்கின் இலையைக் கவித்த புதர் போலக் காட்சியளித்தன. இக்குடிசைகளின் முற்றத்தில் இவர்கள் இறைச்சியை அவித்து உண்டார்கள் (அகநா.315). எயின வேடர்கள் பாதுகாப்பான குறும்புகளில் வாழ்ந்தார்கள். இங்கு குறும்பு எனப்படுவது சிறு அரண் போன்ற அமைப்பாகும்(அகநா.319). எயினப் பெண்கள், கரடிகள் விரும்பி மேயும் இருப்பைப் பூக்களை மூங்கில் குழாய்களில் தொகுத்துக் குன்றுப் பக்கமிருந்த சிற்றூர்களின் சிறுகுடித் தெருக்கள் தோறும் விற்று வந்தார்கள்(அகநா.331). மலைப்புற இனக்குழு வாழ்வின் எச்சங்களை வேடர்குடிச் சமூகத்தில் தெளிவாகக் காண முடியும். கோடைகாலத்தில் வறண்ட நிலங்களில் சிதறிய சிறு புல்லரிசியை எறும்புகள் தம் அளைகளில் சேகரித்ததை வேடர்கள் பறித்துத் தங்களது உணவாகக் கொண்டார்கள். விதைத்து அறுவடை செய்யப்படாத உணவு என்பதால் இது 'வித்தா வல்சி' எனப் பதிவுசெய்யப்பட்டுள்ளது. (அகநா.377).

குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய அகப்பாடல்களில் குறிக்கப்பட்ட பல சிற்றரசர்கள் காடு, மலை ஆகிய நிலப்பரப்புக்களில் ஆட்சி புரிந்தவர்களாகவே உள்ளார்கள். வேடர், கானக்குறவர் முதலான தொல்குடி மக்களின் இனக்குழு மதிப்பீடுகளை அம்மன்னர்கள் தொடர்ந்து பேணி வந்தார்கள். கடையெழு வள்ளல்கள் இதற்குச் சான்று. ஓரி, காரி, நள்ளி, ஆய் முதலிய மன்னர்கள் இனக்குழு மரபைச் சேர்ந்தவர்கள் ஆவர். வேடர் சமூகப் பின்னணி உடைய இவர்களைப் போன்ற மலை, காட்டு, நாட்டு சிற்றரசர்கள் பலரும் ஆநிரைகளைக் கவர்தல், வேட்டையாடுதல் ஆகிய வழக்கத்தை விடாது பேணி வந்தார்கள். 'ஆஅய் கானம்', 'மலையன் கானம்', 'நள்ளி கானம்', 'ஓரி கொல்லி', பாரியின் பறம்பு', 'புல்லிகாடு' என்று அவர்கள் அடையாளப்படுத்தப்பட்டார்கள். இவர்களில் பலர், வேளாண் நாகரிக

உச்சத்திலிருந்த மூவேந்தர்கள் ஏவிய தொழிலை போர்த் தொழிலைச் செய்து, அதற்குப் பங்கீட்டைப் பெற்றார்கள். இதனை,*'வேறூர் வேந்துவிடு தொழிலொடு செலினும்' (குறுந்.242)* என்ற பாடலடி உணர்த்தும். மத்தி என்பவன்'பரதவர் கோமான்' ஆக விளங்கினான். இவன் வேந்துவிடு தொழிலில் சிறந்தவனாகவும் விளங்கினான். கபிலர், மாமூலன், பரணர், ஔவை முதலான புலவர்கள் தாங்கள் பாடிய அகப்பாடல்களில் பகிர்ந்து உண்ணும் இனக்குழுப் பண்பாட்டில் வாழ்ந்து அரசாண்ட இத்தகைய மலை, காட்டு, நாட்டுக் குறுநில மன்னர்களைப் பற்றி விரிவாகக் குறிப்பிட்டுள்ளனர்.

**கானக்குறவர் இனம்**

வேடர்க்கு அடுத்து, அகப்பாடல்களில் குறிஞ்சித்திணை என இலக்கண மரபு வகுத்த திணையில் தொகுக்கப்பட்டுள்ள பாடல்களில் மலை விவசாயம் தேன், கிழங்கு, பழங்கள் சேகரிப்பு, வேட்டை என்ற அளவில் வேடர்களைவிட உணவு, உற்பத்தி, நாகரிகம், பண்பாடு ஆகிய நிலைகளில் வளர்ந்திருந்த கானக்குறவர் ஆவர். கானக்குறவர், குன்றக்குறவர், புனக்குறவன், ஏனல் தினைக் காவலர், கானவன், நாடன், பல்கிளைக் குறவர், மலைஉறை குறவர், குடிக்குறவர், புனவன், சிறுகுடிக் கானவன் என்று பல பெயர்களால் சுட்டப்பட்ட இனக்குழுவினர் பற்றிக் காண முடிகிறது.

வேடர்களின் வாழ்விடத்திற்கும் இந்தக் கானக்குறவர் வாழ்விடத்திற்கும் பெரிய வேறுபாடு இருந்திருக்க முடியாது. உதாரணமாக; திண்டிவனம் மாவட்டத்தைச் சேர்ந்த மயிலம் கிராமத்தில் 'வில்லி மக்கள்' (வில்லி ஜனம் என பேச்சு வழக்கில் கூறுகின்றனர்.) குறவர் குடியைச்சேர்ந்த குறவர் இன மக்கள் அருகருகே வாழ்கின்றனர். இவர்களுக்கு தமிழ்நாட்டு அரசாங்கம் தொகுப்பு வீடு கட்டி வழங்குவதற்கு முன்பு வேடர்கள் வேழம் வேய்ந்த புல் குடிசையிலும் குறவர்கள் இதுபோன்ற குடிசைகளிலும் வாழ்ந்ததை அறிய முடிகிறது. இவர்களில் குறவர்கள் வில்லி மக்களைவிட, தாங்கள் உயர்ந்தவர் என்றும் வில்லி மக்கள் குறவர்களைவிட தாங்கள் உயர்குடியைச் சேர்ந்தவர் என்றும் கருதுவது இன்றளவும் நடைமுறையில் உள்ளது. இங்கு இரு இனக்குழு மக்களும் அருகருகே ஒரே தெருவில் வசிக்கின்றனர். குறவரின ஆண்களும் பெண்களும் வேட்டைத்தொழிலில் ஈடுபடுகின்றனர். வேட்டை ஒழிந்த காலத்தில் பாசி, ஊசி விற்கின்றனர். வேட்டையில் கிடைத்த நரியின் பல், முயல் இரத்தம்,

கொக்கு போன்றவற்றை ஊர்ப்புறங்களுக்குச் சென்று விற்கின்றனர். வில்லி இன மக்கள் வேட்டைத் தொழிலில் ஈடுபடுவதோடு விவசாயக் கூலி ஆட்களாகவும் வேலைசெய்கின்றனர். எந்தக் காரணம் கொண்டும் குறவரினப் பெண்கள் ஆண்கள் வேறொரு இனக்குழு மக்களுடைய நிலத்தில் விவசாயக் கூலித் தொழிலில் ஈடுபடுவது கிடையாது. அவ்வாறு ஈடுபடுவதைக் குலத்திற்கு இழுக்காக எண்ணுகின்றனர்.

சங்ககாலக் கானக்குறவர்கள் மலைவிவசாயத்தை மேற்கொள்ளாத பட்சத்தில் அவர்களை வேடர்களிலிருந்து பிரித்துப் பார்க்க இயலாது. வேடர், கானக்குறவர் ஆகிய இரு இனக்குழு மக்களிடமும் வேட்டையாடுவதற்கான வில், அம்பு, வேட்டை நாய், கொம்பு, வலை, பொறி ஆகியவை இருந்தன. வேடரையும் கானக் குறவரையும் ஒருவராகப் பார்த்து ஐயுற்ற நிலைமை சங்க காலத்திலேயே இருந்துள்ளது. தன்னை வேட்டுவ மகளெனக் குழம்பிய ஆண் மகனிடம் ஒரு குறவரின மகள்,

*''கோடு துவையா கோள்வாய் நாயொடு*
*காடு தேர்ந்து அசைஇய வயமான் வேட்டு*
*வயவர் மகளிர் என்றி ஆயின்*
*குறவர் மகளிரேம் குன்றுகெழு கொடிச்சியேம்*
*சேணோன் இழைத்த நெடுங்காற் கழுதில்*
*கான மஞ்ஞை கட்சி சேக்கும்*
*கல் அகத்து எம்ஊரே''– (நற்.276:1-7)*

என்று தெளிவுப்படுத்துகிறாள்.

கானக்குறவரின் வேட்டைத்தொழில், அவர்கள் செய்த மலை விவசாயத்திற்கு அரணாக மாறியதைப் பல பாடல்கள் உணர்த்தும். தினைப்புனத்தை மேய வந்த காட்டுப்பன்றி, முள்ளம் பன்றி, யானை முதலிய விலங்குகளை விரட்டுவதற்கும், கொல்வதற்கும் வேட்டை பயன்படலாயிற்று. அவ்வாறு ஆடிய வேட்டையில் சிக்கிய விலங்கின் இறைச்சியை, வேடர் சமூகத்தில் கூறுகட்டிப் பாதீடு செய்து கொண்டது போலவே குறவர் சமூகத்திலும் பாதீடு எனும் கூட்டுண்ணும் முறை வழக்கில் இருந்துள்ளது.

*''பிணர்ச்சுவல் பன்றி தொல்முலைப் பிணவொடு*
*கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்*
*கல் அதர் அரும்புழை அல்கி கானவன்*
*வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை*
*புனைஇருங் கதுப்பின் மனையோள் கெண்டி*
*குடிமுறை பகுக்கும் நெடுமலை நாடு''– (நற்.336:1-6)*

என்ற பாடலடிகளில் பகுத்துக் கொடுத்தமுறை குறிக்கப்பட்டுள்ளது. தினை, ஐவன விவசாயம் நடவாத காலங்களில் கானக்குறவர்கள் தங்களது தொன்மையான வேட்டைத் தொழிலை மேற்கொண்டுள்ளனர்.

*“......................... உரவுக் கணை*

*வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி*
*உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு*
*மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட*
*வேட்டு வலம்படுத்த உவகையான், காட்ட*
*நடுகாற் குரம்பைத் தன்குடிவயின் பெயரும்*
*குன்ற நாடு..............”– (நற்.285:2-8)*

என்ற பாடல், கானக்குறவனை ஒரு வேடனாகவே சித்திரித்துள்ளது. வேட்டையில் தனது அம்பு, குறி தப்பியதற்காகக் கானவன் மலையுறை தெய்வத்துக்குத் தன் கிளையோடு பலி கொடுத்துள்ளான் (நற்.165). சுருக்குவார் பொறி, கல் அடார், வலை ஆகியவற்றை அமைத்தும் விலங்குகளைக் கானக் குறவர்கள் வேட்டையாடியுள்ளனர் (நற்.82,98,119).

யானைக் கொம்புக்காகக் குறவர்கள் வேட்டை மேற்கொண்டதற்குப் பல பாடல்களில் சான்றுகள் உள்ளன. ‘இரும்பு வடித்தன்ன கருங்கைக் கானவன்’, வரிநுதல் யானையின் மார்பில் அம்பு எய்து கொன்று, அதன் வெண்கொம்புகளைப் பறித்துக்கொண்டு தனது புல் வேய்ந்த குடிசை முற்றத்தில் ஊன்றிப் புலர வைத்தான் (அகநா.172). யானையின் வெண்கொம்புகளை விரும்பிய அன்பற்ற கானவர், யானைகள் இயங்கும் வழியில் குழி தோண்டி வைத்தனர்(அகநா.21). யானைக் கொம்புகளைக் கொணர்ந்து அகன்ற பாறையில் காயவைத்தனர். அதன் இறைச்சியை அறுத்து, அதன் நகங்களைப் புதைத்தனர்(நற்,114). புலியோடு போரிட்டுப் புண்பட்ட யானையைக் கொன்று கொம்பெடுத்தனர் (நற்.65).

*“பூங்கண் வேங்கைப் பொன்இணர் மலைந்து*
*வாங்கமை நோன்சிலை எருத்தத்து இரீஇ*
*தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்*
*வீளை அம்பின் இளையரொடு மாந்தி*
*ஓட்டியல் பிழையா வயநாய் பிற்பட*
*வேட்டம் போகிய குறவன் காட்ட*
*குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர*
*முளவுமாத் தொலைச்சும் குன்ற நாடு....”– (அகநா.182:1-8)*

என்ற பாடலடிகள், கானக் குறவர் குடியினர் அடிப்படையில் வேடர்களே என்பதை உணர்த்தும். வேடர் இனக்குழுவின் பரிணாமவளர்ச்சியில் கானக்குறவரை ஒரு கிளையாகக் கருத இயலும். வேடர்கள், ஆகியோர் ஆநிரைகளைக் கவர்தல், வேந்துவிடு தொழில் செய்தல், காட்டரணைக் காத்தல் என்ற மாற்றங்களை அடைந்தார்கள். ஆனால் கானக் குறவர்கள், கிழங்கு தேன் எடுத்தல், பலா மரங்களை வளர்த்தல் என, மலைச்சாரல்களில் புனங்களை உண்டாக்கி தினை, ஐவனம் ஆகியவற்றைப் பயிரிடும் வாழ்க்கை முறையில் நிலை பெற்றார்கள். வேடர்களைப் போல அவர்கள் போர்களில் ஈடுபடவில்லை. ஆநிரைகளைக் கவரவில்லை. மலைச்சாரல்களில் இடப்பெயர்ச்சி விவசாய முறையை, அழித்து எரிக்கும் உத்தியின் மூலம் மேற்கொண்டார்கள்.

**ஆயர் இனம்**

மலையுறை, புறவு என்ற சொற்களால் குறிக்கப்பட்ட வானம் பார்த்த பூமிப் பரப்பில் கால்நடைகளை மேய்த்துப் பாதுகாத்து அவற்றிலிருந்து பால்பொருட்களை உண்டும் பண்டமாற்று செய்தும் வாழ்ந்துள்ளனர் ஆயர், இடையர், கோவலர் என்ற சொற்களால் குறிக்கப்பட்டுள்ளனர். சமவெளிக் காடுகளும் மேய்ச்சல் நிலங்களும் இவர்களது வாழ்க்கைக்கு உகந்ததாக இருந்துள்ளன. ஆநிரைகளும், ஆடுகளும், எருதுகளும், அதற்குரிய மேய்ச்சல் நிலங்களும் ஆயர்களுக்கு உடைமையாகிவிட்ட காலச்சூழலை ஊகிக்க முடியும். உற்பத்தி செய்தல் என்ற நாகரிக வளர்ச்சியை முல்லை நில மக்கள் எட்டியமை தெரிகிறது. ஆநிரைகளை வேடர்கள் கொள்ளையடித்தது, அரசர்கள் ஆநிரைகளைக் கவருதற்காகப் போர்கள் நடத்தியது ஆகிய நிகழ்வுகள் குறிப்பிடத்தக்கவை.

கால்நடைகளில் ஆடு, மாடுகள் அடக்கம். ஆடுகளில் வெள்ளாடு, துருவையாடு(செம்மறி) ஆகிய வகைகளும் மாடுகளில் ஆன்(பசு), எருது(காளை) ஆகிய வகைகளும் வளர்க்கப்பட்டுள்ளன. பசுக்களிலும் கூட காரான், சேதா முதலிய வண்ணப் பிரிவுகள் இருந்துள்ளன. பகல் நேரங்களில் இவற்றைக் கோவலர் ஆயர், இடையர் ஆகியோர் மேய்ச்சல் பரப்பில் மேய்த்துவிட்டு மாலையில் வீடு திரும்பியுள்ளனர். கால்நடைகளைத் தொழுவிலோ, குறும்பிலோ (சிற்றரண்) அடைத்துள்ளனர். மாடுகளின் கழுத்தில் மணி கட்டியுள்ளனர். கால் நடைகளைச் சிதறாதவாறு மூங்கில் குழல் ஓசையாலும், சீழ்க்கை ஒலியாலும்

ஒழுங்குபடுத்தியுள்ளனர். பூழியர் என்ற குடியினர் வெள்ளாடுகளை வளர்ப்பதையே தொழிலாகவும் வாழ்க்கையாகவும் கொண்டிருந்துள்ளனர்(குறுந்.163).

ஆடு மேய்த்துப் பாராமரிப்பவர்கள் பொதுவாக ‘இடைமகன்’,‘இடையன்’ என வழங்கப்பட்டுள்ளனர். இவர்கள் தங்கள் மறியினத்தின் பாலைக் கறந்து வந்து உணவுக்கு மாற்றாக விற்றுள்ளனர்(குறுந்.221). தலையில் முல்லை மொட்டுக்களைக் கண்ணியாகச் சூடியுள்ளனர்.

*“வான் இகுபு சொரிந்த வயங்கு பெயற்கடை நாள்*
*பாணி கொண்ட பல்கால் மெல் உறி*
*ஞெலி கோல் கலப்பை அதளடு சுருக்கி*
*பறிப் புறத்து இட்ட பால் நொடை இடையன்*
*நுண் பல் துவலை ஒரு திறம் நனைப்ப*
*தண்டு கால் வைத்த ஒடுங்கு நிலை மடி விளி*
*சிறுதலைத் தொழுதி ஏமார்ந்து அல்கும்*
*புறவினதுவே………” (நற்.142:1-8)*

“மழை கொட்டுகிற நள்ளிரவில். துருவை ஆட்டு மந்தையைக் காத்த இடையன் தீக்கடை கோலால் தீமூட்டினான். உறி, பானை. தோல் ஆகியவற்றை வைத்திருந்தான். மழைத்துளிகள் அவனது ஒரு புறத்தை நனைத்தன. தண்டினைக் காலாக ஊன்றிய தனிநிலை இடையனின் சீழ்க்கை ஒலி கேட்டு, மறி பார்த்து ஒளிந்திருக்கும் குறுநரி வெருண்டு ஓடும் முல்லை நிலம்” என்பர் (அகநா.274). “புல்லி ஆண்ட வேங்கட நாட்டு இடையர்கள் வழிப்போக்கர்களுக்குத் தாங்கள் சமைத்த உணவைப் பகிர்ந்து உண்டதை மாமூலன், வழிக்போக்கர்களின் பசியைத் தீர்ப்பதற்காகப் புல்லி நாட்டு இடையர்கள் வரகு தாள்களில் மாடுகளின் குளம்புகள் பட்டு உதிர்த்த வரகு தானியத்தைச் சேர்த்து அகன்ற பாறையில் பரப்பினார்கள். வரகினை இடையர் பெண்கள் திரிகையில் திரித்து சுளகால் சொலித்து, புடைத்து தூசு நீக்கி உரலில் இட்டு மழுக்கினார்கள். பின்னர் சுனை நீரெடுத்துப் பானையில் ஊற்றிக் கல் அடுப்பில் ஏற்றி வரகஞ்சோறு சமைத்து ஆன் பாலோடு பகுத்துண்டார்கள்” என்பர் (அகநா.393). பூழியர் குடி ஆடுகளை வளர்த்தது போல, கொங்கு நாட்டுக்கொங்கர்குடி பசுக்களை வளர்த்தது. ஆயர்களின் குடிசைகள் புல்லால் வேயப்பட்டிருந்தன. அவற்றின் முன் படலைக்கொடி படர்ந்த பந்தல் அமைக்கப்பட்டிருந்தது (அகநா.87). கொல்லை நிலத்தில் வாழ்ந்த கோவலர்கள் இரவில் தங்கள் ஆநிரைகளைக் காக்க பெரிய மரக் கட்டைகளை எரித்தார்கள்

(நற்.289). இது கானக்குறவர்கள் பரணில் அமர்ந்து தினைப்புனக் கதிர்களை காத்தது போன்றதாகும்.

ஆயர்மகளிர் பாலில் உறை ஊற்றித் தயிராக்கி அதிகாலையில் வீடுகளில் மத்துக்களில் கயிறு மாட்டி தயிர் கடைந்து வெண்ணெய், நெய் எடுத்துள்ளனர். பால், மோர், நெய் ஆகியவற்றைப் பண்டமாற்றாக விற்று நெல் முதலியன பெற்றுள்ளனர். பால்முடை நாற்றம் தீருவதற்காகத் தயிர் கடையும் பானையில் விளாம்பழத்தைப் போட்டு மூடிவைத்துள்ளனர் (நற்.12). காடு, மலைப் பகுதிகளில் ஆநிரைகளை மேய்த்தபோது அவற்றின் தாகத்தைத் தீர்ப்பது ஆயர்களுக்கு அன்று பெரும் பிரச்சினையாக இருந்துள்ளது. வறண்ட மலைப் பிரதேசங்களில் மாடுகளுக்குத் தண்ணீர் கிடைப்பது அரிதாக இருந்துள்ளது. இதனைத் தீர்ப்பதற்கு,'ஆன்நீர்ப்பந்தல்' எனப்படும் மாடுகள் நீர் குடிக்கும் குழிகளைத் தோண்டி அவற்றில் கேணி அல்லது கிணற்று நீரைப் பத்தலில் (நீர்பிடிக்கும் மரக்கருவி) இறைத்து நிரப்பி வைத்துள்ளனர் (ஐங்.31:4). இவ்வாறு காட்டு வழிகளிலும் பாறை வழிகளிலும் மாடுகளுக்காக நீர் பிடித்து வைத்த செய்தி பல பாடல்களில் இடம் பெற்றுள்ளன. (நற்.240, அகநா.21, 79, 155, 321) வெயில் கொளுத்தும் நேரத்தில், பரற்கற்கள் கொண்ட மேட்டு ஒதுக்கத்தில் ஆயர்கள் கணிச்சி (கோடாலி) என்ற கருவியால் 'கூவல்' தோண்டி அதில் ஊறிய நீரை மாடுகள் குடிக்க வைத்தனர் (நற்.240). பாறையைப் பிளந்து கருங்கை ஆடவர் தோண்டிய உவர்நீர்ப் படுவில் ஊறிய நீரைக் குடிக்கக் கொங்கரின் பசுக்கூட்டம் நிமிர்ந்து சென்ற போது எழுந்த செம்மண் துகள் வானத்தை அடைத்துத் தோன்றியது (அகநா.79). முல்லைநில ஆண்களின் ஆநிரை வளர்ப்பு என்பது விவசாயத்துக்குத் துணைத்தொழிலாக இன்றி அவர்கள் வாழ்க்கையின் முழுமுதற் தொழிலாக இருந்துள்ளது.

ஆயர், ஆயமகளிர் பற்றிய ஓர் அகநானூற்றுப் பாடலில், வடக்கே கோபியரின் ஆடைகளைத் திருடி மரக்கிளையில் ஒளித்துப் பிறகு கிளையை மிதித்து அவர்களது ஆடைகளை எடுக்கச் செய்த கிருட்டிண அவதார நிகழ்ச்சியை மதுரை மருதன் இளநாகன்,

*"......வடாஅது*
*வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை*
*அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்*
*மரம்செல மிதித்த மாஅல் போல..."– (அகநா.59:3-6)*

என்பர். முல்லைத் திணையின் ஆயர்களைப் பாடிய புலவர்களில் ஒரு சிலர்க்கு, யமுனை நதிக்கரையில் கிருட்டிணாவதாரக் கதையோடு தொடர்புடைய யாதவர் பற்றிய கற்பனை உதித்தது. இந்தப் போக்கு, பிற்பட்ட முல்லைக்கலிப் பாடல்களில் தமிழக ஆயர்களை வடநாட்டு யாதவர் குடிப் பிறந்த கிருட்டிணனின் அவதாரத்தோடு ஒத்திசைவு செய்யும் கற்பனையோடு இணைந்தது. முல்லைக்கலிப் பாடல்களில் ஆயர்கள், ஆநிரைகள், பசுக்களின் வகைகள், தாது எரு மன்றம், ஏறுகளின் போர், ஏறுதழுவுதல், ஏறு தழுவி ஏற்றுக்குச் சொந்தக்காரியை மணம்புரிதல் ஆகிய செய்திகளே விவரிக்கப்பட்டுள்ளன. இவற்றுக்குப் பொருத்தமான கிருஷ்ணாவதார நிகழ்ச்சிகளும், ஏனைய அவதாரங்களும், வைணவக் கடவுள்களும் உவமைகளாக இடம் பெயர்க்கப்பட்டுள்ளன. சங்க கால முல்லைநில ஆயர்குடியினரிலிருந்து முல்லைக்கலி ஆயர்கள் வேறுபட்டுள்ளதாகத் தெரிகிறது, அல்லது வேறு மரபையொட்டிச் சித்தரிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

**மென்புல வன்புல உழவர் இனம்**

கானக்குறவர்கள் வாழ்ந்த மலைசாரலில் இருந்த மரம், புதர், கொடி முதலியவற்றுக்கு நெருப்பூட்டி எரித்துச் சாம்பலாக்கிப் புனங்களை ஏற்படுத்தினார்கள். மழை பெய்த பின் தினை அல்லது ஐவனம் என்ற காட்டு நெல் வகையை விதைத்து வளர்த்து அறுவடை செய்தார்கள். தொடர்ச்சியாக அப்புனங்களில் பயிரிடவில்லை. புதிய புதிய புனங்களை ஆங்காங்கு உண்டாக்கிப் பயிரிட்டார்கள். வேட்டையில் சிக்கிய இறைச்சியைக் குறவர் குடிகளுக்கிடையில் பகிர்ந்து உண்டது போல, தினை, ஐவனத் தானியங்களைப் பகிர்ந்து கொள்ளவில்லை. பயிரிட்ட குடும்பங்களுக்கு உரியவையாக அவை கருதப்பட்டிருக்க வேண்டும். புனங்கள் குறவர் குடும்பங்களின் தனி உடைமைகளாக நோக்கப்படவில்லை. அவ்வாறு நோக்கப்பட்டிருந்தால் இடப்பெயர்ச்சி விவசாய முறை சாத்தியமாகியிருக்காது. புனத்தில் மழைநீரைச் சார்ந்து தினை விளைவிக்கப்பட்டது. ஐவன நெல்லை அருவிப் பரப்பில் விதைத்து, காட்டு முல்லை மற்றும் கற்றாழை முதலியவை களையாக எடுத்து விளைய வைத்தார்கள் (குறுந்.100,371). அருவி நீர்ப்பாசனத்தால் ஐவன நெல்லை மட்டுமின்றி, மலை வாழைகளைப் பயிரிட்டு வளர்த்தார்கள். தினை பயிரிட்ட நிலத்தைப் ‘புனம்’,‘ஏனல்’ என்ற சொற்களாலும் ‘துடவை’ என்ற சொல்லாலும் புலவர் மரபு குறிப்பிட்டது. இச்சொற்களால் சுட்டப்பட்ட தினை

விளை நிலப்பரப்புகளுக்கிடையே சிறுசிறு வேறுபாடுகள் இருந்திருக்கக் கூடும். ‘துடவை’ என்பதற்குத் தோட்டம் என்று உரைகாரர்கள் பொருள் கூறுவர். குறவர்கள் வாழ்ந்த இடங்களுக்கும் தினை விளைவித்த இடங்களுக்கும் இடையிலுள்ள தூரத்தைக் கொண்டு வெவ்வேறு பெயர்களால் அவை அழைக்கப்பட்டுள்ளன. ‘படப்பை’ என்ற சொல்லும் பயிரிட்ட நிலப்பரப்புக்குரிய பெயராக அன்று வழங்கப்பட்டுள்ளது. மரங்களை எரித்து அவ்விடத்தில் புனம் உருவாக்கியதற்கு,

*“மரங்கொல் கானவன் புனந்துளர்ந்து வித்திய*
*பிறங்கு குரல் இறடிகாக்கும் புறந்தாழ்”– (குறுந்.214:1-2).*

என்னும் பாடலடிகள் சான்றாகும்.குறமகளிர் பாறையில் காயவைத்த செந்தினையை மந்திகள் தம் குட்டிகளோடு மேய்ந்துள்ளன. (குறுந்.335).

ஊருக்குள் மட்டுமின்றி, ஊரையடுத்து இருந்த புனங்களில் விளைந்த தானிங்களை யானை, பன்றி, மான், மந்தி முதலான வனவிலங்குகள் மேய்ந்து அழித்தன. (நற்.82, 98, 108, 119, 336, அகநா:292, 392. கலித்:41) விளைந்த தினைக்கதிர்களைக் காட்டு விலங்குகள் பெரும்பாலும் இரவு நேரங்களில் மேய்ந்தன. பகற்பொழுதில் கிளிகள், மயில்கள், மந்திகள், குருவிகள் மேய்ந்தன.அவற்றைக் குறமகளிர் தத்தம் புனங்களில் நாட்டிய பரண்களில் ஏறித் தட்டை, குளிர், முறி முதலான கருவிகளை அடித்து விரட்டியுள்ளனர். இதனை,

*“பின்இருங் கூந்தல் நல்நுதல் குறமகள்*
*மென்தினை நுவணை உண்டு தட்டையின்*
*ஐவனச் சிறு கிளி கடியும்” (ஐங்.29:5)*
*“பரீஇ வித்திய ஏனல்*
*குரீஇ ஓப்புவாள் பெருமழைக் கண்ணே” (குறுந்.72:4-5)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இரவு நேரங்களில் குறவர்கள் தீப்பந்தம் ஏந்திப் புனங்களைக் காவல் காத்துள்ளனர். “சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி வான்மீனின் வயின்வயின் அமைக்கும் ஓங்கு மலை நாடு.(குறுந்.150) என்று ஒரு புலவர் அதனை வருணித்துள்ளார். மேய வந்த தனி யானையைக் கணை எய்தும் கிணைப்பறை கொட்டியும் கவண் கற்களை வீசியும் பெரும் ஆர்ப்பாட்டம் செய்தும் விரட்டியுள்ளனர் (நற்.108). புனத்தைக் காத்தவர்கள் அவ்வப்போது கொம்புகளை ஊதி ஓசை உண்டாக்கியுள்ளனர் (அகநா.94).

புனத்தைக் காப்பதற்காக மலைக்குகை மீது உயரத்தில் பரணைக் கட்டினார்கள். யானையின் நிமிர்ந்து ஓங்கிய கைகளுக்கு எட்டாத உயரத்தில்

அந்தப் பரண் அமைக்கப்பட்டது (அகநா.308). விலங்குகளின் நடமாட்டத்தை ஒற்றி அறிவதற்கு ஏதுவாகப் புனத்தை ஒட்டிய வேங்கை மரக் கவட்டிலோ, ஆசினிப் பலா மரத்திலோ (கலித்.41). மலைக் குகை மீதோ 'கல்முகை' என்னும் பரணை அமைத்தமை தெரிகிறது. பரணுக்குக் கழுது (கல் உயர் கழுது அகநா.392), இதணம், பணவை என்ற சொற்கள் அன்று வழக்கில் இருந்துள்ளன. பகலில் குறமகளிரும், இரவில் குறவரும் இவற்றில் ஏறியிருந்து விளைந்த தினைப்புனங்களைக் கண்காணித்துள்ளனர். கானக்குறவர் குடி வாழ்க்கையை,

*''கிழங்கு கீழ்வீழ்ந்து தேன்மேல் தூங்கி*
*சிற்சில வித்திப் பற்பல விளைந்து*
*தினைகிளி கடியும் பெருங்கல் நாடு''– (நற்.328:1-3)*

என்னும் பாடலடிகள் சுட்டும். வேட்டை, தினை விவசாயத்தோடு கிழங்கு, தேன், மா, பலாக்கொட்டை முதலிய உணவுகளைச் சேகரிப்பது குறவரின் வாழ்க்கையில் முக்கிய இடம் பெற்றிருக்கிறது.

*''சிறுகுடியீரே சிறுகுடியீரே*
*வள்ளி கீழ்வீழாவரைமிசைத் தேன்தொடா*
*கொல்லை குரல் வாங்கி ஈனா - மலை வாழ்நர்*
*அல்லபுரிந்து ஒழுகலான்' (கலித்.39:10-13)*

என்ற பாடலடிகளிலும் மலை வாழ்நரான கானவர் வாழ்க்கை உரைக்கப்பட்டுள்ளது. இதனால் கானக் குறவரின் ஒழுக்கத்திற்கும் மலை விளைச்சலுக்கும் இணைப்பு ஏற்படுத்தும் நம்பிக்கையை புலனாகும்.எல்லாவற்றையும் விடத் தினை விவசாயம் கானவரின் வாழ்வின் முக்கிய நடவடிக்கையாக இருந்துள்ளது. வேடர்குடி வாழ்விலிருந்து இந்நடவடிக்கையே இக்குறவர்குடி வாழ்வை வேறுபடுத்தியுள்ளது. தினையோடு ஐவன நெல் விவசாயமும் அடங்கும். தினை அறுவடையான மறுகாலில் 'கொழுங் கொடி அவரை'' பூத்துள்ளது (குறுந்.82); உளுந்தும் பயிரிட்டுள்ளனர்.

ஐவன விளைச்சலுக்கு அருவி நீரும், தினை விளைச்சலுக்கு மழை நீரும் போதுமானதாக இருந்துள்ளது. தினையில் செந்தினை, கருந்தினை (இறடி) என்னும் வகைகள் இருந்துள்ளன. தினையை இடித்து மாவாக்கி உண்பது அன்றைய வழக்கமாகும். இன்றும் தினை மாவினை இடித்து எல்லா சமூகத்தை சேர்ந்த மக்களும் உணவுப்பண்டங்கள் செய்கின்றனர். சாரலில் எரித்து உருவாக்கிய புனத்தில் மழை பெய்ததும் உழுது தினை விதைத்துள்ளனர்.

சுடுபுனத்தில் தினை வளர்ந்து தோகை விரித்துள்ளது. குறமகளிர் சிறுதினை வளர்ந்த புனத்தில் புழுதி கிளம்புமாறு களை எடுத்துள்ளனர்(குறுந்.392). புழுதி என்பதிலிருந்து தினை என்பது மானாவாரிப் பயிர் என்பது புலப்படும். தோகை விட்டு வளர்ந்த தினை பால் பிடித்து வளைந்த கதிரை விட்டுள்ளது. பகலும் இரவுமாகப் பரண் கட்டி மேயவந்த பறவை, விலங்குகளிடமிருந்து குறவர் குடியினர் தினையைப் பாதுகாத்துள்ளனர்.

புனத்தில் நீண்ட தோகை விட்டு விளைந்த தினைக்கதிர்களை அறுவடை செய்யக் கருதிய கானக்குறவர்கள் கூட்டமாக முற்றத்தில் தங்கி, ஆசினிப் பலா மரக்கிளையின் மேலே மின்னும் மின்மினிப் பூச்சிகளின் விளக்கத்தில் வானில் செல்லும் மேகத்தின் இயக்கத்தைக் கண்டுள்ளனர் (நற்.44). மின்மினிப்பூச்சிகள் மழை வருவதை முன்னரே அறிந்து தம் இயக்கத்தை மாற்றிக் கொள்ளும் இயல்புடையதாகும். அறுவடைக்குள்ள தினை மழையில் நனைந்தால் எதிர்பார்த்த பலனைத் தராது. தினைப் புனத்தை, தினைக் கதிரை காத்த ‘கடிஉண் கடவுளுக்கு’ என முதலில் விளைந்த தினைக் கதிரைக் குறவர்கள் நேர்ச்சை விடுவது வழக்கமாக இருந்துள்ளது. (குறுந்.105). இரவுப்பொழுதிலும் தொண்டகப்பறை கொட்டி விளைந்த தினையை அறுவடை செய்துள்ளனர். அறுவடை செய்த தினையை வேங்கைப்பூங் கண்ணி அணிந்த குறவர்கள் களத்தில் பரப்பி, எருது விட்டுப் போரடித்துள்ளனர் (நற்.125). கானக்குறவர்கள், உழுதல், போரடித்தல் போன்ற விவசாய வேலைகளுக்குக் கால்நடைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.கால்நடை சார்ந்ததொரு வாழ்க்கை ஒருபுறம் இருக்க, வன்புலங்களில் செம்மண்நிலங்களில் கொல்லை நிலங்களில் மழையை நம்பி வரகு, அவரை, எள், கொள், பயறு விவசாயத்தை மேற்கொண்ட மற்றொரு வாழ்க்கையும் இயங்கிக் கொண்டிருந்தது. கானக்குறவர் இனத்தின் மலைச்சாரல்களில் எரித்து உண்டாக்கி விளைவித்து விட்டுப்பின்னர் அதனை விடுத்து வேறு புதிய புனங்களை எரித்து உண்டாக்கித் தினை, ஐவன நெல் விவசாயம் செய்தது போல மலை நிலத்தைச் சேர்ந்த உழவர்கள் இடப்பெயர்ச்சி விவசாயத்தைப் பின்பற்றவில்லை. அதனை, கொல்லை உழவர் என்ற சொல்லாட்சி நன்கு விளக்கும்.(அகநா.194). நிரந்தரமாக நன்செய், புன்செய் நிலங்களில் உழுது விதைத்து, களை அகற்றி, அறுத்து போரடித்து, தானியம் உற்பத்தி செய்யப்பட்டது. அது உணவுக்கும் பண்ட மாற்றுக்கும் பயன்படுத்தப்பட்டது. எனவே, விளைநிலம் என்ற கருத்தாக்கம் ஏற்பட்டிருப்பதை

மறுக்கவியலாது. நீர்ப்பாசன வசதிபெற்ற மருத வயல்களில் கிழார்கள், வேளாளர்கள். அரசர் ஆகியோருக்காக உழைத்த கருங்கை உழவர்களிலிருந்து முல்லைநில உழவர்கள் வேறானவர்கள். செய்யும் தொழில் ஒன்றாயினும் மருத வயலில் உழைத்த உழவர்கள், வயலை உடைமை பூண்டவர்களுக்காக உழைத்தவர்கள் என்பதும், முல்லைக் கொல்லை, துடவைகளில்(வாழிடத்திற்கு அருகில் காட்டெரித்து புதியதாக உருவாக்கிய விளை நிலத்திற்கு துடவை என்று பெயர்) உழைத்த உழவர்கள் தங்களது உணவுத் தேவைக்காகத் தாங்கள் திருத்திய கொல்லைகளில் உழைத்தவர்கள் என்பதும்விளங்கும்.வரகு விவசாயம் செய்தவர்களைப் புலவர்கள் ‘உழவர்’ என்றே குறிப்பிட்டார்கள். ஏற்கனவே திருத்தப்பட்ட கொல்லைகளிலும் தரிசு நிலங்களை அழித்து உண்டாக்கிய புதிய கொல்லைகளிலும் முல்லைநில உழவர்கள் கூடையில் விதை வரகினைச் சுமந்து சென்று விதைத்துள்ளனர் (குறுந்.155). அது, மழைக்குச் செழித்து வளர்ந்து கதிர்கள் விட்டது. புதுப்புனங்களிலும் பழங்கொல்லைகளிலும் மழை பெய்த காலங்களில் வரகு விவசாயம் நடைபெற்றுள்ளது. விளைந்த வரகினை இரலை மான்கள் மேய்ந்தன. கானக்குறவர் தினைகளைக் கிளி, குருவி, மயில், மந்தி, பன்றி, யானை ஆகிய பலவும் மேய்ந்தது போல வரகினை மேயவில்லை. இரலைமான் ஒன்றைத் தவிர வேறு விலங்குகளின் தொந்தரவு வரகுக்கு இல்லை. அதனால் வரகுக் கொல்லையைக் காவல் காக்கப் பரணும் இல்லை. இராக் காவலும் பகல் காவலும் இல்லை. குறிப்பிட்ட காலங்களில் பருவங்களில் மட்டும் வரகு, எள், கொள், அவரை விவசாயம் நடைபெற்றதால் எஞ்சிய காலங்களில் வரகுக் கொல்லைகள் தரிசாகக் களைகள் முளைத்துக் கிடந்தன. அவற்றை ஒவ்வொரு முறையும் அழித்துப் புதுக்கி விவசாயத்திற்கு உகந்த நிலங்களாக மாற்ற வேண்டியதிருந்தது. வரகு விவசாயம் நடைபெற்றதை ஓர் அகப்பாடல் “பெரும் மழை பெய்து விடிந்த வைகறைப் பொழுதில் ஈரமான கொல்லையின் செம்மண் நிலத்தில் ஊனைக் கிழித்ததுபோல உழுது விதைத்த வரகு முளைத்தது. பரந்துபட்ட இரலைமான் கூட்டம் போலக் கொம்புடைய ஓலைக்குடையைச் சூடிய வினைஞர் களையெடுத்தனர். வரகு கதிர்விட்டு நிற்க, அக்கதிரை மேய்ந்த தோகைமயில், கொல்லை உழவர்கள் நிழலுக்காக அமர்ந்திருந்த குருந்தமரக்கிளையில் இருந்து கிளிகடியும் மகளிர் போல சத்தமிட்டது”

(அகநா.194) என்ற புனைவும். வரகின் கதிர் ‘ஈர்இலை நெடுந்தோட்டுக் கவைக் கதிர் வரகு’(அகநா.393) என்று வருணிக்கப்பட்டுள்ளது. இரண்டிரண்டாக வரகுத்தோகை இருப்பதுபோல, அதன் கதிரும் இரட்டையாக இருக்கும் என்பது வரகு பற்றிய காட்சிப்புனைவாகும்.

**பரதவர் இனம்**

நுளையர், வலைஞர் என்ற சொற்களால் சுட்டப்பட்ட பரதவர்கள் கடற்கரைப்பகுதிகளில் கடலில் தொழில் புரிந்து வாழ்ந்துள்ளனர். ‘திமில்’ என்றழைக்கப்பட்ட படகுகளில் இரவில் சென்று வலை வீசி மீன்பிடித்து விடியலில் கரை சேர்ந்துள்ளனர். பிடித்த மீன்களைக் கூறுகட்டி விற்றுள்ளனர். பரதவப் பெண்கள் கூடைகளில் சுமந்து சென்று தெருக்களில் விற்றுள்ளனர். பரதவர் மீன் பிடித்ததைப் புலவர்கள் ‘மீன் வேட்டத்து’’ என்று வேட்டைத் தொழிலாகவே குறிப்பிட்டுள்ளனர். மீனோடு ‘வளைபடு முத்தம்’ என்ற முத்துக்களையும் மூழ்கி எடுத்துள்ளனர். கிழிஞ்சல், இப்பிகளை எடுத்து விற்றுள்ளனர். கழிகளில் பாத்தி கட்டி உப்பு விளைவித்து விற்றுள்ளனர்.

*‘‘வயச்சுறா எறிந்த புண்தணிந் தெந்தையும்*
*நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்*
*உப்பை மாறி வெண்ணெல் தரீஇய*
*உப்புவிளை கழனிச் சென்றனள்……’’– (குறுந்.269:3-6)*

என்ற பாடல் மூலம் பரதவப் பெண்கள், தங்களது உப்புவிளை கழனிகளில் உப்பெடுத்துச் சென்று நெல்லுக்கு ஈடாக விற்றதை அறிய இயலும். ‘நுண்வலை’ வீசி மீன்பிடித்ததோடு ‘கோட்டுமீன் சுறா’ போன்ற பெரும் மீன்களை எறிஉளி எறிந்து குத்திப் பிடித்துள்ளனர். நீண்ட மூங்கில் கோல் நுனியில் கூர்மையான உளியைப் பொருத்தி, அதனைக் கொண்டு பெரும் மீன்கள் மீது குறிபார்த்து விசையாக எறிந்து குத்திப் பிடித்துள்ளனர் (குறுந்.304). சில வேளைகளில் மூங்கிலுக்குப் பதில் உளியைக் கயிற்றில் கட்டி எறிந்து பெரிய மீன்களைப் பிடித்துள்ளனர் (நற்.388). இவற்றுள் சுறா, கோட்டுமீன், இறா (சேஇறா-செம்மீன்), அயிலை எனப் பலவகை மீன்களும் அடங்கும்.

பரதவர் குடியிருப்புக்கள் ‘பாக்கம்’,‘சிறுகுடி’ என்றழைக்கப்பட்டன. தாழை வேலியும், கழி சூழ்ந்த தோட்டமும் சூழ்ந்திருக்க, முண்டகச் சருகுகளால் வேயப்பட்ட குறியிறைக் குடிசைகள் கொண்ட பாக்கங்களில் வாழ்ந்தார்கள் (நற்.207). பரதவர் ஊருக்கு வேலியாக, தில்லை மரங்கள் இருந்தன. (ஐங்.14:1).

கானலில் இருந்த பனை ஓலைகளைக் கொண்டு வீட்டைச் சுற்றி வேலிகட்டி மணற் காற்றுக்குப் பாதுகாப்புச் செய்தார்கள் (நற்.354). பரதவர் ஊர்த் தெருக்களில் மணல் மலிந்திருந்தது. மீன் புலால் நாற்றம் மிகுந்திருந்தது. புல் வேய்ந்த குடிசைகளைக் கொண்டு விளங்கியது(அகநா.200). சில ஊர்களைச் சுற்றிப் பனை ஓலையோடு முள் மிடைந்து வேலி எழுப்பியிருந்தார்கள். பனைமரத்தின் குருந்தும் நெடு மடலும் பிய்ந்து விழும் அளவிற்குக் கடும் கடற்காற்று வீசும்போது காற்றின் வேகத்தை இவ்வேலிகள் தடுக்கும் (குறுந்.372). பரதவர் ஊர்கள் பேரூராகவும் இருந்துள்ளன (நற்.132).

மருங்கூர்ப்பட்டினம், கொற்கை, தொண்டி, முசிறி, மரந்தை, கழுமலம் போன்ற பெரும் கடற்கரைத் துறைமுகப்பட்டினங்கள் இருந்தன. இப்பட்டினங்களில் கடல் வாணிபம் நடைபெற்றது. வினைப்பாடுகள் அமைந்த பல்வேறு நாட்டு நாவாய்கள் துறைகளில் வந்து சரக்குகளை ஏற்றி இறக்கின. பெரும் அங்காடிகள் இருந்தன (நற்.295). *‘பிறர் பிறர் அறிதல் யாவது தமர் தமர் அறியாச் சேரியும் உடைத்தே’* (நற்.331) என்று வணிகத்தின் பொருட்டாக வேற்று ஊர்களைச் சேர்ந்தவர்கள் பரதவர் ஊரில் உள்ளூர்க்காரர்களோடு கலந்து திரிந்ததால் பிறர் தமர் யார் என்று அறிய முடியாதிருந்தது.

பரதவர் குடியின் இனக்குழுப் பண்பு குறித்துப் பல பாடல்கள் பதிவுசெய்துள்ளன. உழைப்பு வாழ்க்கையும் கேளிக்கையும் பரதவர்கள் குழுவாக இயைந்து செய்யத்தக்கதாக இருந்தன.

*“கொடுந்தமில் பரதவர் வேட்டம் வாய்த்தென*
*இரும்புலாக் கமழும் சிறுகுடிப்பாக்கத்துக்*
*குறுங்கண் அவ்வலைப் பயம் பாராட்டி*
*கொழுங்கண் அயிலை பகுக்கும் துறை”– (அகநா.70:1-4)*

என்ற பாடலில் வேட்டையைப் பகுக்கும் இனக்குழுப் பண்பு வெளிப்பட்டுள்ளது. நெடுங்கடலில் பிடித்து வந்த மீன்களை, மணலில் கவித்து விட்டு, மீன்நெய்யைக் கிளிஞ்சலில் வார்த்துப் பொருந்திய சிறுதீ விளக்கொளியில் பரதவர்கள் படுத்துறங்கினார்கள் (நற்.175). இரவில் மீன் பிடிக்கத் திமிலில் சென்ற போது ‘மீன் நிணம் தொகுத்த ஊன் நெய்யில் விளக்கெரித்தார்கள் (நற்.215). இரவில் கடலில் உழந்து மீன் பிடித்துக்காலையில் கரையேறியதும் பரதவர்கள் ‘பனந் தீம் பிழி’‘தேம் கமழ் தேறல்’‘நார் அரி நறவு’‘நனைமுதிர் தேறல்’ முதலான மதுபானங்களைத் தங்கள் கிளையோடு மாந்தி மகிழ்ந்தார்கள். உப்பு

விளைவித்த பரதவர்கள் ‘உவர்விளை உப்பின் உழாஅ உழவர்’(நற்.331) என்று சிறப்பிக்கப்பட்டனர். பரதவர்கள் தாங்கள் உற்பத்தி செய்த உப்பை வண்டிகளில் ஏற்றி உள்நாட்டுப் பகுதிகளுக்குச் செல்லும் உமணர்களின் வண்டிகளின் வருகை நோக்கிக் காத்திருந்தார்கள்.

*“பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்*
*இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த*
*வெண்கல் உப்பு கொள்ளை சாற்றி” (அகநா.140:1-3)*

என்பதால் பரதவர்கள் கழிகளில், அளங்களில் உப்புக் காய்ச்சினார்கள் என்பது உறுதிப்படுகிறது.

பரதவ மகளிர், உணவைக் காயவைத்தல், பாதுகாத்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டனர். விற்றது போக மீந்த மீன்களையும் இறாலையும் பரதவப் பெண்கள் காயவைத்துப் பதப்படுத்தினார்கள். அப்போது மீன்களைக் கவர வந்த பறவைகளை விரட்டினார்கள். தெருக்களில் மீன் விற்றவளும் பரதவப் பெண் தெருக்களில் சென்றும் மீன் விற்றுள்ளாள்.

*“முடிவலை முகந்த முடங்கு இறாப் பரவைப்*
*படுபுள் ஓப்பலின் பகல் மாய்ந்தன்றே” (நற்.49:3-4)*

என்ற அடிகளால் பரதவப் பெண் இறால் காயவைத்துக் கவரவரும் பறவைகளை விரட்டியது விளங்கும். மீனைக் காய வைத்துப் பறவைகளை விரட்டிய பரதவப் பெண்கள், உப்புக் குவியல் மீது ஏறி நின்று மாலையில் மீன்பிடிக்கக் கடலுக்கு சென்ற திமில்களைப் பார்த்து இது,‘எந்தை திமில்’‘நுந்தை திமில்’ எனத் தங்கள் உறவினர் திமில்களை எண்ணினார்கள் (நற்.331). கடலில் சிவந்த இறா முகந்து கரை சேர்ந்த தந்தைக்குப் பரதவப்பெண் உப்பை விற்றுப் பெற்ற நெற்சோறும், அயிலைமீன் கலந்த புளிக்குழம்பும், மீன் துண்டும் எடுத்துச் சென்றாள் (அகநா.60). பரதவர் தங்கையர், விழாக் கொண்டாடும் தெருக்களில் மீனை விலை கூறி விற்றனர் (அகநா.320). பரதவர் திமில் ஏறிக் கடலுக்குச் சென்று மீன், இப்பி,வலம்புரிச் சங்கு, முத்து ஆகியவற்றைக் கொண்டு கவர்ந்து வந்தார்கள். அளங்களில் உப்பு எடுத்தார்கள்.

கடலில் தன் தந்தை பிடித்து வந்த மீன்களைக் காய வைத்துப் பறவையை விரட்டி, மணல்மேட்டுப் புன்னைமர நிழலில் இளைப்பாறி, சிவந்த நண்டு உறையும் குழியைத் தோண்டி, ஞாழல் மரக்கிளையில் தொடுத்த தென்னங்கயிற்றில் கட்டிய ஊஞ்சலில் ஆடி, கடற்கரை மணல் விளையாட்டு

அலுத்துக் போனால், தோழிகளோடு கடலில் குதித்து ஆடி, பைந்தழை உடுத்தி, பூங்கானலில் தங்கி ஒரு பரதவப்பெண் மகிழ்ந்துள்ளாள் (அகநா.20).

பரதவச் சிறுவர்களின் முரண்டுகளுக்குக் குறைவில்லை. ஒரு சிறுவன் தன் தந்தையிடம் தன்னையும் கடலுக்குள் மீன் பிடிக்கக் கூட்டிச் செல்ல வேண்டும் என்று அடம் பிடிக்க, அதனைப் பொருட்படுத்தாமல் விட்டுவிட்டுத் தந்தை செல்ல, ஏமாற்றத்தால் அழுது அழுது ஓய்ந்த சிறுவனுக்கு அவனுடைய தாய் தனது முலைப்பால் ஊட்டிச் சமாதானப்படுத்தினாள் (நற்.392). பரதவர்கள் திமில்களில் கடலில் சென்றது ஒருபுறம் இருக்க நாவாய், வங்கம் முதலிய பெரும் தோணிகளில் வணிகர்கள் கடலில் பயணம் செய்தது ஒருபுறம் நிகழ்ந்தது.

*“வேறுபல் நாட்டில் கால்தர வந்த*
*பல்உறு பண்ணியம் இழிதரு நிலவுமணல்”* *(நற்.31:8-9)*

என்ற அடிகளில் பன்னாட்டுக் கடல் வாணிபம் குறிக்கப்பட்டுள்ளது. உலகமே கிளர்ந்து வருவதைப் போல உருகெழு வங்கம் அலைகடலைப் பிளந்து இரவும் பகலும் தளராது, காற்று விசையால் விரைந்து சென்றது. அதனை ‘நீகான்’ என்ற மாலுமி இயக்கினான். கரையிலிருந்த துறையில் மாடத்தில் எரிந்த விளக்கு ஒளி அறிந்து மாலுமி வங்கத்தைச் செலுத்தினான் (அகநா.255). சங்க காலத்திலேயே பரதவர் குடியிலிருந்து சிற்றரசர்கள் உருவாகியுள்ளனர். ‘*பரதவர் கோமான் பல்வேல் மத்தி கழாஅர்முன்துறை*’ (அகநா.226) என்ற பாடல் அடி கழார் துறையை அரசாண்ட பரதவர்குடித் தலைவன் மத்தி என்பவனைக் குறிப்பிட்டுள்ளது. உள்நாட்டு நீர்நிலைகளில் கிடைக்கப்பெற்ற மீன்களை வலை வீசியும் தூண்டில் போட்டும் பிடித்த வலைஞர்களைப் பற்றிய குறிப்பும் இடம் பெற்றுள்ளது.

**உமணர் இனம்**

சங்க காலத்தில் இடம்விட்டு இடம் பெயர்ந்து ஊர் ஊராகத் திரிந்து உப்புவாணிபம் செய்த ஓர் இனமாக உமணர் இனம் காணப்படுகின்றது. இவ்வினத்தார் முழுநேரத் தொழில் உப்பு வியாபாரமே ஆகும். உப்பங்கழிகளில் பரதவர் உண்டாக்கிய உப்பை மொத்தமாகத் தங்கள் மாட்டு வண்டிகளில் ஏற்றி ஊர்களில் நெல்லுக்கு மாற்றாக விற்று வாழ்ந்தது அவர்களின் மொத்த வாழ்க்கை. உமணர்கள் கூட்டமாகவே இயங்கினார்கள். அவர்கள் ஓரிடத்தில் தங்கி உப்பு போனபிறகு, அந்த இடம் பாழ்பட்ட ஊர்போல காணப்பட்டுள்ளது

(குறுந்.124). உப்பினை எடுத்துச் செல்ல அவர்களிடம் வண்டி மாடுகள் இருந்தன. அந்த மாட்டு வண்டிகள் ஒன்றன் பின் ஒன்றாக ஒரே வரிசையில் சென்றன. அதனைப் புலவர்கள் 'ஒழுகை' என்றார்கள். நாகபட்டினம் மாவட்டத்திற்கு உட்பட்ட தரங்கம்பாடி வட்டத்தில் பொறையாறு ஊருக்கு அருகில் உள்ள ஊர்ப் பெயர் 'ஒழுகை மங்கலம்' என்பதாகும்.இங்கு உள்ள நெய்தல் நிலத்து உப்பைப் பெறுதல் வேண்டி உமணர்கள் தங்கள் ஒழுகையாகிய வண்டியை நிறுத்தி வைப்பதற்குரிய இடமாக விளங்கியதால் இவ்வூர் இப்பெயர் பெற்றுள்ளது. இப்பகுதிமக்கள் சங்க காலம் என்று குறிப்பிடாமல் தங்கள் முன்னோர்கள் வாணிபத்தின் பொருட்டு இங்கு புழங்கினர் என்று கூறுகின்றனர். இன்றைய சூழலிலும் ஒழுகை மங்கலம் என்று ஊரின் பெயர் வழங்கிவருவது குறிப்பிடத்தக்கது. ஓரிடத்தில் உமணர்கள் நிலைத்து வாழாததால் அவர்களுடைய வாழ்க்கையை 'நிலையா வாழ்க்கை' என்றார்கள் (நற்.138).

*"தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து*
*பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி*
*நெடுநெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி*
*அவண் உறை முனிந்த ஒக்கலொடு புலம்*
*பெயர்ந்து உமணர்..."– (நற்.183:1-5)*

என உமணர் செலவு பாடப்பட்டுள்ளது. உமணர் வண்டிகளின் ஒழுகை பயணித்தது ஓர் ஊரே எழுந்து போனது போல இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (அகநா.17).

உமணரின் வணிகம் 'உமண் சாத்து' எனப்பட்டது. காட்டு வழிப் பாதைகளில் உமண் சாத்து கடந்து சென்றபோது ஆங்காங்கே பெருங்கூட்டமாகத் தங்கியது. கற்களை அடுப்பாக அமைத்து சமைத்து உண்டார்கள் (அகநா.119, 159). ஓர் ஊரில் உமணர் கூட்டம் தங்கிய போது, உமணர் பெண்கள் தங்கள் கைகளில் வளையல்கள் தெளிர்ப்ப வீசி, தெருக்களில் நடந்து 'நெல்லின் நேரே வெண்கல் உப்பு என விலை கூறி விற்றார்கள் (அகநா.140). தொடலை மாலையணிந்த உமணப் பெண்,'நெல்லும் உப்பும் நேரே ஊரீர் கொள்ளீரோ' எனச் சேரிதோறும் கூவி விற்றாள் (அகநா.390).

காட்டு வழிகளில் கூட்டமாகச் சென்ற உமணர்அங்கே புலி கொன்று தின்ற யானையின் மீதி இறைச்சியைச் சமைத்து உண்டார்கள். சுனைநீரால்

உலையேற்றிச் சோறு சமைத்து அனைவரும் உண்டார்கள் (அகநா.169). உப்பினைப் புலவர்கள் ‘கடல் விளை அமிழ்து’ (அகநா.169) ‘வெண்கல் அமிழ்தம்’ (அகநா.207) என்று அழைத்தனர். உப்பினை வண்டிகளில் ஏற்றி மேற்குத்திசை நோக்கிப் புறப்படும் முன் புள் சகுனம் பார்த்தார்கள். வழியில் பாதுகாப்பிற்காகப் படை அமைத்தார்கள். மாட்டு வண்டிகள் இல்லாத உமணர்கள் கழுதைகள் மீது பொதிகளாக உப்பை ஏற்றிச் சென்றார்கள். (அகநா.207). காட்டு வழியில் சமைப்பதற்கு நெருப்புப் பற்றவைக்க, யானைகள் மென்று துப்பிய யாமரக் கோதினைப் பயன்படுத்தினார்கள். (அகநா.257). காட்டு வழியில் குடிக்கத் தண்ணீர் தேவைப்பட்டபோது, முரம்பு நிலத்தை இடித்துகூவல் தோண்டி அதில் ஊறிய நீரைக் உமணர் கூட்டம் குடித்தது (அகநா.295). சமயத்தில் உமணரின் வண்டிச் சக்கர உருளி, பாதை ஓரமாக நடப்பட்டிருந்த நடுகல் மீது உராய்ந்து சென்றதால் அக்கல்லில் கூர் உளி கொண்டு பொறித்த எழுத்துக்கள் அழிந்தன (அகநா.343). உமணர் தம் வண்டி மாடுகளின் கழுத்தில் மணி கட்டியிருந்ததால் உமணர் ஒழுகை சென்றபோது மணி அடித்துக் கொண்டேயிருந்தது (அகநா.303).

**பாணர் இனம்**

சங்க காலத்தில் பாணர் இனம் என்பது நிலையாக ஒரு திணையைச் சாராது தொழில் முறையால் ஐந்திணைகளையும் சார்ந்து வாழும் இனமாக இருந்துள்ளது. இப்பாணர்கள் என்பவர்கள் இசைக்கலைத் தொழில் முறையால் பல இனக்கூறுகளாகவும் இணைந்து வாழ்ந்தனர். இவர்களில் இசைக்கருவிகளை இசைக்கும் தொழில் முறையால் இவர்களுக்குள் பல பிரிவினர் உண்டு. “சங்க இலக்கியத்தில் பாண் மரபினரைக் குறிப்பதற்குப் பல்வேறு பெயர்கள் இருந்துள்ளன. அவை வருமாறு: அகவர், அகவன் மகள், அகவலன், அகவுநர், அம்பணவர், ஆடன் மகள், ஆடற்கூத்தியர், ஆடுநர், ஆடுமகள், இயவர், இயவன், இன்னிசைக்காரர், ஓவர், கடம்பன், கண்ணுளர், கண்ணுளார், கலப்பையர், கிணைஞன், கிணைமகள், கிணைமகன், கிணைவர், கிணைவள், குயிலுவர், கூத்தர், கூத்தன், கோடியர் சாந்திக் கூத்தர், செயிரியர், சென்னி, துடியன், பண்டர், பண்ணவன், பரிசிலர், பறையன், பாடல் மகடூஉ, பாடினி, பாட்டியர், பாடுமகள், பாணன், பாணிச்சி, பாணிச்சியார், பாண்மகள், பொருநர், மதங்கர், மதங்கி, மாகதர், முழவர், முழவன், யாழோர், வந்திகர், வயிரியர், வாயிலோர்,

விறலி, வேதாளிகர், சூதர் - மேற்கூறிய இப்பெயர்கள் மூலம் பாண் சமூகத்தின் பல்வேறு பண்புகளைக் காணலாம். பெரும்பாலும் தொழில் வழியும், இசைக்கும் கருவி வழியும் பெயர்கள் உருவாகியுள்ளன. பாண்சமூக அமைப்பில் 'உள்படிநிலையை (internal sub-divisions ) நோக்கியவையாக இவை காணப்படுகின்றன. உள் கட்டமைப்பு மிகுந்து பரந்து விரிந்த நிலையில் சங்ககாலப் பாண் சமூகம் இருந்துள்ளதை இதன் வழி அறியமுடிகிறது.'' (5) இப்பாண் இனக்குழுவினர் விழாக்கள், சடங்குகள், வழிபாடுகள் முதலான நிகழ்வுகளின் பொழுதும் அறுவடையின் பொழுதும் அரசவைகளிலும் இசைத்து, பாடி, ஆடியுள்ளனர். பிறர் ஈந்த உணவையும் பொருளையும் பெற்று வாழ்ந்துள்ளனர். இவர்கள் தலைமக்களிடையே தூது சென்றதாகவும் பாடல்கள் பதிவு செய்துள்ளன. மனைவி ஒருத்தி தன் கணவனுக்காகப் பரத்தையரிடமிருந்து தூதுவனாக வந்த பாணனை 'புலையன்' என்று வசை பாடினள். இதனை,

*''…………பையென*
*வலையர்போலச் சோர்பதன் ஒற்றிப்*
*புலையர் போல புன்கண் நோக்கித்*
*தொழலும்தொழுதான் தொடலும் தொட்டான்'' (கலித்.55:16-19 )*

*''எம்இல் பொலிக எனப்புகுந்த நின் புலையனைக்*
*கண்டயாம்'' (கலித்.68:19-20)*

என்னும் பாடலடிகள் சுட்டும்.

**பண்பாட்டுப் பரிணாம மாற்றம்**

இனக்குழுவினர்களுக்கு இடையே வேறுபாட்டையும் ஒற்றுமையையும் ஏற்படுத்துவது பண்பாடு ஆகும். ''பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்கம், நெறிகள், சட்டம், வழக்கம் முதலானவையும் தன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும் பழக்கவழக்கங்களும் அடங்கிய முழுமைத் தொகுதியாகும்.''6என்பர்எட்வர் பர்னட்.பண்பாடு என்பது காலச் சுழற்சியில் மாற்றம் பெறக் கூடியது. தமிழினம் தொன்மையானது தொன்மைக் காலம் முதலே தமிழர் பல நாடுகளோடு வாணிகத்தொடர்பு கொண்டுள்ளனர். பிற நாடுகளில் தமிழர் குடியேறினர். தமிழ் நாட்டில் பிற இனத்தவர் குடியேறினர். இக்குடியேற்றங்களாலும் வணிகத் தொடர்பினாலும் பண்பாடுகள் கலந்தன. தமிழர் பிறர்க்குக் கொடுத்தது போலவே பிறரிடமிருந்து

பெற்றுக் கொண்டனவும் பலவாகும். மலேயா, பர்மா,ஈழம் பிற கீழைத்தீவுகள் ஆகியவற்றில் தமிழரின் பண்பாட்டுச் சாயல் காணப்படுகிறது. சமயம், சிற்பம், ஓவியம் முதலிய பல துறைகளிலும் இந்தப் பண்பாடு ஊடுருவி நிற்கின்றது. இப்பண்பாட்டுப் பரிவர்த்தனையை அளவிட்டறிதலும் வேறுபடுத்திக் காண்பதும் அரிய செயலாகும். வெளிநாடுகளோடு உறவாடிய தமிழர் உள்நாட்டில் வடபுலத்தோடும் பன்னெடுங் காலமாக உறவாடியுள்ளனர். இவ்வுறவின் விளைவாகப் பண்பாட்டுக் கூறுகளுக்குள் மாற்றம் ஏற்பட்டது.

ஒரு பண்பாடு அயற்பண்பாட்டின் அனைத்துக் கூறுகளையும் அப்படியே ஏற்றுக் கொள்வது பெரும்பாலும் நிகழ்வதில்லை. சில கூறுகள் மட்டும் தேர்ந்தெடுத்து ஏற்றுக் கொள்ளப்படுகின்ற சில வேளையில் தம் பண்பாட்டிற்கேற்ப அதனை மாற்றிக் கொள்கின்றது. பண்பாட்டுக் கலப்பு ஏற்படும் பொழுது அப்பண்பாட்டுக் கூறுகள் ஏற்றுக் கொள்ளப்படும் முறையை வைத்து சமகலப்புப் பண்பாட்டுப்பேறு, ஓரினமாதல், எதிர்பண்பாட்டுப் பேறு ஆகியவை நிகழ்கின்றன. இதனை,

பண்பாாட்டுப் பேறின் உட்கூறுகள்



சமகலப்புப் பண்பாட்டுப்பேறு ஓரினமாதல் எதிர்பண்பாட்டுப்பேறு என்னும் வகைப்பாடு விளக்கும்.

**சமகலப்புப் பண்பாட்டுப்பேறு**

இரு பண்பாடுகள் நேருக்கு நேர் சந்தித்துக் கொள்ளும் போது இரண்டும் அதனளவில் தனித்து இயங்க முடிவதில்லை. ஒன்று மற்றதன் சிறப்புக் கூறுகளை ஏற்றுக் கொள்ளும் அல்லது இரண்டு பண்பாடுகளும் ஒன்று மற்றதன் பண்புகளை ஏற்றுக் கொள்ளும். இவ்வாறு இரண்டு பண்பாடுகளுமே சிறப்புப் பண்புகளைப் பரிமாறிக் கொண்டால் அது சமகலப்புப் பண்பாட்டுப் பேறு (Transculturation) எனப்படும்.(7)

**ஓரினமாதல்**

அடுத்தடுத்த அண்டைய பகுதிகளில் சந்திக்கும் இரு பண்பாடுகளுள் ஒன்று ஆதிக்கம் மிக்கதாகவும் (dominant) மற்றொன்று ஆதிக்கம்

குறைந்ததாகவும் இருக்குமானால் ஆதிக்கப் பண்பாட்டின் கூறுகளை ஆதிக்கம் குறைந்த பண்பாடு பெற்றுக் கொண்டு, ஆதிக்கப் பண்பாட்டின் கூறுகளை முழுமையாக ஏற்றுக் கொண்டு, அதன் தனித்தன்மையை இழந்தால் அது ஓரினமாதல் (Assimilation) எனப்படும்.(8)

**எதிர் பண்பாட்டுப்பேறு**

இரு பண்பாடுகள் நேருக்கு நேர் தொடர்பு பெறும் போது ஒன்று மற்றதன் கூறுகளைத் தொடக்கத்தில் ஏற்கத் தொடங்கிய பின் தன் தனித்தன்மையைக் கட்டிக்காக்க வேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டு முழுவதும் ஏற்காமல் இருப்பது எதிர் பண்பாட்டுப் பேறு (contra-acculturation) எனப்படும்.(9)

சங்க கால இனக்குழுவுக்குள் பொருளாதார நடவடிக்கையில் ஏற்பட்ட ஒற்றுமை, பண்பாட்டுப்பேறு, பண்பாட்டுப்பரவல் சிறப்பிற்குரியது.தொழிலில் ஈடுபடும் போது குறிஞ்சி, முல்லை, நெய்தல் நில மக்கள் குழுவாகச் சேர்ந்து ஈடுபட்டதைச் சங்கப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. குறிஞ்சியில் வேட்டையாடுதல் தொழிலை நோக்க அங்கு குழு அமைப்பு காணப்படுகிறது. முல்லைநில ஆயர்கள் மேய்ச்சல் தொழிலில் தம் ஆநிரைகளைப் பரந்துப்பட்ட மேய்ச்சல் நிலத்தில் மேயவிடும் பொழுது ஊன் உண்ணி விலங்குகளிடமிருந்து ஆநிரைகளைக் காப்பதில் குழு அமைப்பு உள்ளது. நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தலில் குழுவாகச் செயல்பட்டுள்ளனர். கரைவலை மீன்பிடித்தலிலும், ஆழ்கடல் சுறா வேட்டையிலும் குழுவாகச் செயல்பட்டுள்ளனர். மருதநில மக்கள் விவசாயத் தொழிலில் குழுவாக இணைந்து செயல்பட்டுள்ளனர். குறிஞ்சியும் முல்லையும் வேனிற்காலத்தில் திரிந்து பாலை வடிவமாகக் காட்சியளிக்கும் காலத்தில் ஆறலை கள்வர்களும் தம் தொழிலைக் குழுவாக இணைந்து நடத்தியுள்ளனர்.

ஆக குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை ஆகிய நிலப்பகுதியில் வாழ்ந்த மக்கள் தம் நிலம் சார்ந்த தொழிலில் ஈடுபடும் போது குழுவாக இணைந்து செயல்படுதல் என்னும் முறை நில ஒற்றுமைப் பொருளாதார நடவடிக்கைப் பண்பாட்டை எடுத்துரைக்கிறது.

**பொருளாதாரப் பண்பாட்டுப்பேறு**

நெய்தல் நிலத்தில் விளைவித்த உப்புக்குவியலை, வணிக உமணர் மலைநாட்டு ஊர்களுக்குக் கொண்டு சென்று விலை கூறி விற்கும் தொழிலைச் செய்துள்ளனர். இதனை,

> *''உவர்விளை உப்பின் குன்று போல் குப்பை*
> *மலை உயர்த்துப் பகரும், நிலையா வாழ்க்கை*
> *கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழிந்தே*
> *பண் அழிபழம் பார் வெண்குருகு ஈனும்''– (நற்.138:1-4)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். கடற்பரப்பில் விளைந்த 'உப்பு' என்னும் பொருள் மலைநாட்டு மக்களால் வாங்கப் பெற்றுள்ளது. நெய்தல் நிலத்தில் விளைந்த பொருளைக் குறிஞ்சி நிலமக்கள் வாங்கியது பண்பாட்டுக் கலப்பினைக் குறிக்கிறது. குறிஞ்சி நில மக்களின் உணவிலும் வாழ்விலும் உப்பு சேர்க்கப்பட்டுள்ளது. இது பொருள்சார் பண்பாட்டுப்பேறாகும்.

அந்தந்த நிலங்களுக்கு ஏற்றவாறு பண்டைக்கால மக்கள் தொழில்களைச் செய்துள்ளனர். அந்நிலங்களிலேயே ஆண்கள் ஒரு தொழிலும் பெண்கள் ஒரு தொழிலுமாகஈடுபட்டுள்ளனர். செய்துள்ளனர். நெய்தல் நிலத்தில் நெடுங்கடலுக்குச் சென்று ஆண்கள் மீன்பிடிக்கச் செல்வதும் பெண்கள் உப்பை விற்று நெல் விலை பெற்றதையும்,

> *''வயச்சுறா எறிந்த புண்தணிந்து எந்தையும்*
> *நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்*
> *உப்பைமாறி வெண்ணெற் றரீஇய*
> *உப்புவிளை கழனிச் சென்றன ளதனாற்''– (குறுந்.269:3-6)*

என்ற பாடலடிகளில் உப்பை விற்று அதன் விலையாக வெண்ணெல்லை வாங்கி வந்ததை உணர்த்துகின்றன.

> ''*நெல்லும் உப்பும் நேரே ஊரீர்*
> *கொள்ளீரோ எனசேரிதோறும் நுவலும்''– (அகநா.390:8-9)*
> *''நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்*
> *சேரி விலைமாறு கூறலின்...............''– (அகநா.140:7-8)*

என்னும் அடிகளில் வெண்ணிறக் கல் உப்பு நெல்லினுக்கு ஒத்த அளவினதே எனச் சேரியின்கண் பண்டமாற்றாக விலைக் கூறிக் கொண்டு போவாள் என்னும் செய்திபெறப்படுகிறது.

> *''நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு*
> *உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு*
> *அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து*

*கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்''– (அகநா.60:3-6)*

என்ற அடிகள் உப்பை விற்று நெல்லை வாங்கி அமைத்து வெண்சோற்றுத்திரளுடன் அயிலை மீனால் ஆகிய புளிக் குழம்பை இணைத்து உண்ட செய்தியைப் பகர்கின்றது. புதிய மீனை விற்று அதற்கு மாறாக வாங்கி வந்த வெள்ளிய நெல்லை இடித்து மாவின்கண் தயிரிட்டுப் பிசைந்து உணவு சமைத்ததை,

*''பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்*
*தயிர்மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே''– (அகநா.340:14-15)*

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. நெய்தல் நில மக்கள் குடமலையில் விளைந்த சந்தனத்தைப் பயன்படுத்தினர் என்பதிலிருந்து அவர்கள் சந்தனத்தைப் பண்டமாற்றாகப்பெற்றதை உணர இயலும். இதனை,

*''குடபுல உப்பின் கூட்டுபு நிகழ்த்திய*
*உண்டுஇமிர் நறுஞ்சாந்து அணிகுவம்''- (அகநா.340:17-18)*

என்ற பாடலடிகள் சுட்டும். இதன் வழி நெய்தல் நில உப்பிற்குப் பிறநிலமக்கள் நேர்ப்பொருளாகத் தம் நிலத்திற்குரிய விளைபொருட்களைக் கொடுத்துப் பண்டமாற்று செய்தமையை அறியமுடிகிறது. இம்முறை பொருளாதாரப் பண்பாட்டில் சமகலப்புப் பண்பாட்டுப்பேறு நடைபெற்றதைக் காட்டுகிறது.

பொருளாதார சமகலப்புப் பண்பாட்டுப்பேறுக்கு நெய்தல் நிலம் மையமாக விளங்கியதை பின்வரும் வரைபடம் உணர்த்தும்.




இதன் வழி ஒவ்வொரு நிலமும் தத்தம் விளைபொருளைப் பண்டமாற்று செய்ய வணிகம் செய்யும் இடமாக நெய்தல் நிலம் விளங்கியது என்பதை அறிய முடிகிறது. நெய்தல் நிலம் உணவுவகைத் தாவரங்களை விவசாயம்

செய்ய ஏற்ற நிலையில்லாத உவர் மண்ணாக இருப்பினும் பிற நில விளைபொருள் விலைபோகும் களம் நெய்தலாக விளங்குகிறது. பிற நாட்டுடன் வணிகத் தொடர்பு கொள்ள ஏதுவான இடமாக நெய்தல் நிலம் செயல்பட்டது. அதுமட்டுமின்றி நாகரிகப் பண்பாட்டு மாற்றம் ஏற்படுத்தும் நிலமாகவும் மிளிர்கிறது.

**திருமணமுறையில் சமகலப்புப் பண்பாட்டுப் பேறு**

சங்க இலக்கியத்தில் இரண்டு பாடல்கள் திருமணச் சடங்குகள் குறித்து விரிவாக எடுத்துரைக்கின்றன. திருமணம் ஒரு நல்ல நாளில் நடைபெறும். தீக்கோள் இடம் பெயரவும் திங்களும் உரோகினியும் கூடிய நன்னாளில் திருமணம் நடைபெற்றது. வைகறைப் பொழுதில் திருமணம் நிகழ்ந்தது. திருமணப் பந்தலிட்டு அதில் புதுமணல் பரப்பினர். மாலைகள் தொங்கவிட்டு வீட்டை அழகுபடுத்தினர் அழகிய விளக்குகளை ஏற்றினர். வயது முதிர்ந்த மங்கல மகளிர் நீரைக் குடங்களில் முகந்து கொண்டு வந்து கொடுக்க, குழந்தைகளைப் பெற்றெடுத்த மங்கல மகளிர் நால்வர் கூடி அந்நீரில் பூக்களையும் நெல்லையும் இட்டு அந்நீரினால் மணப்பெண்ணை நீராட்டினர். அப்போது அப்பெண்டிர் ‘இவள் கற்பு நெறியினின்றும் வழுவாமல் தன்னைக் கொண்ட கணவனை விரும்பிப் பேணும் விருப்பமுள்ள துணைவியாவாளாக என மணமகளை வாழ்த்தினர். பின்னர் பெற்றோர் ‘பெரிய ஓர் இல்லத்துக் கிழத்தியாக ஆவாய்’ என்று வாழ்த்தி அவளை மணமகனுக்குக் கொடுத்தனர். உளுந்தம் பருப்புடன் கலந்த அரிசிப் பொங்கல் மணவிழாவுக்கு வந்தவர்கட்கு இடையறாது வழங்கப்பெற்றது. இறைச்சியும் நெய்யும் கூட்டியாக்கிய வெண்சோறும் வழங்குவதுண்டு.

இச்சடங்குகளில் மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டியதாக எவ்விதக் குறிப்பும் காணப்படவில்லை. புரோகிதர் இல்லை. மந்திரம் ஓதுதல் இல்லை. தீ வலம்வருதல் இல்லை. அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல் போன்றவை இல்லை. திருமணத்தின் போது இவை நடைபெற்றதற்கான எவ்விதக் குறிப்பும் சங்க அகப்பாடல்களில் காணப்படவில்லை. திருமணவிழாவில் வந்தவர்களுக்கு வழங்கப்பெறும் உணவில் இன்று பெரியதொரு மாற்றம் ஏற்கப்பட்டுள்ளது.

ஆரியப் பண்பாடும் பழக்க வழக்கங்களும் பெருகி வந்த காலத்து எழுந்த நூலான கலித்தொகையில் (கலித்.119,130) அந்தணர் மாலை நேரத்தில் தீ

வளர்த்ததாகச் செய்தி கிடைக்கப்பெறுகிறதே தவிர பிற இலக்கியங்களில் மணமக்கள் தீயை வலம் வந்து மணம் முடித்தனர் என்ற செய்தி இடம் பெறவில்லை.

சங்க காலத்துத் திருமண விழாவைப் பற்றிக் கூறும் அகப்பாட்டுக்கள் இரண்டிலும் அந்தணர் ஒருவன் இடையிலிருந்து மணவினைகள் புரிந்ததாகச் செய்திகள் இல்லை. கலித்தொகை காலத்தில் அந்தணர் தீ ஓம்பி, திருமணம் முடித்தனர். “திருமணத்தின் போது மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டும் வழக்கம் கி.பி.10 - ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்பு வரை இல்லை. இவ்வழக்கத்தைத் தெரிவிக்கும் முதல் கல்வெட்டு கி.பி.958-ஆம் ஆண்டுக்குரியதாகும்.”[(10)]

தற்காலத்தில் செய்தித்தாள், தொலைக்காட்சி இணையம் என இவற்றில் இடம் பெறும் மணமாலைப் பகுதி துணையுடன் பெண்பார்க்கும் படலம் இன்று மக்களிடையே பரவலாகக் காணப்படுகிறது. எந்த மதத் திருமணமாக இருந்தாலும் பெரும்பாலும் திருமண மண்டபங்களைக் கொண்டு தான் நடத்தப்படுகிறது. இத்திருமணங்களில் மந்திரம்ஓதுதல், தீ வலம் வருதல், அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல் என எல்லா விதச் சடங்குகளுடன் தாலி கட்டும் வழக்கமும் கி.பி.10- ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு இன்று வரை தொடர்ந்து மக்களால் பின்பற்றப்பட்டு வருவதோடு மட்டுமல்லாமல் திருமணத்தைப் பதிவும் செய்கின்றனர். சங்க காலத்தில் இல்லத்தில் நடைபெற்ற திருமணம் இன்று திருமண மண்டபங்களில் நடைபெறுகின்றன. முதுமங்கல மகளிர் கூடி அரசங்கால் நடுதல் சடங்கினைச் செய்கின்றனர். சங்க காலத்தில் மணமக்களை நீராட்டிய மகளிர் இன்று அவ்வரசங்கொம்பிற்கு நீராட்டி பூக்களைத்தூவி மஞ்சள் குங்குமம் பொட்டிட்டு வெள்ளை நிறத் துண்டினையும், சிகப்பு நிறத் துண்டினையும் கட்டுகின்றனர். நெல்லைப் பயன்படுத்திய இடத்தில் நெற்பொறியைப் பயன்படுத்துகின்றனர். அரசங்கால்களைச்சுற்றி நவதானியங்களைத் (நெல், உளுந்து, பச்சைப்பயிறு, மொச்சைப்பயிறு, கொள்ளு, கொண்டைக்கடலை, கோதுமை, பெரும்பயிறு, எள்) தூவுகின்றனர். சடங்குகள் மனித வாழ்க்கையில் நம்பிக்கை அடிப்படையில் நடைபெறுகிறது. அரசங்காலுக்கு மூங்கில், ஒதிய மரம் ஆகிய இரண்டு மரங்களின் கொம்புகளைப் பயன்படுத்துகின்றனர். மூங்கில் தம்மைச் சுற்றி வேர்ப் பகுதி மூலமும் தம்

விதைகள் மூலமும் தம் இனத்தைப் பெருக்கி புதர் போன்று நீண்டு வளரும் இயல்புடையது. அது போல் சுற்றத்தாருடன் கூடி வாழ்தல் நோக்குடன் மூங்கில் அரசங்காலாக நடப்படுகிறது என்ற நம்பிக்கை இன்றைய தமிழக மக்களிடம் காணப்படுகின்றது. ஆரியர்களின் சடங்கு முறைகளையும் பிற்காலத்தில் நிகழ்ந்த ஏனைய படையெடுப்புகளாலும் தமிழர் தம் திருமணத்தில் சில மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டு பண்பாட்டுப்பரிவர்த்தனைச் செய்து கொண்டு சமகலப்பு பண்பாட்டுப் பேறாகத் திகழ்கின்றது.

**பொருளாதாரப் பண்பாட்டுப் பரவல்**

நெய்தல் நிலம்வழி எகிப்து கிரேக்கம் சீனம் மலேசியா சாவகம் ரோம் முதலிய நாடுகளுடன் கப்பல் வாணிகம் நடந்தது. உரோமபுரியிலிருந்து யவணர்கள் கப்பலில் பொன்னைக் கொண்டு வந்து இங்கிருந்து மிளகை ஏற்றிக் கொண்டு சென்றனர். இதனை,

*''யவனர்தந்த வினைமாண் நண் கலம்*
*பொன்னொடு வந்து கறியொடு பெயரும்*
*வளம் கெழு முசிறி.............''– (அகநா:149:9-11)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் முசிறித் துறைமுகத்தில் மிளகு ஏற்றுமதி சிறப்பாக நடைபெற்றது விளக்கப்பட்டுள்ளது.

**விளையாட்டில் பண்பாட்டுப் பரவல்**

மக்கள் தத்தம் நிலம் சார்ந்த விளையாட்டுகளில் ஈடுபட்டனர். இதில் எல்லா நிலத்திலும் ஆடப்படும் விளையாட்டாக ஊஞ்சல் பதிவாகியுள்ளது.

*''கருங்கால் வேங்கை ஊசல் தூங்கி''– (நற்.368:2)*

என்ற பாடலடியில் குறிஞ்சி நில மக்கள் வேங்கை மரத்தில் ஊஞ்சல் கட்டி ஆடிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. எந்தப் பொருளினால் ஆன பலகை, கயிறு கொண்டு ஊஞ்சல் அமைத்தனர் என்ற குறிப்பு கிடைக்கப்பெறவில்லை. மருதநிலத்தில் வாழ்ந்த மக்கள் ஊஞ்சல் ஆடுவதற்குத் தம் நிலம் சார்ந்த கருப்பொருளைப் பயன்படுத்தியுள்ளனர். பனை மடலின் கருக்கை நீக்கி, பலகை இணைப்புப் போல் பரப்பி பெருங்கயிற்றால் பிணைத்து ஊஞ்சல் கட்டியதை,

*''பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையற்*
*பூங்கணாய மூக்க வூங்காள்*
*ஊசல் உறு தொழிற் பூசற் கூட்டா''– (நற்.90:6-10)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. நெய்தல் நில மக்கள் சுறாமீனின் வெண் மருப்பைப் பலகையாகக் கொண்டுள்ளனர். நெய்தல் பூவின் புறவிதழ் நீக்கி

மென் தண்டின் நாரினால் தொகுக்கப்பட்ட சுறாமீனின் மருப்பைப் பிணைத்து, தாழையின் நாரினை ஊசற் கயிறாகப் பயன்படுத்தியுள்ளனர். இவை அனைத்தும் நெய்தற் கருப்பொருள்கள் ஆகும். இதனை,

*"இனமீன் இகல்மாற வென்ற சினமீன்*
*எறிசுறா வான் மருப்புக் கோத்து நெறிசெய்த*
*நெய்தல் நெடுநார்ப் பிணிந்து பாத்து கை உளர்வின்*
*யாழ் இசை கொண்ட இனவண்டு இமிர்ந்த ஆர்ப்ப*
*தாழாது உறைக்கும் தடமலர்த் தண்தாழை*
*வீழ் ஊசல் தூங்கப் பெறின்"– (கலித்.131:6-11)*

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

தலைவி தம் ஆயத்தாருடன் இணைந்து ஊஞ்சல் ஆடியதாகச் செய்தி பெறப்படுகிறது. ஊஞ்சல் ஆடுதல் என்பது எல்லா நிலத்திலும் நடைபெற்றுள்ளது. ஆனால் ஊசல் ஆடப் பயன்படுத்தும் மூலப்பொருட்கள் நிலத்திற்கேற்ற கருப்பொருள்களால் அமைந்துள்ளன. ஆக ஒரு நிலத்தில் தோன்றிய ஊசல் விளையாட்டும் பண்பாட்டு மரபும் பண்பாட்டு பரவலாகப் பிற நிலங்களிலும் பரவியுள்ளது தெளிவாகும்.

**திணைப் பண்பாட்டில் ஓரினமாதல்**

நெய்தல் நிலமும் மருதநிலமும் அருகருகே அமையும் போது இரண்டு பண்பாடுகளில் பரிமாற்றம் நிகழ்வது இயல்பு. இதற்கு,

*"குடுமி கொக்கின் பைங்காற் பேடை*
*இருஞ்சேற்று அள்ளல் நாட்புலம் போகிய*
*கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்*
*நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென"– (அகநா.290:1-4)*

என்ற பாடலடிகள் சான்றாகும். கொழுமீனாகிய உணவை உண்ட புன்மையான தலையினையுடைய சிறுவர்கள், கருமையான சேற்றுக் குழம்பினையுடைய வயலில் அதிகாலையில் வேட்டைக்குச் சென்றனர். அவர்கள் விரிந்த நுண்ணிய கயிற்றினாலாகிய வலையில் தலையில் கொண்டையினையுடைய சேவல், கொக்கு அகப்பட்டது. மருத நிலத்தில் கண்ணி வலை பயன்படுத்தப்பட்டுள்ளது. வலை என்பது கருவிக்குரிய பொதுச்சொல். மீன் பிடித்தலுக்குப் பரதவர் கடலில் வலையைப் பயன்படுத்துவர். 'வலை' என்னும் தொழில்சார்ந்த பண்பாட்டுக் கருவியானது அதன் பயன்கருதி வயலில் புள்ளினங்களை பிடிப்பதற்காகச் சிறார்கள் மருதநிலவயல்களில் விரித்ததாகச் செய்தி பதிவு செய்யப்பட்டுள்ளது. இங்கு புள்ளினங்களை வேட்டையாட வேறு வகையினைக் கையாண்டு

இருக்கலாம். ஆனால் வலை என்பதனைப் பயன்படுத்துதல் என்பது நெய்தல் நில தாக்கமாகும். மேலோட்டமாக காண்பதற்குச் சிறார்கள் வயல்களில் உள்ள பறவையினங்களைப் பிடிப்பதற்கு வலையைப் பயன்படுத்தினர் என்பது செய்தித் தரும். ஆனால் கூர்ந்து நோக்கும் பொழுது இது நெய்தல் நில பண்பாட்டுக்கூறினை மருதநிலம் ஏற்று தன் நிலப்பண்பாடாக வெளிக்காட்டுகிறது. இதனை ஓரினதாதல் என்னும் நிகழ்வில் வகைப்படுத்த இயலும்.

மருத நிலத்தில் குளங்கள் போன்ற நீர்நிலைகளில் வாழும் மீன்களைத் தூண்டிலிட்டுப் பிடிப்பது வழக்கம். இதனை,

*''வானம் வேண்டா வறன்இல் வாழ்க்கை*
*நோன்ஞான் வினைஞர் கோள் அறிந்து ஈர்க்கும்*
*மீன்முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை''– (அகநா.186:1-3)*

என்ற பாடலடிகள் எடுத்துரைக்கும். வலிமையான தூண்டிற் கயிற்றினையுடைய மீன்பிடிப்போர், மழை பெய்வதை விரும்பாத, வறுமை வாழ்வினை உடையவர்கள். மீன், இரைகோத்த முள்ளினைப் பற்றியது அறிந்து தூண்டிலை இழுக்கும் மீன் நிறைந்துள்ள நீர்நிலை என்பது பொருளாகும். இவ்வகையான தூண்டில் முறையில் மீன்பிடித்தல் மருதநிலத்திற்குரியது. இம்முறையைத் தலைமகள்,

*''ஏனல் காவலர் கவணொலி வெரீஇய*
*கானயானை கைவிடு பசுங்கழை*
*மீனெறி தூண்டிலின் னிவக்கும்*
*கானக நாடனொடு ஆண்டு ஒழிந்தன்றே''– (குறுந்.54:2-5)*

என உவமையாகக் கூறுகிறாள். தினைப் புனத்தில் தினையைக் காவல் புரிபவர், விடுகின்ற கவண் ஒலிக்கு அஞ்சிக் காட்டுயானை கைவிட்ட பசிய மூங்கிலானது மீனைக் கவர்ந்து கொண்ட தூண்டிலைப் போல மேலே செல்வதற்கு இடமாகிய கானக நாட்டின் தலைவன் என்னை நீங்கிய பொழுதே, என்னைப் பிரியாத என் நலமும் நீங்கியது என உவமைபடக் கூறுகின்றாள். இம்முறை மருதநில மீன்எறி தூண்டில் முறையைக் குறிஞ்சி நிலம் ஏற்ற பண்பாட்டு ஓரினமாதல் வகையைக் குறிக்கிறது.

**வேலன் வெறியாடல் - ஓரினமாதல்**

சங்க கால வெறியாடல் என்பது காலம் கடந்து அயற்பண்பாட்டுக் கூறுகளை ஏற்றுக் குறிக்கூறுதல், சாமியாடுதல் என்னும் முறையில் வழக்கில் உள்ளது. வெறியாடலின் போது இடப்படும் மறிப்பலியானது இன்று சேவல்,

எருமை என விரிந்து பலியிடுதல் நிகழ்கின்றன. வெறியாடலின் போது வேலனை மகிழ்விக்க செய்யப்பட்ட பலியானது இன்று நாட்டுபுறங்களில் இஷ்ட தெய்வத்தை மகிழ்விக்க நம்பிக்கை அடிப்படையில் பயன்படுத்தப்படுகிறது. வேலன் வழிபாடானது முருகன் வழிபாடாக மாறி, பலியிடுதல் விலக்கப்பட்டு மென்மைப் பூசையாக நடைபெறுகிறது. பலியிடுதல் என்பது தாய் தெய்வங்களுக்கு ( காளி, சூலி, நீலி, மாரி, அம்மன்) நடைபெறுகிறது. பலியிட்டு வணங்குதல் என்பது எல்லா நிலப்பகுதிகளிலும் நடைபெறுகிறது. வேலன் வெறியாடலின் பலியிடுதல் என்னும் சங்கத்தமிழரின் பண்பாட்டுக் கூறு ஆரியக் கலப்பால் பலியிடுதல் நிறுத்தப்பட்டுள்ளது. வேலன் வழிபாட்டை ஆகமவிதிப்படித் தொடர்தல் என்பது.,




**(ஓரினமாதல்)**

தமிழர்களின் கடவுள் வேலன் (முருகன்), வேலினை ஆயுதமாகக் கொண்டிருப்பதால் வேல்முருகன், முருகவேல் என்ற தெய்வ நிலையில் மாற்றம் பெற்று வழிபடுமுறையிலும் மாற்றம் பெற்றது ஓரினமாதலைக் குறிக்கும். தொன்மக் கதைகள் பல புனைந்து வேலன் முருகன் நிலைக்கு மாறியதை சங்கப் பாடல்களில் பதிவுகளைக் காண முடியும். முருகன் சூரபன்மனைக் கொன்றது பற்றிய தொன்மச்செய்தி,

*“ஈர்அணிக்கு ஏற்ற ஒடியாய் படிவத்துச்*
*சூர்கொன்ற செவ்வேலாற் பாடி, பலநாளும்*
*ஆராக் கனை காமம் குன்றத்து நின்னொடு*
*மாரி இறுத்த கடவுளைக் கண்டாயோ.......”– (கலித்.93:25-28)*

*“உரவு நீர் மா கொன்ற*
*வேன்வேலான் குன்றின் மேல் விளையாட்டும் விரும்பார்”*
*- (கலித்.27:15-16)*

என்ற பாடலடிகள் உணர்த்தும். வெற்றி வேலையுடைய முருகன் பகைவரை மாயம் செய்து கொல்லாது, கடலிடத்து மாமரமாகி மறைந்து நின்ற சூரனை வெற்றி வேலால் எறிந்து கொன்றான். அவ்வேலன் திருப்பரங்குன்றத்து மேல் அவனுக்காக நடைபெறும் விளையாட்டையும் காணப் பலர் விரும்புவர் என முருகன் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. வேலன் கடவுள் என்ற பெயரால் குறிக்கப்பெறுகின்றான். உலகின் மிகப் பழமையான நாகரிகம் சிந்து சமவெளி நாகரிகம் என்று கருதப்படுகிறது. இங்கு கிடைக்கப்பெற்ற புதைபொருட்களில் “பானை ஓடு ஒன்றில், தலையில் கொம்பினைக் கீரிடம் போல் வைத்துக் கொண்டு கையில் வேலேந்திய உருவம் காணப்படுகின்றது. அதன் எதிரே ஆட்டினை ஓர் உருவம் வெட்டுவதுபோல் காட்சியளிக்கிறது. மேலும் எழுவர் ஒருவருடன் ஒருவர் கைகோர்த்து ஆடுவது போல் உள்ளது.”(11) இப்பானையில் வரையப்பட்டுள்ள நிகழ்ச்சிகள் சங்ககாலத்திய வெறியாடலோடு ஒப்பிடத்தக்கதாகும். இங்கு சமவெளிப்பகுதியில் நம்பிக்கை சார்ந்த சடங்கு நடைபெற்றுள்ளது. சங்கத் தமிழர்கள் குன்றுப்பகுதிகளில் வேலனை வழிபட்டுள்ளனர். வெறியாடல் நிகழ்த்திய வேலன் காலப்போக்கில் தொன்மமாக மாறி வந்து சங்க கால வழக்கில் இருந்த வேலன் முருகனாக மாற்றம் பெறத் தொடங்கியதை அறிய முடிகிறது. மேலும் முருகன் சிவபெருமானின் மகன் என்ற கருத்து சங்க காலத்தே தோன்றிவிட்டது. இது ஓரினமாதல் என்னும் பண்பாட்டைக் குறிக்கிறது.

**சமண,பௌத்த சமயப் பண்பாட்டுக் கலப்பு**

சங்ககாலத் தமிழ் மக்களிடம் சமண சமயக் கலப்பு ஏற்பட்டிருந்தது. இதனைக் குறுந்தொகையில் வெள்ளிவீதியார் பாடிய பாடலடிகள் மூலம் அறிய இயலும். நிலத்தைத் தோண்டிப் புகுதல், ஆகாயத்தில் சஞ்சரித்தல், கடல் மேல் நடத்தல் முதலிய அருஞ்செயல்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

*“நிலந்தொட்டுப் புகாஅர், வானம் ஏறார்*
*பிறங்கிரு முந்நீர் காலிற் செல்லார்*
*நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்”– (குறுந்.130:1-5)*

என்ற பாடலடிகள், தலைவன் அவ்வாறு செய்யும் இயல்புடையவன் அல்லன் என்று குறிப்பிட்டு இருந்தாலும் சமண சமயக் கருத்துகள் மறைமுகமாகப்

பேசப்படுகின்றன. நிலத்தில் புகுதல், வானில் இயங்குதல், நீரில் நடத்தல் ஆகிய சித்திகள் கைவரப்பெற்றவர் சாரணர் எனச் சமணசமயம் கூறும். இது சமண சமயம் தமிழரிடம் இருந்ததை உணர்த்துகிறது.

“கொல்லாமை அறத்தினை வலியுறுத்திய அளவிற்குப் பௌத்தம் புலால் உண்ணாமையினை வலியுறுத்தவில்லை. தாம் கொல்லாது பெற்ற புலால், மீன் உணங்கல் முதலியவற்றை அகல்பிய மாமிசம் எனப் பௌத்தர் வழங்குவர்”.[16] இக்கருத்துப் பொதிந்த செய்தி கலித்தொகையில் இடம் பெறுகிறது.

*“கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினம்*
*திரையுறப் பொன்றிய புலவுமீன் அல்லதை*
*இரையுயிர் செகுத்துண்ணாத் துறைவன்”– (கலித்.131:31-33)*

எனவரும் பகுதி எண்ணத்தக்கது. நெய்தல் நிலத்துத் தலைவனைத் துறைவன் எனல் இலக்கிய மரபு. அவன் அருள் உள்ளம் கொண்டவன் என்பதை இப்பாடல் புலப்படுத்துகின்றது. உப்பங்கழியில் வீற்றிருக்கும் கண்கவர் வனப்புடைய பறவைத்திரள் திரை மோதுகையினால் இறந்த புலால் நாறும் மீனை இரையாகத் தின்னுமே தவிர, உயிரைக் கொன்று உண்ணாமையினை இப்பாடற்பகுதியில் நல்லந்துவனார் குறித்துள்ளார். இதனை ஊன்றி நோக்கின் அகல்பியம் உண்ணும் பௌத்தப் பழக்கத்தினை இப்பகுதி சுட்டுதல் புலனாகும்.

இதிலிருந்து வடஇந்தியாவில் தோன்றிய சமணமும் பௌத்தமும் அதன் கொள்கைகளும் தென்னிந்தியாவில் சங்க மக்களிடம் பரவலாக இருந்ததை அறிய முடிகிறது. பௌத்தர்கள் தம் மதத்தையும், கொள்கையையும் பரப்புவதற்கு உத்தியாகத் தமிழர்களின் பண்பாட்டுக் கூறுகளை உள்வாங்கிக் கொண்டு தமிழ் இலக்கியங்களைப் படைத்தனர். நேரிடையாக மட்டுமின்றி மறைமுகமாகவும் தம் கொள்கைகளைத் தமிழரிடத்தில் பதிய வைத்தனர். அதற்கு அவர்களின் பண்பாட்டுக் கூறுகளைக் கற்று ஏற்று அதன் வழி, தம் சமயக் கொள்கைகளைப் பரப்பினர். சமண,பௌத்த சமயம் சங்கத் தமிழர்களிடம் வழக்கிலிருந்து பின்பற்றப்பட்டதை சமகலப்பு பண்பாட்டுப்பேறு என வகைப்படுத்த இயலும். சங்கத் தமிழர் தம் நடைமுறை வாழ்க்கையில் தம் நிலம் சார்ந்த வாழ்வியலை மேற்கொண்டு சமயம் சார்ந்த வாழ்வியலை மேற்கொண்டு சமயம் சார்ந்த நிலையில் வடஇந்தியாவில் தோன்றிய சமண,பௌத்தமதக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு வழக்கத்தில் கொண்ட பண்பாட்டு மாற்றம் சமகலப்புப் பண்பாட்டுப்பேறாகும்.

**நெருப்பு – பண்பாட்டுக் கலப்பு**

தமிழர்களின் நாகரிகத்தில் நீரும் நீராடலும் சடங்கியல் தகுதியுடையன. விழாக்காலங்களில் நீரோட்டமுள்ள இடங்களில் தலைவன், தலைவி அல்லது பரத்தையுடன் நீராடியதாகச் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது. தலைவன், தலைவியர் இடையே புனல் தரும் புணர்ச்சி என்ற நிகழ்வை மையம் வைத்து புலவர்கள் பாடல் இயற்றியுள்ளனர். அகநானூறு குறிப்பிடும் திருமணத்தில் சடங்கியல் முறையில் மணமகளைப் பூவும் நெல்லும் இட்ட நீரால் மகப்பேறுடைய பெண்கள் நால்வர் நீராட்டும் வழக்கத்தினை எடுத்துரைக்கிறது. அகநானூறு கூறும் வதுவை அயர்தலாகிய திருமணத்தில் மணமக்கள் தீயினை வலம் வந்ததாகச் சடங்கியல் முறை குறிப்பிடப்படவில்லை. ஆனால் சங்கத்தொகை நூல்களில் பிற்காலத்தவையாகக் கருதப்படும் கலித்தொகையில் திருமணத்தில் தீ இடம் பெற்றதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆரிய நாகரிகத்தில் நெருப்பு, சடங்கியல் தகுதியுடையது. மாலைக் காலத்தில் ஆரியர்களின் வழித்தோன்றலான ஐயர் தீயை வளர்த்து வணங்கியமையை,

*''இம்மாலை*
*ஐயர் அவிர் அழல் எடுப்ப''– (கலித்.130:8-9)*

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இன்று திருமணத்தின் போது மணமக்கள் தீயினை வலம் வருதல் சடங்காக நடைபெறுகிறது. சங்க காலத்தில் தொடங்கிய ஆரியப் பண்பாட்டுக் கூறான நெருப்பினை வழிபடும் மரபு பிற்கால வளர்ச்சியில் தமிழர் பண்பாட்டில் பரிணாம வளர்ச்சி அடைந்து நீங்காத இடம் பெற்றிருப்பதைக் காண முடியும். ஆரியரின் தீ வலம் வருதல் பண்பாட்டினைத் தமிழர்கள் ஏற்றுக்கொண்டு தம் பண்பாட்டில் இரண்டறக் கலந்து நிற்பது ஓரினமாதல் பண்பாடாகும்.

**தொகுப்புரை**

- சங்க இலக்கியப்பனுவல்களில் வேடர் இனம், கானக்குறவர் இனம், கோவலர், ஆயர், இடையர், மென்புல வன்புல உழவர், பரதவர், உமணர், பாணர் முதலிய இனக்குழுவினர் வாழ்க்கை பற்றிய பண்பாட்டுக்கூறுகள் கிடைக்கின்றன.
- வேடர் இனமும் கானக்குறவர் இனமும் வேட்டை என்னும் தொழிலால் ஒன்றுபட்டாலும் தினைப்புனம் காத்தல் என்ற வேளாண்முறையால் கானக்குறவர் இனம் வேறுபடுகிறது.

- முல்லைநிலத்தில் ஆநிரையைப் பேணிக்காத்தல் முதன்மைத் தொழிலாகக் கருதப்படுகிறது. ஆனால் குறிஞ்சி, மருதம் ஆகிய நிலங்களில் உழவுக்குக் கால்நடைகள் உதவுகின்றன. ஆகையால் சிறுபான்மை கால்நடை வளர்ப்பு செய்யப்பட்டுள்ளது.
- நெய்தல் நிலம் உள்நாட்டு வெளிநாட்டு வணிகத் தொடர்புக்கு ஏற்ற நிலமாக விளங்கியது.
- உப்பு வணிகர் நெய்தல் நிலத்தில் உற்பத்திப் பொருளைப் பெற்று ஏனைய நிலங்களுக்குச் சென்று விற்கும் பொருளாதாரப் பரிமாற்றத் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். இந்த உப்பு வணிக உமணர்கள் இனக்குழு மக்களை 'பொருளாதார நடவடிக்கைக் குழு நாடோடிகள்' என்று வழங்குவது சாலச் சிறந்தது.
- பாணர் என்ற இனக்குழுவினர் இசைக்கும் கருவிகள் கொண்டு பல உட்பிரிவாக வாழ்ந்தனர். இவர்கள் பண்ணையும் இசையையும் படைக்கும் தொழிலை ஆதாரமாகக்கொண்டு நில மக்களை அண்டி வாழ்ந்தனர். தம் தொழில் முறையால் அரைகுறை நாடோடிகளாய் வாழ்ந்தனர்.

**சான்றெண் விளக்கம்**

1) பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல் ப :119
2) மேலது, ப.119
3) மேலது, ப.119
4) மேலது, ப.119
5) பக்தவத்சல பாரதி, பாணர் இனவரைவியல், ப.44
6) பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.119
7) மேலது, ப.119
8) மேலது, ப.119
9) மேலது, ப.119
10) சோ.ந.கந்தசாமி, தத்துவ நோக்கில் தமிழிலக்கியம், பக்.78-79
11) சிலம்பு நா.செல்வராசு, தொல் தமிழர் சமயம், ப.282

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


1. கல்யாணசுந்தரையர் — **ஐங்குறுநூறு மூலமும் பழைய உரையும்,**
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை, முதற்பதிப்பு : 1949

2. சாமிநாதயைர் உ.வே. — **குறுந்தொகை,**
கபீர் அச்சுக்கூடத்திற் பதிக்கப்பெற்றது.
நான்காம் பதிப்பு : 1962

3. சுப்பிரமணியம்.பெ முதலியோர் — **பரிபாடல் மூலமும் உரையும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41,பி. சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
பதிப்பாண்டு : 2011

4. செயபால்.இரா — **அகநானூறு (மூலமும் உரையும்),**
(புத்தகம் 1,2)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41,பி. சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
பதிப்பாண்டு : 2011

5. சோமசுந்தரனார்.பொ.வே — **ஐங்குறுநூறு,**
கழக வெளியீடு,
79, பிரகாசம் சாலை,
சென்னை – 600 001
பதிப்பாண்டு : 1978

6 சோமசுந்தரனார்.பொ.வே — **குறுந்தொகை,**
கழக வெளியீடு,
79, பிரகாசம் சாலை,
சென்னை – 600 001
பதிப்பாண்டு : 1978

7 துரைசாமிப்பிள்ளை ஔவை.சு — **நற்றிணை மூலமும் விளக்கவுரையும்,**
அருணா பப்ளிகேசன்ஸ்,
13/1, உஸ்மான் ரோடு,
தியாகராய நகர்,

சென்னை, 600 017,
பதிப்பாண்டு : 1966

8. நாகராசன்.வி **குறுந்தொகை (மூலமும் உரையும்)**
(புத்தகம் 1,2)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41,பி. சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
பதிப்பாண்டு : 2011

9. நாராயணசாமி ஐயர்.அ **நற்றிணை நானூறு,**
கழக வெளியீடு,
(நாராயணசாமி ஐயர் உரையும்
விளக்கமும் பொ.வே.சோமசுந்தரனார்
இலக்கண குறிப்பும் ஆய்வுரையும்)
1/140, பிரகாசம் சாலை,
சென்னை – 600 001,
பதிப்பாண்டு : 1976

10 பாலசுப்பிரமணியன்.கு.வெ. **நற்றிணை (மூலமும் உரையும்),**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41,பி. சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098
பதிப்பாண்டு : 2011

11 இராகவையங்கார்.ரா **குறுந்தொகை விளக்கம்,**
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
பதிப்பாண்டு : 1993

**துணைமைச் சான்றாதாரங்கள்**

12. அப்பாத்துரை.க **தென்னாடு**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை – 600 108.
பதிப்பாண்டு : சனவரி – 2001.

13. அழகம்மை.கே.பி. **சமூக நோக்கில் சங்க மகளிர்,**
மணிவாசகர் பதிப்பகம்,
31,சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை – 600 108,
பதிப்பாண்டு : சனவரி- 2001.

14. அறவாணன்.க.ப. **தமிழ்ச் சமுதாய வரலாறு,**
பச்சை பசேல்,
இரண்டாவது தெரு,
மோகன் நகர்,
பாண்டிச்சேரி – 605 005,
டிசம்பர் 1995.

15. அறவாணன்.க.ப. **தமிழரின் தாயகம்**
ஸ்ரீ கோமதி அச்சகம்,
7,சின்னப்ப ரௌத்தார்,
சென்னை – 600 005.
பதிப்பாண்டு : ஜுன் -1984

16. இராமநாதன் செட்டியார் **சங்க காலத் தமிழர் வாழ்வு,**
அண்ணாமலைப் பல்பலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
பதிப்பாண்டு : பிப்ரவரி 1967.

17. ஏட்கர் தர்ஸ்டன் **தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்,**
(தொகுதி-5)
தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி
அச்சகம்,
தஞ்சாவூர் - 613 005.
பதிப்பாண்டு : முதற்பதிப்பு 2003.

18. கந்தசாமி.சோ.ந. **தத்துவ நோக்கில் தமிழிலக்கியம்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம் - 608 001.
பதிப்பாண்டு : முதற்பதிப்பு, நவம்பர் 2005.

19. காசிநாதன் **தமிழர் தெய்வங்கள்,**
தென்றல் நிலையம்,
12,பி., மேல சன்னதி,
சிதம்பரம் - 600 108
பதிப்பாண்டு : டிசம்பர் 2005.

20. கார்த்திகேசு சிவத்தம்பி **பண்டைத் தமிழ்ச் சமூகம்,**
(வரலாற்றுப் புரிதலை நோக்கி)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098.
பதிப்பாண்டு : முதற்பதிப்பு, ஜுன் 2010.

21. குணசேகரன்.கே.ஏ. **தமிழக மலையின மக்கள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 009.
இரண்டாம் பதிப்பு, செப்டம்பர் - 2010.

22. சுசிவல்லி **தமிழர் திருமணம்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

23. சஷி **இந்தியாவின் ஆயர் சமுதாயம்,**
இன்ஸ்டிடியுட் ஆ.ஃப் சவுத் இண்டியன்
ஸ்டடீஸ், சென்னை – 600 028,
பதிப்பாண்டு :1990.

24. சிவகாமசுந்தரி.சு **சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை – 600 098.
பதிப்பாண்டு : சனவரி-1995.

25. சிவசுப்பிரமணியன்.ஆ **இனவரைவியலும் தமிழ் நாவலும்,**
சங்கச் செவ்வி செம்மொழிப் பெட்டகம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098,
பதிப்பாண்டு : 2010.

26. செல்வராசு.நா **பண்டைத் தமிழர் திருமண வாழ்க்கை**
காவ்யா,
16,இரண்டாம் குறுக்கு வீதி,
டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,
சென்னை – 600 024.
பதிப்பாண்டு : திசம்பர் 2009.

27. செல்வராசு.நா **தொல் தமிழர் சமயம்,**
காவ்யா,
16, 17ஆவது ஈ குறுக்குத்தெரு,
இந்திரா நகர் ஐஐ ஸ்டேஜ்,
பெங்களூர் - 560 0038
பதிப்பாண்டு : முதற்பதிப்பு,
ஆகஸ்டு 2001

28. தனஞ்செயன்.ஆ

**விளிம்புநிலை மக்கள் வழக்காறுகள்,**
(இனவரைவியல் ஆய்வு)
வல்லினம்,
எண்:9........ பிளாக் அரசு குடியிருப்பு,
இலாசுப்பேட்டை, புதுவை – 605 008.
பதிப்பாண்டு : ஜூலை 2006.

29. நாராயணன்.ஆர்.எஸ்

**இயற்கை வேளாண்மையில் வாழ்வியல் தொழில் நுட்பம்,**
தாமரை பப்ளிகே......ன்ஸ் (பி) லிட்
41-பி,சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098.
பதிப்பாண்டு :அக்டோபர் 2006.

30. பக்தவத்சல பாரதி

**பண்பாட்டு மானிடவியல்,**
மணிவாசகப் பதிப்பகம்,
சென்னை
பதிப்பாண்டு : 1990.

31.. பக்தவத்சல பாரதி

**தமிழர் உணவு,**
காலச்சுவடு பப்ளிகே....ன்ஸ் (பி) லிட்,
669, கே.பி. சாலை,
நாகர்கோவில் - 629 001.
பதிப்பாண்டு :டிசம்பர் 2011.

32. பக்தவத்சல பாரதி

**தமிழர் மானிடவியல்,**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்.
பதிப்பாண்டு :2002.

33. பக்தவத்சல பாரதி

**மானிடவியயல் கோட்பாடுகள்,**
அடையாளம்,1205/1,
கருப்பூர் சாலை, புத்தாநத்தம்,
திருச்சி – 621 310.
பதிப்பாண்டு:2011

34. பக்தவத்சல பாரதி

**பாணர் இனவரைவியல் (இந்தியாவில் நாடோடிகளின் அசைவியக்கங்கள்)**
அடையாளம், 1205/1,
கருப்பூர் சாலை, புத்தாநத்தம்,
திருச்சி – 621 310.
பதிப்பாண்டு : 2015.

35. பக்தவத்சல பாரதி

**சமூக மானிடவியல்,**
அடையாளம், 1205/1,

கருப்பூர் சாலை, புத்தாநத்தம்,
திருச்சி – 621 310,
பதிப்பாண்டு : 2015.

36. மணவழகன்.ஆ **சங்க இலக்கியத்தில் மேலாண்மை,**
காவ்யா
16, இரண்டாம் குறுக்குத்தெரு,
டிரஸ்ட்புரம்
கோடம்பாக்கம், சென்னை – 600 024,
பதிப்பாண்டு :டிசம்பர் 2007

37. மாதையன்.பெ. **சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்**
பாவை பப்ளிகே..ன்ஸ், 142, ஜானி ஜான்கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை – 600 015.
பதிப்பாண்டு : டிசம்பர் 2004.

38. ராஜ்கௌதமன் **பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்**
67, பீட்டர்ஸ் சாலை, இராயப்பேட்டை,
சென்னை – 14.
பதிப்பு: முதல் பதிப்ப : நவம்பர் 2006.

39. ஸ்டீபன்.ஞா **தொல்காப்பியமும் இனவரைவியல் கவிதையியலும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்
அம்பத்தூர், சென்னை – 600 098.
பதிப்பாண்டு : 2010.

**ஆங்கில நூல்கள்**

40. Bromley.Yu.V., THEORETICAL ETHNOGRAPHY
General Editorial Board For Foreign Publications Inauka Publishers
Moscow 1984.

41. Singh.K SOCIAL AND CULTURAL ANTHROPOLOGY (capital)
Parakashan Kendra,
Railway crossing,
Sitapur Road,
Lucknow – 226 007.
Reprint –1987.

42. Kanakasabai.V.

THE TAMILS EIGHTEEN HUNDRED YEARS AGO
(The South India Savia Siddhanta works Publishing Society Tinnevelly Ltd.,1/40, Broadway,
Madras –I
Second Edition: sep., 1956.

# இனவரைவியல் நோக்கில்
# சங்க அகத்திணைப் பாடல்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**அ.ஆனந்தி**
பதிவு எண் : 0557

**நெறியாளர்**

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா


**திசம்பர் - 2019**

## முடிவுரை

இந்தியாவின் தெற்குப் பகுதியில் வாழ்ந்த, வாழ்கின்ற இனம் தமிழினம். இவ்வினமக்களின் பண்பாட்டினை விளக்கும் தொன்மையான புதையல் களஞ்சியம் சங்க இலக்கியம். சங்க இலக்கியப் பாடல்கள் பெரும்பான்மை யதார்த்தத்தின் அடிப்படையில் எழுதப்பட்டவை. இதன் வழிக் கிடைக்கும் தரவுகள் இனவரைவியல் தரவுகளாகும்.

சங்க இலக்கியங்கள் உணர்த்தும் தமிழ் நிலம் நிலநடுக்கோட்டிற்கு அருகாமையில் அமைந்த இந்தியாவின் தெற்குப்பகுதியாகும். இந்நிலம் மூன்றுபக்கம் கடலாலும் ஒரு பக்கம் நிலத்தாலும் சூழப்பெற்ற பகுதியாக விளங்குகிறது. லெமூரியா கண்டத்தில் தமிழ் இனம் தோன்றியது என்பது மானிடவியலாளர்களும் தமிழின் மூத்த அறிஞர்களும் கூறும் கருத்து. முதற்சங்கம், இடைச் சங்கம், தென் இந்தியாவின் தென் கோடியில் அமைந்திருந்தன. பின் கடற்கோளால் கொள்ளப்பட்டன. கடைச் சங்கம் தற்போதைய மதுரை என அறிஞர் பெருமக்களால் கருதப்படுகின்றது. இவ்வாறு இருக்க சங்க அகத்திணைப் பாடல்களில் கன்னியாகுமரி பற்றிய பதிவுகள் இப்பெயரிலோ அல்லது வேறொரு பெயரிலோ சங்க அகத்திணைப்பாடல்களில் கிடைக்கப்பெறவில்லை.

- தமிழ்மொழி தோன்றி வளர்ந்த இடம் பொதியமலை என்று கூறப்படுகிறது. இம்மலையில் உற்பத்தியாகி தம் அடிவார சமவெளிப் பகுதிகளை செழிக்க வைக்கும் தாமிரபரணி ‘பொருநை’ என்ற பெயரில் பதிவு செய்யப்பட்டுள்ளது. கடைச்சங்கம் இருந்த இடம் மதுரை. இவ்விடத்தினை ஒட்டிப் பாயும் வையை ஆறு பற்றியசெய்தி இடம்பெற்றுக்கிறது. சோழர் தலைநகரம் உறையூரினை ஒட்டிப் பாயும் காவிரி ஆறு பற்றிய செய்தி இடம்பெற்றிருக்கிறது. இவ்வாறாக சங்க இலக்கியத்தில் அரசர்களின் தலைநகரைச் சுற்றிப் பாய்ந்த ஆறுகளும் ஊர்களும், மலைகளும் சுட்டப்பட்டுள்ளன.
- தக்காண பீடபூமியின் தென் பகுதியில் அமைந்த தமிழக ஆறுகள் கிழக்குமுகமாக ஓடிக் கடலில் கலக்கின்றன.
- சங்க இலக்கியம் செம்மண், வண்டல் மண், கரிசல் மண் என மண்வளம் நிறைந்த பூமியாகத் தமிழகத்தைக் காட்டுகிறது.

- தென்மேற்கு, வடகிழக்குப் பருவ மழையால் (கொண்டல் காற்று, கீழைக்காற்று) மழைவளம் பெற்ற சங்ககாலத் தமிழகத்தில் மலையும் காடும் கடலும் வயலும் சிறப்புற்று இருந்தன. பருவ காலநிலை மாற்றத்தால் ஏற்படும் மழைப் பொழிவற்றபோது ஏற்படும் வறட்சியின் காரணமாகக் காட்சியளிக்கும் வறண்ட நிலத்தை ‘பாலை’ என சங்கத் தமிழர் பகுத்தனர்.
- மேற்குத்தொடர்ச்சி மலைகளிலும், கிழக்குத் தொடர்ச்சிக் குன்றுகளிலும் வாழ்ந்த மக்களை குறிஞ்சி நிலத்தவர் எனப் பாகுபடுத்தினர்.
- இம்மலை அடிவாரங்களில் காணப்பட்ட காடுகளிலும், புல்வெளிப் பரப்புகளிலும் வாழ்ந்த மக்களை ஆயர் என்று அழைத்தனர். இந்நிலம் முல்லைத்திணை என்று அழைக்கப்பட்டது.
- மலையில் தோன்றும் ஆறு காடுகளின் ஊடே ஓடி வந்து, கடந்து வந்து வளமான வண்டல்மண் படுகையை ஏற்படுத்திக் கொடுத்து பயிர்கள் செழித்து வளரச் செய்தது. இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் இந்நிலத்தை நீர்ப்பாசனம் செய்து உழுது வாழ்ந்ததால் உழவர் எனவும், இந்நிலம் மருதநிலம் எனவும் பாகுபடுத்தப்பட்டது.
- ஆறு இறுதியில் கடலில் கலக்கும் நிலம் நெய்தல் என வழங்கினர். இங்கு வாழ்ந்த மக்களைப் பரதவர் எனவும் முறைப்படுத்தினர்.
- சங்ககாலத் தமிழர் நிலத்திற்கேற்ப இயற்கையில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு தம் வாழிடங்களையும் உணவுமுறையையும் உடை, உறையுள் பொழுதுபோக்கு போன்றவற்றையும் அமைத்துக் கொண்டனர். இவர்கள் உணவுமுறை, உடை அணியும் முறையில் நேர்த்தி, உறைவிட அமைப்பு முறை, புழங்குபொருளின் பயன்பாட்டு முறை ஆகியவற்றில் மிகச் சிறந்த நாகரிகப் பண்பாட்டின் பரிணாம வளர்ச்சி அடைந்த உயர்ந்த பண்பாடு கொண்டு விளங்கியது புலனாகிறது.
- இரும்பு, பொன், செம்பு போன்ற உலோகங்களைச் செம்மையுறப் பயன்படுத்தி கலைநுட்பத்துடன் புழங்கு பொருட்களையும், அணிகலன்களையும் செய்து பயன்படுத்தினர். இந்த உலோகங்களை நேர்த்தியுடன் பயன்படுத்திய முறையிலிருந்து இவர்களின் முன்னோர்கள் வாழ்ந்த பண்பாட்டு வளர்ச்சியினை அறிய முடியும்.

- சங்கத்தமிழா் தத்தம் நிலம் சாா்ந்த தொழிலில் ஈடுபட்டதாகச் சங்க அகத்திணைப்பாடல்கள் பேசுகின்றன. சங்கத் தமிழா் அவரவா் செய்த தொழிலினால் வெவ்வேறாக கருதப்பட்டனரேயன்றிப் பிறப்பால் வேறுபடுத்தப்படவில்லை.
- வேடுவா், மறவா், ஆயா், இடையன், வணிகா், பொதுவன், உழவன், பரதவா், உமணா், எயினா், புலைத்தி, காரோடன், வேளாப்பாா்ப்பான், கம்மியா், மருத்துவன், கொல்லன், அகவுநா், இயவா், கோடியா், வயிரியா், ஆசிரியன், முழவன், ஆடுமகள் (விறலி), பாணா், பாகன், புலவா் எனத் தொழில் அடிப்படையில் அமைந்த குலப்பிரிவினை தமிழா்களிடம் காணப்பட்டது.
- பரம்பரை பரம்பரையாக ஒரே தொழிலைச் செய்து வந்தமையால் நாளடைவில் பல தொழிற் பிரிவுகள் உருவாகக் காரணமாயிற்று. அந்தந்தத் தொழிற்பிரிவினரும் தமக்குள்ளே மட்டும் மணஉறவு கொண்டு பிறரோடு மணவுறவைத் தவிா்த்தனர்.
- சங்ககாலத் திருமணம் பெரும்பாலும் நிலப்பரப்பு சாா்ந்த இனக்குழுவிற்குள் அகமணமாக நடைபெற்றுள்ளது. களவுக்கால வாழ்க்கை பற்றிக் குறிப்பிடும் பாடல்களில் காதல் மணம் ஏற்கப்படும் இடங்களில் ' புறமண' முறையையும் சங்க அகத்திணைப் பாடல்கள் எடுத்து இயம்புகின்றன. ஆக சங்கத்தமிழரிடம் 'அகமணம்', 'புறமணம்' ஆக இரண்டு மணமுறைகளும் வழக்கில் இருந்துள்ளன.
- சங்கத் தமிழா் திணை சாா்ந்த சடங்கு மணம், இனக்குழுவிற்குள் திருமணம், களவு மணம், பொருள் கொடுத்து மணத்தல், தோ்வுத்திருமணம், திணைக்கலப்பு மணம், வலிய மணம் ஆகிய திருமண முறைகளை நடைமுறை வழக்கத்தில் கொண்டிருந்துள்ளனா்.
- திருமணத்தின் போது பெண்ணுக்கு வரதட்சணையாகப் பொருள் கொடுத்து மணக்கும் வழக்கம் காணப்பட்டது. இப்பொருளுக்கு பாசிழைவிலை என்னும் பெயர் பதிவாகியுள்ளது. பெண்ணானவள் ஓா் இடத்தில் பிறந்து வளா்ந்து பின் வேறிடத்தில் திருமண உறவில் வாழப்போகும் போது அவளை வளா்த்ததெடுத்த பெற்றோருக்கு பெண்ணிற்கு ஈடாகப் பாசிழை விலை கொடுக்கப்பட்டது. இதன் வழி பெண்ணின் எதிா்கால உழைப்பு,

திருமணம் செய்துகொண்ட ஆணைச் சார்கிறது என்பது தெளிவு. இவ்வழக்கம் சங்ககாலத் தமிழரிடம் நடைமுறையிலிருந்தது. இதன் வழி தந்தைவழிக் குடும்ப முறையைக் கொண்ட சமுதாயமாக சங்கச் சமுதாயம் விளங்கியதை உணர இயலும்.

- மானிடவியல் அறிஞர் மர்டாக்கின் கொள்கைப்படி உறவுமுறையை ஆய்ந்து அறிவதன் மூலம் முதல்நிலை உறவினர்கள் பற்றிய செய்தி மட்டுமே இடம்பெறுகிறது. இதற்குக் காரணம் புலவர்கள் தம் பாடலின் பொருண்மைக்கேற்ப தேவையான மாந்தர்களை மட்டும் பயன்படுத்தியதன் விளைவாகும். தொழில் முறையை நோக்க இம்மக்கள் தொழில் அடிப்படையில் ஒவ்வொரு இனக்குழுவாக வாழ்ந்தனர். இவ்வினக்குழு மக்கள் உறவுநிலையில் பிணைக்கப்பட்டு வாழ்ந்துள்ளனர்.
- மூன்றாம் நிலை உறவான ‘பெயரன்’ பற்றிய பதிவு காணப்படுகின்றது. தந்தையின் பெயரிடும் முறை சங்கச் சமுதாயத்தில் வழக்கில் இருந்து வந்தது. இது தந்தையின் கால்வழிக் குடி மரபுப் பரம்பரையைச் சுட்டுவதாக அமைந்துள்ளது.
- சங்கத் தமிழரின் வழிபாடு சார்ந்த நிலையில் பல்வேறு நம்பிக்கைகள் அவர்களிடம் இருந்தன. மானிடவியல் அறிஞர்கள் கூறும் உயிர்ப்பாற்றல் (மனா என்னும் போங்கா) குலக்குறியம், முன்னோர் வழிபாடு போன்ற நம்பிக்கைகள் சார்ந்த வழிபாட்டு முறைகள் சங்கத்தமிழர்களிடம் காணப்பட்டது.
- அணங்கு, சூர், வரையரமகளிர் போன்ற பெயர்களில் உயிர்ப்பாற்றல் நம்பிக்கை மக்களிடத்தில் காணப்பட்டது.
- இந்த உயிர்ப்பாற்றல்கள் நீர் சுரக்கும் அருவி, சுனை, கடல்துறைப் பரப்பு, முதுமரம் போன்வற்றில் உறைவதாக நம்பினர். முதுமரம் என்பது ஓமை, மராமரம், ஆலமரம், பனைமரம், வேங்கை மரம் ஆகியனவாகும். நீர்த்துறை என்பது மனிதன் உயிர்வாழ இன்றியமையாத பொருள் ஆகையால் சங்கத்தமிழர் அந்நீரில் உயிர்ப்பாற்றல் சக்தி உறைவதாகவும் எண்ணி வணங்கினர்.
- நிழல் தரும் மரங்களிலும் நீண்ட ஆயுள் கொண்ட மரங்களிலும் தெய்வம் உறைவதாகக் கருதினர்.

- நன்னன் என்ற மன்னன் தம் குலக்குறியான மாமரத்தின் பிஞ்சினை ஒரு பெண் உண்டாள் என்பதற்காக அவளுக்குக் கொலைத்தண்டனை கொடுத்தான். இந்நிகழ்வு குலக்குறி வழிபாடு சங்க மக்களிடம் பரவலாக இருந்தமையை உணர்த்தும். ஓர் இனத்தின் குலக்குறியாக விளங்கும் பொருளை உண்ணவோ அழிக்கவோ கூடாது என்பது அவ்வினக்குழுவின் எழுதப்படாத மரபுசார் சட்டம். இம்மரபை மீறுபவருக்குத் தண்டனை அளிக்கப்பட்டது.
- அணங்கு, சூர் போன்றவை மகளிர் மார்பிலும் யானையின் மத்தகத்தில் உறைந்துள்ளதாக நம்பிக்கை கொண்டனர். ஒரு மிகப்பெரிய உருவம் கொண்ட யானையினால் ஏற்படும் தீங்கு அதன் மத்தகத்தில் உறைகின்ற அணங்கினால் ஏற்படுகிறது என நம்பிக்கை கொண்டனர். குழந்தை உயிர் வாழ்வது தாய்ப்பாலினால் தான், என்பதை அறிந்து பெண்களின் மார்பில் நன்மைத் தரும் உயிர்ப்பாற்றல் உறைவதாகக் கருதினர்.
- குலக்குறி வழிபாட்டு முறை சங்க காலத்தில் காணப்பட்டது.
- முன்னோர் வழிபாடான நடுகல் வழிபாடு சங்கத்தமிழரிடம் பரவலாகக் காணப்பட்டது. நடுகற்கள் காவல் தெய்வங்களாகப் பரிணாம வளர்ச்சி அடைந்து இன்று வணங்கப்படுகின்றன.
- சங்கத்தமிழர் இறந்தவர்களைப் புதைத்தல் முறையில் அடக்கம் செய்தனர். உடல்களை எரிக்கும் பழக்கம் காணப்படவில்லை.
- நெய்தல் நிலம் பொருளாதார மேம்பாட்டிற்கு உறுதுணையாகவும், பிற நிலத்து மக்கள் வணிகத் தொடர்பு கொள்வதற்கு ஏற்ற நிலமாகவும் விளங்கியது.

**மேலாய்வுக் களங்கள்**

1. இனவரைவியல் நோக்கில் சங்க கால மென்புல வன்புல உழவர்
2. இனவரைவியல் நோக்கில் உமணரினத்தின் வாழ்வியல்
3. இனவரைவியல் நோக்கில் சங்ககால நில மக்களின் திருமணம்
4. சங்க கால வேடவர் இனமும் கானக்குறவர் இனமும் (இனவரைவு)
5. இனவரைவில் நோக்கில் சங்க கால நிலப்பகுதி பெயர்கள் (அன்றும் இன்றும் ஓர் ஒப்பீடு)